


"எஸ். எஸ். எல். ஸி. பரீட்சைக் கேள்விப் பேப்பர் ஒன்றரையணு! ஒன்றரையணு!"



"அடேய்! அது வேண்டாம், அங்கே விடையுடன் விற்கிறார்களாம்! வா, வாங்குவோம்!"
— கல்கி, மார்ச் 30, 1947

# கல்கி பொருளடக்கம்

பம, மார்கழி 17 — ஜனவரி 1



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

அமெரிக்காவிலிருந்து ஐரோப்பா வழியாகத் தாய்நாடு திரும்புகையில், ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியும், அவரது கணவர் ஸ்ரீ சதாசிவமும் டிசம்பர் மாதம் 3ந் தேதியன்று ரோமாபுரியிலுள்ள வாடிகன் சாம்ராஜ்யத்தில் போப் பாண்டவரைத் தரிசித்தனர். அவர்களை முன்பு சென்னை லயோலா கல்லூரியின் முதல்வராக இருந்த டிஸௌஸா பாதிரி அவர்கள் போப்பாண்டவருக்கு அறிமுகம் செய்தார். எம். எஸ்ஸின் இசைப் புகழைப் பற்றியும் அவரது ஐ. நா. விஜயம் பற்றியும், ஸ்ரீ சதாசிவம் அவர்களைத் தலைவராகக் கொண்டியங்கும் 'கல்கி' 'ஸ்வராஜ்யா' பற்றியும் போப்பாண்டவருக்குத் தெரிவிக்கப்பட்டது நமக்குப் பெருமையன்றோ? எம். எஸ். பாடிப் பதிவு செய்துள்ள மீரா பஜன்கள் அடங்கிய நீண்ட நேர இசைத்தட்டை விதுஷியும் ஸ்ரீ சதாசிவமும் போப்பாண்டவருக்குச் சமர்ப்பித்தனர். இதையே இங்கு படத்தில் காண்கிறோம். விடை கொடுக்கும் போது போப்பாண்டவர், 'உங்கள் மக்களுக்காகவும், உங்கள் நாட்டுக்காகவும் பிரார்த்தனை செய்கிறேன்' என்று கூறியருளினார். இது நமக்கு ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் சம்பாதித்து வந்துள்ள விலைமதிப்பிட வொண்ணாத அந்நியச் செலாவணியாகும்.





தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் [illegible] இதழ் 22



# காங்கிரஸ் பிளவுகள்

காங்கிரஸ் பகாசுரனுக்கு அஜீர்ணக் கோளாறு ஏற்பட்டு விட்டது. அந்தக் கோளாற்றின் விளைவாகவே நாடு முழுவதிலும் காங்கிரஸ் கட்சிக்குள் எதிர்ப்புக்களும் பிளவுகளும் ஏற்பட்டிருக்கின்றன. காங்கிரஸ்காரர்கள் பலர் ராஜிநாமா கொடுத்திருக்கிறார்கள்.

ஆனால் பொருளாதாரம், நிர்வாகம், பாதுகாப்பு போன்ற கொள்கைகளில் காங்கிரஸிலிருந்து மாறுபட்டதால் இவர்கள் வெளியேறவில்லை. ஆட்சியிலுள்ள காங்கிரஸ், தங்களுக்குப் பதவிகளை விநியோகிக்கவில்லை என்பதுதான் அதற்குள் பிளவு ஏற்படுவதற்குக் காரணம்.

காங்கிரஸில் பிளவுகள் ஏற்பட்டு, ஸ்தாபனம் கலகலக்கத் தொடங்கிய பின்னும் 'எங்கள் கட்சி ஆட்சிக்கு வந்தால்தான் நிருவாகம் ஸ்திரமாக இருக்கும்' என்று காங்கிரஸ் தலைவர்கள் கூறுகிறார்கள். காங்கிரஸைக் குறித்து உயர்வாக எதுவும் சொல்லி வாக்காளர்களை நம்ப வைக்க முடியாது என்பதால், 'ஸ்திரத் தன்மை' ஒன்றையே ஆட்சிக்குப் பெரிய தகுதியாகக் காட்டுகிறார்கள்.

எது எப்படியாயினும் காங்கிரஸ் 'மானேஜ்மென்ட்' மீண்டும் வெற்றி பெற்றுவிடும் என்று மனோராஜ்யம் செய்கிறார் ஸ்ரீ டி. டி. கே. ஒருவேளை அவர் நினைப்பது போலவே நடந்தாலும் நடக்கலாம். அதாவது, பண பலமும் அதிகார பலமும் ஒன்று சேர்ந்து ஜனநாயகத்தைக் கொலை செய்து விடலாம். 'இப்படிப்பட்ட நிலைமையில் நான் காங்கிரஸின் தலைமையில் இருந்தால், அவமானத்தில் உயிரையே விட்டு விடுவேன்' என்கிறார் ராஜாஜி. இப்படிச் சொல்வது கடுமையாகத் தோன்றும். ஆனால் இன்று காந்திஜி இருந்தாலும் இதைத்தான் சொல்லுவார். காந்திஜி முன்பே போய்விட்டார். வேறு யாரும் காங்கிரஸின் மனத்தில் இந்த நிலைமையைப் பதிவு செய்ய இன்றில்லை. ராஜாஜி சொல்கிறார். ஆனால் அவரது உணர்ச்சிகள் காங்கிரஸாருக்குப் பொருட்டில்லை.

'ஸ்திரத் தன்மை, ஸ்திரத் தன்மை' என்ற ஒன்றே காங்கிரஸின் கோஷமாகிவிட்டது. உதட்டளவில் மட்டும் காங்கிரஸ்காரர்கள் காந்திஜியின் சந்நிதானத்தில் வழிபாடு செய்கிறார்கள். முன் காலத்தில் கொள்ளைக்காரர்களும் காளியை வழிபட்டு வந்தனர். காளி மாதாவுக்கு அனைவரும் ஒன்றுதான். நாம் தீயவராக நினைப்பவர்களுக்கும் அவள் அருள் புரிந்திருக்கக்கூடும். ஆனால் காந்திஜியோ தர்மப் பொறுப்பு வாய்ந்த நடைமுறை உலகைச் சேர்ந்தவர். இன்று அதிகாரத்தை வசமாக்கிக் கொண்டு ஏழைகளின் கஷ்டத்தைப் பாராமல், டம்பாச்சாரித் திட்டங்களைப் போட்டுத் தேசத்தை 'இன்ஸால்வென்ட்' ஆக்கியுள்ள காங்கிரஸுக்கு அவர் ஆசி கூற மாட்டார்.

கொடிய பகாசுரனும்கூட யாராலும் அசைக்க முடியாதவன்தான். 'பகாசுரனைக் கொன்றால், அவனைப் போல் ஸ்திரமான சர்வாதிகாரத்தை வேறு யாரும் ஏற்படுத்த முடியாது' என்று கூட வாதம் செய்யலாம். ஆனால் இது போன்ற வாதங்களைப் பீமசேனன் ஏற்றுக் கொள்ளவில்லை. இரண்டாவது யோசனை செய்யாமலே அவன் பகாசுரனைக் கொன்றான். ஆனால் அதற்குப்பின் அவனது சர்வாதிகாரத்தைத் தான் எடுத்துக் கொள்ளவில்லை.

காங்கிரஸ் கட்சியிடம் தேச சுதந்திரம் என்ற நோக்கம் போய் அதன் இடத்தை அதிகாரப் பசி பிடித்துக் கொண்டவுடன் சீரழிவு தொடங்கி விட்டது. இது காரணமாக ஏற்பட்டுள்ள உட்பிளவுகள், கிளர்ச்சிகள் ஆகியவற்றையே இப்போது செய்திப் பத்திரிகைகளைப் பிரித்தவுடன் நிறையப் பார்க்கிறோம். வியாதி வந்த உடலில் பிளவை தோன்றுவது போல், காங்கிரஸில் பிளவுகள் தோன்றியுள்ளன. இன்னமும் காங்கிரஸார் 'ஸ்திரத்

தன்மை' பற்றிப் பேசி, அது காரணமாகவே வோட்டுக் கேட்பது கேலிக்கூத்து!

ஆங்காங்கு காங்கிரஸிலிருந்து பிரிந்த புரட்சியாளர்கள் யாவரும் 'ஜன காங்கிரஸ்' என்ற பெயரில் ஒன்று கூடி, இந்திய நாடு முழுவதன் கவனத்தையும் பெற முயல்கிறார்கள். 'காங்கிரஸை எதிர்த்து வெளியே வந்தவர்கள்' என்ற ஒன்றுதான் இவர்கள் அனைவரையும் பிணைக்கும் பொதுக்கயிறு. 'ஏன் காங்கிரஸை விட்டார்கள்?' என்று பார்த்தால் ஒவ்வொரு பிரதேசத்துக்குமிடையே வித்தியாசம் இருக்கும். காங்கிரஸ் கொள்கையிலிருந்து. ஜன காங்கிரஸ் மாறுபடாவிடில் பலன் ஏற்படாது. பொருளாதாரத்திலும், வெளிநாட்டுக் கொள்கையிலும் காங்கிரஸ் இழைத்த தவறுகளை நன்கு எடுத்துக்காட்டி,. மாற்று வழி கூறக்கூடிய கட்சியே காங்கிரஸுக்கு மாற்றாகத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய கட்சி. இவ்விதம் கொள்கையில் மாறுபட்ட சுதந்திரக் கட்சி 1967 தேர்தலில் ஆட்சிப் பொறுப்புப் பெறும் அளவுக்கு ஸ்தானங்கள் பெறாவிட்டாலும் பாதகமில்லை; கட்சிச் சார்பற்ற தேசிய சர்க்கார் ஒன்றின் அங்கமாக அது அமைந்தாலே போதும். பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்டது சுதந்திரக் கட்சி. பகுத்தறிவு எந்தச் சூழ்நிலையிலும் வெற்றிபெறும்.

ஒருகால் ஜனகாங்கிரஸ் உண்மையிலேயே காந்திஜியின் வழியில் செல்வதற்கு விரும்பக்கூடும். அவ்வாறாயின் ஜனகாங்கிரஸைச் சேர்ந்தவர்கள், தாங்கள் இவ்வளவு நாட்களாக ஆதரித்து வந்த சர்க்கார் பிரவேசங்களும் கன்ட்ரோல்களும் மக்களின் உண்மையான நலனுக்குப் புறம்பானவை என்று உணர்ந்து சுதந்திரப் பொருளாதாரத்துக்காகவும், தனி மனித சுதந்திரத்துக்காகவும், சர்க்காரின் அதிகாரத்தைக் குறைப்பதற்கும் முயற்சி செய்யவேண்டும். இதுவே தங்கள் கொள்கை என்பதை அவர்கள் உறுதியாக எடுத்துச் சொல்ல வேண்டும். இக்கொள்கையை மேற்கொண்டபின், அவர்கள் சுதந்திரக் கட்சியில் சேர்ந்துவிடுவதே யுக்தம். ஆயினும் ஏதேனும் காரணங்களுக்காக அவர்களும் தனியானதொரு 'காங்கிர'ஸாகவே இருக்க விரும்பினாலும் பரவாயில்லை. அவர்களுடன் சுதந்திரக் கட்சியினர் ஒத்துழைத்து, தேசத்தை திவாலா நிலையிலிருந்து மீட்கலாம்.

# சங்கீதமும் சம்பிரதாயமும்

இசைவிழாக்களுக்குத் தலைமை தாங்கும் வித்துவான்கள் தங்களுடைய நீண்ட காலத் தொழில் அநுபவத்தில் கண்டறிந்த உண்மைகளையும் உயர்ந்த கருத்துக்களையும் இளம் வித்துவான்களுக்குப் பயன்படுமாறு ஆண்டுதோறும் எடுதுச் சொல்வது வழக்கம். இத்தலைமை உரைகளில் பெரும்பாலும், ''சம்பிரதாயத்தைப் பின்பற்ற வேண்டும்'', ''கர்நாடக சங்கீதத்தின் தூய்மை கெடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்'', ''குருகுல வாசம் செய்து இவ்வித்தையை அப்பியசிக்க வேண்டும்'' என்றெல்லாம் அடிக்கடி சொல்லப்படும். சொல்லுபவர்கள் உண்மையாகத்தான் சொல்லுகின்றனர். அப்படித்தான் அவர்கள் எல்லாருமே சங்கீதத்தை அப்பியசித்துப் பெருமையடைந்தவர்கள். ஆனால் கேட்பவர்களுக்கு இவற்றின் உண்மை முழுதும் புரிகிறதா என்று சொல்வதற்கில்லை. இப்போதுள்ள கால நிலைமையில், மாறுபட்ட சூழ்நிலைகளில் பழைய சம்பிரதாய குருகுல முறைகளை அப்படியே பின்பற்ற முடியுமா; எங்கேயாவது அவ்வாறு பின்பற்றப்படுகிறதா என்று ஐயமெழுவதும் சகஜம். எனவே இந்த அறிவுரைகளுக்குக் கொடுக்க வேண்டிய முழு மதிப்பு அவற்றுக்குத் தரப்படாமல் போவதுண்டு. இந்த நிலையில், சம்பிரதாயம் என்றால் என்ன, எந்தெந்த அம்சங்கள் போற்றப்பட வேண்டியவை, உயர் சங்கீதம் எப்படி இருக்க வேண்டும் என்று விளக்கம் கொடுத்துக் கேட்போர் மனத்தில் பதிய வைப்பது அவசியம். இந்த வகையில் இவ்வாண்டுத் தலைமை உரைகள் மிகவும் சிறப்புற்று விளங்குகின்றன என்பதற்காகச் சந்தோஷப்பட வேண்டும். இசை விழாத் தலைவர்களைப் பாராட்ட வேண்டும்.

வித்வத் சபை விழாத் தலைவர் வித்வான் பாலக்காடு மணி அய்யரவர்கள் மணி மணியாகத் தம் கருத்துக்களை எடுத்துச் சொன்னார். வாத்தியத்தை வாய்ப்பாட்டைப் போல வாசிக்கப் பழகிக்கொள்ள வேண்டுமே தவிர, வாய்ப்பாட்டை வாத்திய இசையைப் போலப் பாடிப் பழகக் கூடாது என்றுஅவர் கூறியதிலேதான் எவ்வளவு ஆழ்ந்த கருத்துப் பொதிந்துள்ளது! வாய்ப்பாட்டுத்தான் இசைக்கு ஆதாரம் என்பதை அடிக்கடி நினைவு படுத்திக் கொள்வதுடன், இதைப் பூரணமாக்க எந்த முயற்சியும் மேற்கொள்ளத் தவறலாகாது. இதை மணி அய்யர் சொல்லும் விதமே அழகு. ஒவ்வொரு ராகத்திலும் உருப்படிகளிலும் புராதனமாகவும் அநுபவ பூர்வமாகவும் தாய்ச் சங்கதிகள் என்று இருப்பதுடன் ஒரு பிரத்தியேக உருவமும் உண்டு. இவைகளை மாற்றவே கூடாது. கற்பனை என்று சொல்லிக் கொண்டு ஏதாவது புதுச் சங்கதிகளைச் சேர்ப்பதனால், 'அநாவசியம்' கலக்கிறது என்கிறார் மணி அய்யர்.

ஏது அவசியம், ஏது அநாவசியம் என்று எப்படி நிர்ணயிப்பது? அதையும் அவரே சொல்லுகிறார். ரஸக் குறைவு ஏற்படாமல், மூன்று மணி நேரம் பாடினாலும் கேட்பவர்களுக்கு அலுப்பு சலிப்பு ஏற்படாது. கவலையை மறந்து சந்தோஷத்தை அளிக்கக்கூடிய மகாவித்துவான்கள், அவசியமான சங்கதிகளை மட்டுமே பொறுக்கி உருப்படிகளில் அமைத்துக் கையாண்டிருக்கின்றனர். அவற்றைக் கையாண்டாலே போதும் என்கிறார். அநாவசியம் எங்கே புகுந்து கொள்

றது என்பதைத் தெரிந்து கொள்ளுவதே வித்துவான்களின் சிறப்பு. ''அப்னாக'க்கு ஆசைப்பட்டு, நெற்பயிரைப் பூச்சிக்கு இரையாக்காமல் பாதுகாக்க வேண்டும்' என்று சொல்லியிருப்பதைப் பாராட்ட வேண்டும்.

இதை மேலும் விளக்கி வைப்பது போல இருந்தது வித்வத் சபையினர் சென்ற 21ம் தேதி கொண்டாடிய வீணை தனம்மாள் நூற்றாண்டு தினம். அச் சமயம் வீணை தனம்மாளின் இசையின் இனிமையைப் பற்றிப் பேசிய பலர், ''தனம்மாளின் வாசிப்பில் சங்கதிகள் மிகவும் குறைவாகவே இருக்கும்; ஆனால் வாசித்த அந்தச் சில சங்கதிகளுக்கு மேல் இருந்தால் ரசக் குறைவு ஏற்பட்டுத்தான் இருக்கும். சுகபாவத்தையளிக்கும் சங்கதிகளை அவர் அவ்வளவு நிர்ணயப்படுத்தி வைத்திருந்தார்'' என்று பாராட்டினார்கள். 'அநாவசிய'த்துக்கு இது ஒரு விளக்கம்.

மற்றொரு விளக்கம் மிகவும் விரிவாகக் கிடைத்திருக்கிறது. வித்துவான் முசிரி சுப்பிரமணிய அய்யர் அவர்கள் பைன் ஆர்ட்ஸ் சொஸைடியின் தலைமையில் நிகழ்த்திய உரையில், சம்பிரதாயசுத்தமான முறையில் மட்டுமே கிருதிகளைப் பாட வேண்டும், அப்படிப் பாடுபவர்களே முதிர்ந்த கௌரவமுள்ள வித்துவானாக மதிக்கப்படுவர், இவற்றை மாற்றினால் ரசக் குறைவுதான் ஏற்படும் என்கிறார். தியாகராஜகிருதிகளில் உமையாள்புரம் பாடம் பரம்பரை சுத்தமானது என்பது வித்துவான் முசிரியின் கருத்து. மற்றவர் வேறுவகவும் கருதக்கூடும். ஆனால் எந்தப் பாடாந்தரமானாலும் ஒவ்வொரு கிருதியின் சாகித்தியத்தையும் ராகத்தைப் போலவே முக்கியமாக மதித்து, அக்ஷரசுத்தமாக அர்த்த பாவத்துடன் உச்சரிப்பதுடன், சங்கதிகளை அந்தந்த கிருதிகளின் பாவ உணர்ச்சிகளுக்கு ஒத்தவாறு ராகரக்தி வெளிப்படும் வண்ணம் பாட வேண்டும் என்று கூறி சம்பிரதாயத்துக்கு ஒரு விளக்கம் கொடுத்திருக்கிறார் முசிரி. அந்தந்த பாவங்கள் பூரணமாக வெளிப்படும்படி அந்தந்தக் கிருதிகளையும் அவற்றின் சங்கதிகளையும் மாக, தேசலின்றி, ஸ்வரசுத்தமாகப் பாடினால் சுகானுபவம் ஏற்படும் என்பது முசிரியின் கருத்து. ஒரு கிருதியின் பாவத்துக்கு மாறான உணர்ச்சியை எழுப்பும் விதத்தில் அந்தக் கிருதியைப் பாடக் கூடாது; அந்த அளவுக்கு மட்டுமே சங்கதிகள் இருக்க வேண்டும் என்பதில் எவ்வளவு முதிர்ந்த அநுபவம் புதைந்திருக்கிறது!

இக்கருத்துக்களுக்கு இணைந்த மற்றொரு கருத்தினை தமிழ் இசைச் சங்க விழாத் தலைவி ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் அவர்கள் சொன்னார். பக்தியுடன் உருகாத பாட்டை உயர்ந்த பாட்டாக மதிப்பதற்கில்லை என்ற தமது கருத்தைத் தாம் அநுபவமூலம் கண்டுள்ளதாக அவர் தெரிவித்துக் கொண்டார். பக்தி அல்லது பாவத்துக்கு அநுசரணையாகக் கிருதிகளைப் பாடினாலே போதும் என்பது தானே இதிலும் தொக்கி நிற்கிறது.

வெவ்வேறு அரங்கங்களில் வெவ்வேறு இசைவாணர்கள் இசை வளர்ச்சிக்கு இன்றியமையாத அம்சங்களைப் பற்றிப் பேசியிருந்தாலும் எல்லாவற்றிலுமே கருத்து ஒற்றுமை நிலவுவது குறிப்பிடத்தக்கது.

# என்ன சேதி?

- ☐ சிறிய நாடு வழி காட்டுகிறது
- ☐ நோய்க்குக் காரணம்
- ☐ ஆட்டுத்தோல் போர்த்த புலி
- ☐ அரசியல் தலையீடு
- ☐ பட்நாய்க்கின் கியாதி

ஐரோப்பாவிலுள்ள ஒரு சிறிய நாடு கிரீஸ். அங்கே பதினைந்து மாதங்களாகப் பதவி வகித்து வந்தது மெஜாரிட்டி பலமில்லாத ஓர் அரசியல் கட்சி மந்திரி சபை. சமீபத்தில் அது ராஜிநாமாச் செய்து விட்டது. அதற்குப் பின் பதவி ஏற்ற மந்திரி சபை அரசியல் கட்சிக் கலப்பே துளிக்கூட இல்லாத ஒரு சபை. அரசியல் கட்சியைச் சார்ந்தவர்களில்லாவிட்டால் போகட்டும். கிரேக்க நாட்டுப் பார்லிமெண்டிலாவது அவர்கள் அங்கத்தினர்களா என்றால் அதுவும் இல்லை. அனைவரும் பார்லிமெண்டுக்குப் புறம்பே உள்ளவர்கள். புது மந்திரிக் குழுவின் தலைவர் ஒரு பாங்குத் தலைவர். நாடு சிறியது என்றாலும் நல்ல திறமையுள்ள அரசாங்கத்துக்கு கிரீஸ் காட்டும் வழியை நம் நாட்டுக்கு ஒரு பாடமாகவே கொள்ளலாம். திறமையுடன் நிர்வாகம் நடத்த சர்வகட்சி மந்திரி சபை, அல்லது நிர்வாக நிபுணர்கள் கொண்ட மந்திரி சபை நமது நாட்டில் ஏற்படுவது நல்லது என்று தலைவர் ராஜாஜி சொல்லி வருகிறார். இக் கருத்தைச் செயலில் நடத்திக் காட்டியிருக்கிறது கிரீஸ் நாடு.

* * *

மாணவர் உலகில் காணப்படும் அராஜகத்துக்கும் கட்டுப்பாட்டின்மைக்கும் காரணம் ஆட்சியாளர்கள்தான் என்பதை சென்னை பல்கலைக் கழக உப அத்தியட்சகர் ஏ. எல். முதலியாரவர்கள் மிக வன்மையாக எடுத்துக் காட்டியிருக்கிறார். தில்லி சர்வகலாசாலையின் பட்டமளிப்புப் பெருவிழாவில் பிரசங்கம் புரிந்த முதலியாரவர்கள், இன்றைய மாணவர்கள் கட்டுப்பாடுள்ள நல்ல, யோக்கியமான சூழ்நிலையில் வாழ்வதாகக் கூறுவதற்

இல்லை என்று சொல்லி, 'மன்னவன் எப்படி மன்னுயிர் அப்படி!' என்ற முதுமொழிக்கு ஏற்ப ஆட்சியாளர்கள் எப்படியிருக்கிறார்களோ, அப்படி மாணவர்களும் இயங்கி வருகிறார்கள் என்பதை எடுத்துக் கூறியிருக்கிறார்.

சிறந்த வைத்தியர் நோயின் மூலகாரணத்தைக் கண்டுபிடித்து சிகிச்சை செய்வார். நோயின் காரணமாக வெளியே காணப்படும் மாறுதல்களுக்கும், உபாதைகளுக்கும் சிகிச்சை செய்வது தாற்காலிகமான பலன் தான் அளிக்கும். நோய் தீராது. அதே போல், டாக்டர் முதலியார் அவர்கள் மாணவ சமுதாயத்திடையே காணப்படும் நோய்க்கு மூலகாரணத்தை மிக நன்றாக விண்டுரைத்து விட்டார். இதற்கு வைத்தியம் செய்யும் பொறுப்பு, இந்த ஜனநாயக யுகத்தில் மக்களிடம் இருக்கிறது. தேர்தல் நெருங்கி வருகிறது. எதிர்கால பாரத சமுதாயத்தினரிடை அக்கறையுள்ளவர்கள், தத்தம் பெண்கள், பிள்ளைகளின் கல்லூரி வாழ்வில் சிரத்தை யுள்ளவர்கள் நடந்து கொள்ளவேண்டிய முறையை இப்போதுமா கவனித்துக் கொள்ளாமல் போவார்கள்

ஃ ஃ ஃ

மகாராஷ்டிர ராஜ்யத்தின் முதல் மந்திரி திரு நாயக் அவர்கள் எப்பொழுது சுதந்திரக் கட்சியில் சேர்ந்தார் என்ற சந்தேகம் அவருடைய சமீபத்திய பேச்சைக் கேட்டவர்களுக்கு எழுந்திருக்கக் கூடும். "நாம் சுபிட்சம் அடைய வேண்டுமெனில், போட்டி மனப்பான்மையை வளர்க்க வேண்டும்—ஏகபோக்கியத்தை அல்ல!" என்று அவர் கூறியிருக்கிறார். உணவு உற்பத்தி பெருகாததற்குக் காரணம் திட்டக் கமிஷனும் தவறான திட்டங்களுமே என்றும் கூறியிருக்கிறார். இப்படியாகச் சுதந்திரக் கட்சிக் கொள்கைகளைத் தேர்தல் நெருங்கி வரும் சமயத்திலே பல காங்கிரஸ்காரர்கள் ஆதரித்துப் பேசத் தலைப்பட்டிருக்கிறார்கள். தமிழகத் தொழில் துறை மந்திரி வெங்கடராமனும் இதேபோலப் பேசியிருக்கிறார். இதற்குக் காரணம் என்ன என்பதைச் சற்று யோசிக்க வேண்டும். இப்பொழுது பழைய பல்லவியாகிய சோஷலிஸம், தேச உடைமையாக்குதல் போன்றவற்றையே பாடினால் மக்கள் ரசிக்க மாட்டார்கள். அதற்காக மக்களுக்குப் பிடித்து விட்ட சுதந்திரக் கட்சிக் கொள்கையையே பாடி ஆதரவு பெறலாமென எண்ணுகிறார்களோ? இவர்களே வெற்றி பெற்றுப் பதவிக்கு வந்தால் தேர்தல் காலத்தில் பேசிய கருத்துக்களைக் கடைப்பிடிப்பார்களா என்றும் கூற முடியாது.

இன்று சுதந்திரக் கட்சிக் கொள்கைகளையும் கருத்துக்களையும் காங்கிரஸ் மேடையிலிருந்து பேசும் காங்கிரஸ்காரர்களை முழுதும் நம்பி விடலாகாது. அவர்களுக்கு ஆதரவு தருவதைவிட இவர்களே இப்போது கட்டிக் காட்டும் சிறந்த கொள்கையைக் கடைப்பிடிக்கும் சுதந்திரக் கட்சி அபேட்சகருக்கே ஆதரவு அளிக்கவேண்டும்!

ஃ ஃ ஃ

உத்தரப் பிரதேசத்தில் வறட்சியால் அவதிப்படும் கோரக்பூர் ஜில்லாவில் மாணவர்கள் 6500 கிணறுகளை வெட்டிக் கொடுத்து உதவியிருக்கிறார்கள். கல்லூரி மாணவர்கள் ஏதாகிலும் உடலுழைப்புள்ள பணி செய்ய வேண்டும் என்று கல்வித் துறையில் அனுபவமிக்க நிபுணர்கள் கூறி வந்திருக்கிறார்கள். காந்தி மகானும் முன்பே இதனை அடிக்கடி சொல்லி வந்திருக்கிறார். இத்துறையில் உ.பி. முதல் மந்திரி ஸ்ரீமதி சுசேதா கிருபளானி உருப்படியான வேலை செய்திருப்பதைப் பிரதம மந்திரி ஸ்ரீமதி இந்திரா பாராட்டியிருக்கிறார். உ. பி.யின் வழியைப் பின்பற்றி மற்ற ராஜ்யங்களும் நடக்குமாயின் நலம். மாணவர்கள் நாட்டு மக்களுக்கு உருப்படியான நன்மை செய்த திருப்தியும் மகிழ்ச்சியும் கொள்வார்கள் அல்லவா?

ஃ ஃ ஃ

'போலீஸார் சட்டத்தையும் ஒழுங்கையும் கையாள்வதில்கூட அரசியல் நோக்கங்கள் புகுத்தப்பட்டிருப்பதால் நிர்வாகத்தின் ஆணிவேரிலேயே சீரழிவு ஏற்பட்டிருக்கிறது' என்று ஸ்ரீ எச். வி. ஆர். அய்யங்கார் அவர்கள் கூறுகிறார். பல வருஷங்களாக எதிர்க்கட்சிகள் கூறி வந்த குற்றச்சாட்டையே அவர் சரியான முறையில் அழுத்திச் சொல்லியிருக்கிறார்.

போலீஸ் கட்டுப்பாடு என்ற ஒரு விஷயத்தில் மட்டுமல்ல; இனமும் பரவி வருகிற நிர்வாக யந்திரத்தின் எல்லாப் பிரிவுகளிலுமே அரசியல் தலையீடு மகத்தான ஊறு விளைவித்திருக்கிறது. நல்ல நிர்வாகம் என்பது அடிமட்டத்துக்குப் போய் விட்டது. இதன் மிக மோசமான விளைவு என்னவெனில், எந்தக் கட்சி அரசியல் அதிகாரத்துக்கு வந்தாலும் நிருவாக முறைகளில் தலையிடுவது ஒரு சம்பிரதாயமாகிவிடக் கூடும். இம்மாதிரி நடக்க விடாமல் எல்லா நன்மக்களும் உறுதியாக எதிர்ப்புக் கொடுக்க வேண்டும்.

ஃ ஃ ஃ

காங்கிரஸின் 'மேலிடம்' என்கிற குழு ஸ்ரீ பிஜு பட்நாயக் அவர்களிடமே ஒரிஸ்ஸாத் தேர்தலில் பூரண அதிகாரம் தந்து, அவருக்கு ஒரு சட்ட சபை டிக்கெட்டும் கொடுத்திருக்கிறது. பிஜு பட்நாய்க் அவர்களின் 'கியாதி' எப்பேர்ப்பட்டது என்று அனைவருக்கும் தெரியும். எனினும், பட்நாய்க் அவர்களிடம் ஒரிஸ்ஸாவில் பூரணப் பொறுப்பு தந்திருப்பது வாக்காளர் மீது எத்தகைய விளைவை உண்டாக்கும் என்பதைக் காங்கிரஸ் கட்சியில் யாரும் எண்ணிப் பார்த்ததாகத் தெரியவில்லை. அரசியல் விவேகத்தின் வழியில் காங்கிரஸ் செல்லவில்லை; விதியின் வழியிலேயே செல்கிறது எனத் தோன்றுகிறது.




விதைக்குள் மரம் இருக்கிறது. மரம் தருகிற பழத்தினுள் மீண்டும் விதை தோன்றுகிறது. பழத்திற்குள் உள்ள வித்தின் மூலம், மரமானது தன் காரண வஸ்துவையும் விளைவையும் பிணைக்கிறது. மனித மனம் என்பதும் சிருஷ்டிப் பரிணாமத்தில் பழுத்த ஒரு பழம். அதற்குள் உலகங்களுக்கெல்லாம் காரண வஸ்துவுடன் பிணைகிற ஒரு வித்து உள்ளது. மனித மனம் ஆதி காரணத்துடன் தொடர்பு கொள்வது அகஸ்மாத்தாக நிகழுவதல்ல. பழத்துக்குள் மரத்தின் காரணமான வித்து இருப்பது அகஸ்மாத்தான விஷயம் என்று சொல்வோமா? அது போல் தான் இதுவும்.

பிரபஞ்சத்தின் விந்தையைப் புரிந்து கொள்ள நமக்கு ஆற்றல் போதாததால் அதை மறுக்க முடியாது. மனித மனத்துக்குள்ளேயே அந்த விந்தையின் ரகசியம் உள்ளது.

* * *

ஸ்ரீ டி. டி. கே. அவர்கள் மக்கள் சபைத் தேர்தலுக்கு நிற்க விரும்பவில்லை என்றும், அதைக் காட்டிலும் அந்நிய நாடுகளில் பதவி வகிப்பதையே அவர் விரும்புவார் என்றும் சொல்லப்படுகிறது. இந்தியாவிலுள்ள ஏழைகளின் கண்களுக்குப் படாமல், வெளி நாட்டில் சௌகரியமாக வாழ்வதை யார்தான் விரும்ப மாட்டார்? காங்கிரஸ் ஆட்சியில், முன்னாள் சமஸ்தான மன்னர்கள் யாவருமே வெளிநாட்டுத் தூதர்களாகி விடுவார்கள் எனத் தோன்றுகிறது. நேர்மையுள்ள அரசியலில், இவர்கள் இந்தியாவிலேயே இருப்பின் எதிர்க்கட்சிகளில் இடம் பெறுவார்கள். அதைத் தடுக்க ஒரு லஞ்சத் திட்டமாக வெளிநாட்டுக்கு அனுப்பிவிடுகிறார்கள். மாஜி மன்னர்களிலிருந்து, மாஜி நிதிமந்திரிகளுக்கும் இத்திட்டத்தை விஸ்தரிக்கலாம். உள்ளூற சர்வாதிகார ஆட்சியை ஆதரிக்காமல், ஜனநாயக சக்தியைப் போற்றி வரும் முன்னாள் முக்கியஸ்தர் அனைவரையும் இத்திட்டத்தின் கீழ்க் கொண்டு வரலாம்.

* * *

"உண்ணாவிரதத்துக்கும் கிளர்ச்சிக்கும் சர்க்கார் அடிபணியாது" என்று பத்திரிகைத் தலைப்புக்கள் காண்கின்றன. ஆனால் வாஸ்தவத்தில் சர்க்கார் வேறென்ன செய்கிறது? முறையாக விஷயத்தை எடுத்துச் சொல்வதை —, உண்ணாவிரதங்களும், கிளர்ச்சிகளும் உடனே சர்க்கார் கவனத்தைப் பெறுவதனால்தான், இவை இன்று பெருகிக் கொண்டேயிருக்கின்றன. ஒரேயடியாக அடிபணிந்து விடுவதைவிட, சிறிது சிறிதாக விட்டுக் கொடுப்பதே கேவலமானதும் உண்டு.

* * *

சிரமம் என்றும் துர்ப்பாக்கியம் என்றும் நாம் எண்ணுவதிலிருந்தே நிரந்தரமான நன்மைக்கு வழி பிறப்பதுண்டு. ஆண்டவன் தந்த விவேகத்தை நாம் பயன்படுத்திக் கொண்டால் அதன் ரசவாதத்தினால் கெட்ட சூழ்நிலையிலும் நன்மை பிறக்கும். கட்சிச் சார்பற்ற அரசாங்கம் ஏற்பட வேண்டும் என்று ஸ்ரீ ஜயப்பிரகாச நாராயணர் சொல்லியிருப்பது இப்படிப்பட்டதே. அவர் வழி காட்டியிருக்கிறார். ஆனால் வழிகாட்டியதுடன் அவர் நின்றுவிடக் கூடாது. கட்சிச் சார்பற்ற அரசாங்கம் ஏற்படுமாயின் அதற்குத் தாமே தலைமை தாங்க முன்வர வேண்டும்; இதற்காக அவர் தேர்தலில் நிற்க வேண்டும். சொந்த ஆசையை நிறைவேற்றிக் கொள்ளத் திட்டமிட்டே தாம் இப்படி ஒரு யோசனை சொன்னதாக யாரேனும் எண்ணுவாரோ என்று அவர் அஞ்சக்கூடாது. தாம் உரிய முறையில் கூறிய யோசனையைக் காரியத்தில் உருவாக்குவதிலும் தமக்குள்ள பங்கை நிறைவேற்ற அவர் தயங்கலாகாது. அவர் யோசனை கூறியதோடு பின்தங்கி விட்டால், நீர் வார்க்காத செடிபோல் அவரது திட்டம் வாடிவிடும்.

* * *

கொள்கைகளின் அடிப்படையில் எதிர்க்கட்சிகள் ஒன்று சேராமல் தேர்தலுக்காகக் கூடிச் செயலாற்றுவது சரியல்ல என்று தமிழக கவர்னர் ஸர்தார் உஜ்ஜல்சிங் அவர்கள் கூறியிருக்கிறார். பல நல்ல விஷயங்களைக் கூறிவரும் அவர் இப்படிக் கூறாதிருந்திருக்கலாம். பல முனைப் போட்டியில் காங்கிரஸுக்குச் சாதகமாக வோட்டுக்கள் சிதறாமல் இருக்க வேண்டும் என்றே எதிர்க்கட்சிகள் ஒன்றுக்கொன்று விட்டுக் கொடுத்துச் செயலாற்றுகின்றன. இதைக் காங்கிரஸ் தலைவர் யாரேனும் கண்டித்திருப்பினும் ஓரளவு நியாயம் எனலாம். ஆனால் கவர்னர் இப்படிப் பேசுவது அழகல்ல; சட்டப்படி சரியுமல்ல.

கொள்கையின் அடிப்படையில் எதிர்க்கட்சிகள் ஒன்று சேரவில்லை என்பதற்கும் விடை உண்டு. சுதந்திரத்துக்கு முன்பே காங்கிரஸ் மந்திரி சபைகள் அமைந்ததைக் கருத்தில் கொண்டோமாயின், முப்பதாண்டுகளாக அந்த ஒரு கட்சியே இடைவிடாமல் ஆட்சி அதிகாரம் வகித்து வருகிறது. சுதந்திரத்துக்குப் பிறகும் இருபது ஆண்டுகளாகத் தொடர்ந்து பதவியில் உள்ளது. இதைத் தோல்வியுறச் செய்வது ஜனநாயகத்துக்கு உதவும் கொள்கை. இந்தக் கொள்கையே எதிர்க் கட்சிகள் கூடிச் செயல் புரிவதற்குப் போதுமானது.

# வெண்ணிலவுப் பெண்ணரசி

சோமு



## அத்தியாயம் 14

## வீர வேள்வி

"கடம்பன் வந்து விட்டான்!" என்று குரல் கேட்டதோ இல்லையோ, அந்த விநாடியே மரக்கலத்தின் உள்ளறையிலே மின்னல் பாய்ந்தது போல ஓர் அதிர்ச்சி ஏற்பட்டது. "கடம்பன், கடம்பன், கடம்பன்!" என்று அந்தக் கூக்குரலின் எதிரொலி அறையெங்கும் சென்று விம்மியது.

நீலவல்லியைவிட அதிகமாகப் பதறினாள் மணிமாலை. காரணம், நீலவல்லிக்குக் கொடுத்த உறுதிமொழியை வேலவன் கோதை நிறைவேற்றுவிட்டால் என்ன நேரும் என்பது மணிமாலைக்குத் தெரியும்!

"வேலவரே! உங்களுடைய உறுதிமொழியை நீங்கள் கடலிலே மிதக்க விட்டு விட்டீர்களானால், என்ன நேரும் தெரியுமா? மறு விநாடியே நீலவல்லியின் உடம்பு கடலிலே மிதக்கும்! ஆம்; அவள் உங்களுக்கு இடையூறு வரும்



வரை உடலில் உயிரை வைத்துக்கொண்டிருக்க மாட்டாள்!''

நீலவல்லி எதுவும் பேசவில்லை. ''குதியுங்கள்!'' ''குதியுங்கள்!'' என்று சொல்லுபவளைப் போல இரண்டு கைகளையும் மேலும் கீழுமாக அசைத்துக் கொண்டே வேலவன்கோதையின் அருகில் நின்று உடம்பு பதறினாள்!

''கடம்பனின் மரக்கலம் கிழக்குப் பக்கத்தில் வருகிறது. நீங்கள் மேற்குப் பக்கமாகக் குதித்துத் தண்ணீரில் மூழ்கிச் சென்று நெடுந் தொலை போன பிறகுதான் தலையைத் தண்ணீருக்கு வெளியே நீட்ட வேண்டும். தெரிந்ததா! அவசரம்! கடம்பனும் கூட்டாளிகளும் இந்த மரக்கலத்தை முற்றிலும் நெருங்குவதற்கு முன்பு இதைச் செய்யுங்கள். உங்களுக்காக இல்லையென்றாலும் நீலவல்லிக்காகச் செய்யுங்கள்!''

இவ்வாறு பதறிக் கொண்டே மரக்கலத்தின் உள்ளறையிலே இருந்த புகுவாயிலின் மரக் குடுமியைத் திருகி நெம்பினாள் மணிமாலை!

அவ்வளவுதான்! மறு விநாடி வேலவன்கோதை கடலிலே முக்குளித்தான்!

ஃ ஃ ஃ

நீலவல்லி கண்களை விழித்துப் பார்த்தாள். என்ன வியப்பு! கட்டிலிலே படுத்திருந்தாள் அவள்! அவளுக்கு அருகில் மணிமாலை கவலையோடு உட்கார்ந்திருந்தாள்.

''நாம் எங்கே இருக்கிறோம்!'' என்று கேட்டுக் கொண்டே சுற்று முற்றும் பார்த்தாள் நீலவல்லி! என்ன விந்தை! அதே பழைய கன்னிமாடம்! அதே பழைய அறை! பழைய மணிமாலை! வேறு யாருமில்லை அங்கே!

''நாம் இங்கே எப்போது வந்தோம்!'' என்று நீலவல்லி கேட்டாள், இமைகளை மூடி மூடித் திறந்தவாறு!

''இன்று காலையில் வந்தோம்!''

''அவர் தப்பித்துச் சென்று விட்டார் அல்லவா?'' என்று பதறிக் கொண்டே கேட்டாள் நீலவல்லி.

''ஆமாம். அவர் மரக்கலத்தில் இல்லை என்பதே வெள்ளைத் தீவின் கரையை அடைந்த பிறகுதான் கடம்ப மன்னருக்குத் தெரியும்!''

''மணிமாலை! நீ சொல்வது எனக்குப் புரியவில்லையே!''

''நீலவல்லி! வேலவன் கோதை கடலிலே குதித்து மறைந்த சற்று நேரத்துக்கெல்லாம் வெள்ளைத் தீவு வீரர்கள் மட்டுமே அறைக்குள் வந்தார்கள். மன்னர் வரவில்லை!''

''ஆம்; அது எனக்கு நினைவிருக்கிறது. ஏதோ துணிப் பந்தத்திலிருந்து கந்தகப் புகை போல ஒரு புகை வந்து கொண்டிருந்தது. அந்தப் புகை என் நாசியில் நுழைந்ததும் எனக்குத் தலை சுற்றியது. அது வரை நினைவிருக்கிறது. பிறகு என்ன நடந்தது?''

''பிறகு எல்லாம் அமைதியாக நடந்தது. மன்னர் நம்முடைய மரக்கலத்தின் உள்ளேயே வரவில்லை! வீரர்களை மட்டுமே உள்ளே அனுப்பினர். வடக்கே நோக்கிச் செல்ல வேண்டிய நமது மரக்கலம் திரும்பித் தெற்கே நோக்கிச் சென்றது. நம்முடைய புன்னாட்டு வீரர்கள் இருந்த இடத்தில் வெள்ளைத் தீவு வீரர்கள் இருந்து மரக்கலத்தைச் செலுத்தினார்கள் இந்தத் தீவை நோக்கி!''

''மன்னர் ?''

''அவர் நம் அருகிலேயே வரவில்லை. நம்முடைய மரக்கலம் கரையை அடைந்த பிறகும்கூட அவர் நமக்கு அருகிலேயே வரவில்லை. நம்மை இந்தக் கன்னி மாடத்திலே கொண்டு சேர்க்கும்படி வீரர்களுக்குக் கட்டளை இட்டிருக்க வேண்டும் அவர்! கட்டளையை மட்டும் கொடுத்துவிட்டு அவர் அரச இருக்கைக்குச் சென்று விட்டார்!''

''அப்படியா?'' என்று பெரும் வியப்போடு கேட்டாள் நீலவல்லி.

''ஆமாம். அவருக்கு நம் மரக்கலம் கரையை அடைந்தபிறகுதான் வேலவன் கோதை தப்பிச் சென்று விட்டார் என்பது தெரிந்திருக்க வேண்டும். அப்படித்தான் நான் ஊகிக்கிறேன். மன்னர் என்னிடம் வந்து ஏதாவது கேட்டிருந்தாலோ, அல்லது நம்முடைய மரக்கலத்தினுள் புகுந்து வீரரிடம் ஏதாவது பேசி இருந்தாலோ, எனக்கு மற்றச் செய்திகள் புரிந்திருக்கும். அவர் அப்படி எதுவும் செய்யவில்லை. ஆனால் ஒன்று மட்டும் புரிந்தது. மயக்கமுற்றுக் கீழே நீ சாய்ந்த போது நான் உன்னை அப்படியே கைத் தாங்கலாகத் தாங்கி மரக்கலத்தின் தளத்திலே ஒருச்சாய்த்தேன். அப்போது நம்முடைய வெள்ளைத் தீவு வீரர்களிலே ஒரு தலைவன் மற்றவர்களிடம் சொன்ன மொழிகள் மட்டும் எனக்கு விந்தையாக இருந்தன. 'இளவரசியை மிகவும் பணிவோடு கண்ணும் கருத்துமாகப் பார்த்துக் கொள்ளும்படி அரசரின் கட்டளை!' என்று அந்த வீரர் தலைவன் தனது கூட்டாளிகளுக்குச் சொன்னான்!''

இவ்வாறு சொல்லி விட்டுக் கண் கலங்கி நின்றாள் மணிமாலை.

நீலவல்லி கட்டிலிலிருந்து எழுந்தாள்.

''மணிமாலை! எனக்கு மயக்கம் வரும்படி எதற்காக அப்படி ஒரு புகைக் காற்றை நாசியிலே செலுத்தினார்கள்? பிறகு எதற்காக என்னை இத்தனை கண்ணும் கருத்துமாக இங்கே மறுபடியும் கொண்டு வந்தார்கள்? மன்னர் ஏன் என்னிடமோ அல்லது உன்னிடமோ ஒன்றுமே பேசவில்லை?''

இந்தக் கேள்விகளுக்கு மணிமாலையினால் மறுமொழி சொல்ல முடியவில்லை. உண்மையில் அவளுக்குமே அது ஒரு புதிராகத்தான் இருந்தது!

அன்று முழுதும் கடம்ப மன்னன் கன்னிமாடத்தின் பக்கமே வரவில்லை. மறு நாளும் இப்படியே கழிந்தது. மணிமாலை நம்பிக்கையுள்ள சில பணியாளர்களைக் கூப்பிட்டு அரசனைப் பற்றிக் கேட்டாள். வழக்கத்தைவிட வேகமாக எழுவதும் வேகமாக உணவு அருந்துவதுமாக அரசன் ஏதோ ஒரு விரைவிலும் வேகத்திலும் ஆழ்ந்திருப்பதாக அவர்கள் கூறினார்கள். அதோடு யாரிடமும் எதுவும் பேசுவதில்லை என்றும், பணியாளர்களுக்கு இடுகிற கட்டளைகளைத் தவிர வேறு எந்த வகையான சொற்களும் மன்னரிடமிருந்து வெளி வருவதில்லை என்றும் அவர்கள் சொன்னார்கள்.

மூன்றும் நாள் காலை சற்றும் எதிர்பாராதவிதமாகக் கன்னிமாடத்துக்கு வந்தான் கடம்ப மன்னன். அப்போது அந்தி நேரம். பதறிக் கொண்டே கன்னி மாடத்தின் கதவைத் திறந்த நீலவல்லி கதவின் அருகிலே நின்றாள், நிலைகொள்ளாமல்!

''சேடிப் பெண்கள் எல்லாம் பணிகளை ஒழுங்காகச் செய்கிறார்களா என்று தெரிந்து போகத்தான் வந்தேன் வல்லி. வேறொன்றுமில்லை. கடல் தீவுகளைப் பார்ப்பதற்காக உன்னை அழைத்துப் போயிருந்த இடத்தில், குளிர் காற்று உன் உடம்புக்குப் பிடிக்காமல் மயக்கமுற்ற நிலையில் இங்கே அழைத்து வந்து விட்டதாகச் சுற்றத்தார்களிடம் சொல்லியிருக்கிறேன். யாராவது மாறுபாட்டுடன் உன்னிடம் நடந்து கொண்டால் தண்டனை விதிக்கும் உரிமை வெள்ளைத் தீவின் இளவரசிக்கு உண்டு. அதையும் நினைவுபடுத்த வேண்டும் என்று நினைத்தேன். உனக்கும் அதைச் சொல்ல வேண்டும், மற்றச் சேடியர்களையும் பணியாளர்களையும் வேலை வாங்க வேண்டிய மணிமாலைக்கும் அதைச் சொல்ல வேண்டும். அதற்காகவே நான் இப்போது இங்கே வந்தேன்!''

இவ்வாறு கூறிவிட்டு எந்த விரைவில் வந்தானே, அதே விரைவில் அந்த இடத்திலிருந்து அகன்றான் வானமண்டலக் கடம்பன் !

அவன் சென்ற மறுவிநாடி மணிமாலை நீலவல்லியிடம் கேட்டாள்:

"வல்லி ! இந்தப் புதிரைத்தான் நீ என்னிடம் கேட்டாய்! இப்போது மன்னரே வந்து அந்தப் புதிரை மேலும் அதிகப்படுத்தி விட்டுச் சென்றிருக்கிறார். நாம் இருவரும் இந்த வியப்பை எப்படி என்று புரிந்துகொள்வது ! இந்தக் கன்னிமாடத்திலிருந்து யாருக்கும் எவருக்கும் தெரியாமல் இரவோடு இரவாகத் தப்பிச் சென்றவர்கள் நாம்! நாம் தப்பிச் சென்றதைக் கண்டுபிடித்து நம்மை வந்து கைப்பற்றியவருக்கு, வேலவன்கோதையைப் பற்றியும் நிச்சயமாகத் தெரிந்துதான் இருக்கும். அவர் மரக்கலத்திலிருந்து தப்பியோடி விட்டார் என்பது குறித்து இவருக்கு அதிர்ச்சி ஏற்படாமலா இருக்கும்? உறுதியாக ஏற்பட்டேயிருக்கும். நாம் தப்பி ஓடியது பற்றி எத்தனையோ மனத் துயரமும் சீற்றமும் ஏற்பட்டுத்தான் இருக்கும். எரிமலை குமுறுவதுபோல் அல்லவா குமுற வேண்டும் அவருடைய இதயம்! மற்ற எல்லாரிடமும் எவ்வளவு வேகங்களோடு நடந்து கொள்கிறார்! ஆனால் அப்படிப்பட்டவர் எதுவும் நடக்காதது போல், யாரும் எத்தகைய தவறும் இழைக்காதது போல் எப்பொழுதும் எப்படி நம்மிடம் நடந்து கொள்வாரோ அப்படி அல்லவா நம்மிடம் வந்தார், பேசினார் ! அது மட்டுமா ! நாம் தவறு இழைத்து விட்டதால் அரசர் நம்மைக் கொடுமைப்படுத்துவார் என்று மற்றவர்கள் எதிர்பார்த்து அது காரணமாக அவர்கள் நம்மிடம் மாறுதலாக நடந்துகொண்டு விடக் கூடாது என்பதில்தான் மன்னருக்கு எத்தனை கவலை! எவ்வளவு ஆர்வம் ! இதை யெல்லாம் வல்லி, என்னாலும் புரிந்து கொள்ள முடியவில்லை; உனக்கு விளக்கவும் முடியவில்லை. உண்மையில் அவர் நம்மைக் கடிந்து கொள்ளக் கூடாதா, நம்மிடம் சீற்றம் கொண்டு நம்மைத் தண்டிக்கக் கூடாதா என்றுகூட எனக்கு ஒரொரு வேளைகளில் ஓர் எண்ணம் தோன்றுகிறது. இந்த மோனமும், இந்த அமைதியும் என்னை என்னவோ செய்









கின்றன. கொல்லாமல் கொல்லுகின்றன. ஆனால் அதேசமயம்—''

மணிமாலே குரலை இருமிக் கொண்டாள். தயங்கித் தயங்கி ஏதோ சொற்களை மனத்துக்குள்ளேயே ஒத்திகை பார்த்துக் கொண்டாள்!

''வல்லி, வானமண்டலக் கடம்பருடைய இந்த மோனத்தின் பொருள், இந்த அமைதியின் காரணம் இரண்டே இரண்டு விதமாகத்தான் இருக்க முடியும். ஒன்று நம்மை ஏதோ காரணத்தால், ஏதோ ஒரு அடிப்படையிலே மன்னித்து விட்டார் என்று இருக்க வேண்டும். அப்படியும் இருக்கலாம். அல்லது, அல்லது, சொல்லுவதற்கே அச்சமாக இருக்கிறது —''

''அல்லது சொற்களால் கூற முடியாத அளவுக்கு அத்தனை சீற்றம், சொல் கடந்த ஒரு வெகுளியாக இருக்கலாமோ அது?''

''வல்லி, அரக்க இயல்பு கொண்ட மனிதர்களைப் புரிந்து கொள்வது எளி இல்லை! அவர்கள் அரக்கர்களைப் போலவே நடந்து கொள்ளும் வரை நாம் அஞ்ச வேண்டியதோ அல்லது தயங்க வேண்டியதோ இல்லை. ஆனால் அவர்கள் தேவர்களைப் போல, தெய்வப் பிறவிகளைப் போல, உணர்ச்சிகளையெல்லாம் கடந்த மிகை மானுடப் பிறவிகளைப் போல நடந்து கொள்ள ஆரம்பித்தால், அந்த இடத்திலேதான் நமக்கு அச்சம் அதிகமாகிறது. தயக்கமும் பதற்றமும் ஏற்படுகின்றன! என் வரையில் வான மண்டலக் கடம்பனுடைய இந்த அமைதி, இந்த மோனம், இந்தக் கலக்கமற்ற நிலை, எனக்குக் கலக்கம் தருகிறது. என் அமைதியைக் கெடுக்கிறது. நான் அஞ்சுகிறேன்!''

இப்படிச் சொல்லிவிட்டு மணிமாலே பேச்சை நிறுத்தினளோ இல்லையோ, எங்கிருந்தோ ஒரு பேயலறல் கேட்டது. மறுவினாடி கதவுகளைப் 'படார்' என்று மூடுகிற ஓசை வந்தது. அலறல் அதன் பிறகு கேட்கவில்லை.

யார் அப்படி அலறியது? அந்தப் பேயலறல் எங்கிருந்து வந்தது என்று மணிமாலேயும் நீலவல்லியும் திகைத்துப் போய் ஒருவரை ஒருவர் பார்ப்பதற்குள், 'குடு குடு' என்று ஒரு சேடி கன்னி மாடத்தின் கதவுகளைத் திறந்து கொண்டு ஓடோடியும் வந்தாள்.

''பூசை விழுகிறது அம்மா! நல்ல பூசை! அத்தனையும் வேண்டும்!'' என்

## மனம் கவரும் மார்கழி

'கார்த்திகை'க்குப் பின் மழையில்லை. கர்ணனுக்குப் பின் கொடையாளியில்லை' என்ற முதுமொழிப்படி கார்த்திகைக்குப் பிறகு பூமி குளிர்ந்துவிடும். காடு கழனிகள் பசுமை போர்த்திப் பாங்குடன் விளங்கும். மார்கழி பிறக்கும், மகிழ்ச்சியும் உதயமாகும். 'மாதங்களில் மார்கழியாய் நானிருப்பேன்' என்ற கண்ணனின் கீதா வாக்குப்படி இந்த மார்கழிக்கு மகத்தானதொரு மகத்துவம் உண்டு. நடுக்கும் குளிரானாலும், வெள்ளி முளைக்கும் போதே விருட்டென்று எழுந்து விடுவார்கள் வீட்டிலுள்ளோர். வளையல் குலுங்க வனிதையர் வீட்டு வாசல்களைப் பசுஞ்சாணத்தினல் பச்சென்று மெழுகிப் பெருக்கிப் பார்ப்பவர் வியக்கும் வண்ணம் பாங்காகக் கோலமிடும் அந்தக் காட்சிக்கு ஈடேது? இணையேது? '' 'ஜியாமெட்டரி பாக்ஸ்' வைத்துக்கொண்டு இந்தக் கோலங்களை வரைகிறதில்லே, தெரியுமில்லே?'' என்று ரசிகமணி டி. கே. சி. ஒருமுறை கூறிக் கணித ஆசிரியர் ஒருவரைத் திகைக்க வைத்தார்! உண்மைதான், அழகாக, விதம் விதமாக, லாகவமாகப் புள்ளிகளை வளைவு கோடுகளாலும் நேர்க் கோடுகளாலும் இணைக்கும் கைத்திறனை என்னவென்று சொல்வது?

இருள் பிரியுமுன்னே திருப்புகழ் பஜனைக் கோஷ்டிகள் வீதி வலம் கிளம்பி விடும். வீட்டிலோ குழந்தைகளும் பெண்டிரும், திருப்பாவை, திருவெம்பாவை பாடிப் பரவச நிலையில் படத்தின் முன்னே நிற்பார்கள். சோம்பலை விரட்டி, சுறுசுறுப்பை ஊட்டி, கற்பனையையும், கடவுள் பக்தியையும் வளர்க்கும் மார்கழி, மாதங்களில் தனிப் பெருமை பெற்று விளங்குகிறது.



புகைப்படங்கள்: பி. வி. சூரியநாராயணன்

# இதோ—

## வலியை
## சிக்கனச் செலவில்
## விரைவாக நீக்கவல்ல மாத்திரை

தலை நோவு, தொண்டைப் புண், ஜலதோஷம்
ஆகியவற்றைக் குணப்படுத்தக் கூடியது.

# நிவாரின்





**2 மாத்திரைகள் கொண்ட ஒரு பாக்கெட் விலை 10 பைசாதான்**

உங்கள் அருகாமையிலுள்ள வியாபாரியிடமிருந்து
50 பாக்கெட்டுகள் கொண்ட ஒரு அட்டைப் பெட்டியை வாங்குங்கள்.

nivārin
nivārin
nivārin

FOR RELIEF FROM HEADACHE,
SORE-THROAT AND COLDS

*தயாரிப்பவர்கள்:*
டேப்லெட்ஸ்
பிரைவேட் லிமிடெட்
எக்ஸ்பிரஸ் எஸ்டேட்ஸ்,
மதராஸ்-2

*சோல் செல்லிங்
ஏஜெண்டுகள்:*
லிட்டில்ஸ்
ஓரியண்டல் பாம்
& பார்மக்யூடிகல்ஸ் லிமிடெட்
எக்ஸ்பிரஸ் எஸ்டேட்ஸ், மதராஸ்-2

EP.74.1

றன் அந்தச் சேடி உள்ளே ஓடி வந்து மணிமாலையிடம் !

''யாருக்குப் பூசை விழுகிறது? யாரை யார் அடிக்கிறார்கள்? உளறாமல் சரியாகச் சொல்!'' என்று அதட்டினாள் நீலவல்லி.

''அந்தக் காவலாளிக்குத்தான் அம்மா! சாட்டையைக் கொண்டு பளீர் பளீர் என்று அரசரே நாலைந்து சாத்துச் சாத்தினார். பிறகு அந்தச் சாட்டையை வீரன் ஒருவனிடம் கொடுத்து அடியைத் தொடர்ந்து கொடுக்கும்படி கட்டளை இட்டிருக்கிறார்!''

நீலவல்லி பதறிப்போய்க் கேட்டாள்:

''எந்தக் காவலாளி?''

''அவன்தான் அம்மா! அந்த யவனப் பேய்! இரவுகளிலே கையில் விளக்கை ஏந்திக் கொண்டே வந்து சாளரத்து வழியாக எட்டிப் பார்ப்பானே! அந்த மரியாதை இல்லாத பயல்! பேய்போல ஒரு சத்தம் போடுவானே. ஊளை இடுவானே. அதே யவனப் பயல்தான். அரசர் கொடுத்த நாலைந்து அடியும் ஒவ்வொன்றும் நாலாயிரம் அடிக்குச் சமானம்! இல்லையென்றால் அந்தப் பயல் இப்படி அலறுவானா ! கல்லுளி மங்கனையிற்றே அவன்! அந்தக் கல்லுளி மங்கனே அடி தாங்காமல் அலற வேண்டும் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! நம்முடைய அரசரே தம் கையாலேயே—''

''என்ன காரணமாம் ?'' என்று குறுக்கே கேட்டாள் மணிமாலை.

''காரணம் தெரியவில்லை. அவன் அலறுவது வெளியே கேட்கக் கூடாது என்று இப்போது கதவுகளைச் சாத்தி விட்டார்கள்.''

இவ்வாறு சொல்லிவிட்டு அங்கிருந்து நகருவதற்கு ஆயத்தமானாள் அந்தப் பணிப் பெண்.

''சரி. நீ புறப்படு. வேடிக்கை பார்ப்பதிலேதான் உனக்கு எத்தனை மகிழ்ச்சியடி! சரி சரி. போ! மேற்கொண்டு ஏதாவது தெரிந்தால் வந்து சொல்! என்ன?'' என்று பக்குவமாகப் பேசி அந்தப் பணிப் பெண்ணை அங்கிருந்து வெளியே அனுப்பிவிட்டுக் கன்னிமாடத்தின் கதவுகளைச் சாத்தினாள் மணிமாலை.

''வல்லி! நாம் பேசிக் கொண்ட பேச்சு என்ன? வெளியே நடப்பது என்ன ? பார்த்தாயா ? வெள்ளைத் தீவின் இளவரசி என்ற நிலை கலையாமல் உன்னை நடத்தவும், உன்னோடு பேசவும் கருத்தாக இருக்கிற அரசர், வெளியே போய் அந்த யவனக் காவலாளியைச் சித்திரவதை செய்கிறார்! இன்னும் அந்த யவனப் பகடி என்ன ஆனானோ! நம்மோடு மரக்கலத்தில் வந்த மற்றப் புன்னாட்டு வீரர்கள் எல்லாம் என்ன பாடுபடுகிறார்களோ! நினைத்துப் பார்க்கவே வேதனையாக இருக்கிறது!''

நீலவல்லி விம்மினாள். நெஞ்சைக் கைகளால் பொத்தினாள். மறுவினாடி கூச்சலிட்டு அழுது விட்டாள்.

''நான் ஒருத்தி எதற்காகப் பிறந்தேன். இப்படி ஒரு பிறவி இந்த மண்ணுலகிலே நான் எடுத்து வந்து எத்தனை பேருடைய பழிபாவங்களைச் சுமக்கிறேன். இது எதற்கு? முன் பிறவியில் அத்தனை கொடிய தீவினை செய்திருக்கிறேனா நான்! ஊழ்வினை ஏன் என்னை இப்படிப் பிழிந்தெடுக்கிறது! ஐயோ! அவர் கடலிலே குதித்த போது நானும் கடலிலே குதித்து இந்த உயிரை விட்டிருக்கக் கூடாதா ?''

கதறி அழுத நீலவல்லியை ஆவி சேர்த்து அணைத்து மஞ்சத்திலே படுக்க வைத்தாள் மணிமாலை. முந்தானையினால் முகத்தைத் துடைத்தாள்.

''வல்லி! அந்த மரக்கலத்திலிருந்து கடலிலே எதற்காகக் குதித்தார் வேலவன்கோதை. அதை மறந்துவிட்டாயா? உன்னை உன்னுடைய தற்கொலையிலிருந்து காப்பாற்ற வேண்டும் என்பதற்காகத்தானே அவர் தம்மைக் காப்பாற்றிக் கொண்டார். அதை மறந்து விட்டாயா? இனி உன் வாழ்வைப் பற்றியோ, மரணத்தைப் பற்றியோ பேசுவதற்கு உனக்கு உரிமை ஏது? அப்படிப் பேச உன்னை அனுமதிக்கவும் எனக்கு உரிமை இல்லை. மறுபடியும் வேலவன்கோதையை நாம் சந்தித்து உன்னை அவரிடம் ஒப்படைக்கும் வரை உன்னைப் பாதுகாப்பதும் உன் உள்ளத்தைப் பாதுகாப்பதும் என்னுடைய முழுமுதற் கடமை. அந்தக் கடமையை எப்பாடுபட்டும் செய்து முடிப்பேன். இது உறுதி!''

உணர்ச்சியின் பெருக்கிலே பெண்களுக்கு வருகிற ஒரு வீர ஆற்றலோடு பேசினாள் மணிமாலை. நீலவல்லி எதுவும் மறுமொழி கூறவில்லை.

''வல்லி! புன்னாட்டின் நல்வாழ்வுக்காக, அந்த நீலக் கல் நாட்டின் எதிர்கால நலத்துக்காகத் தமிழ் வீரர்கள் பலரும் யவன வீரர்கள் பலரும் ஏதேதோ வேள்விகள் செய்கிறார்கள். தியாகங்கள் புரிகிறார்கள். என்றோ ஒரு நாள் ஒளாடியஸ் என்ற யவன

வணிகன் புன்னட்டு நிலத்திலே ஒரு மலர்ச் செடியை நட்டு அதற்குத் தன் கண்ணீரையே தண்ணீராக வார்த்தான். அந்த மலர்ச் செடி ஒரு நீல மலரைப் பூத்தது. அந்த நீல மலர் நிலவிலே பூத்த நீல மலர். செடி தழைத்தது. ஆனல் புயல் அடித்தது. கொடி சாய்ந்தது. என்ருலும் வித்து வீணுகி விடவில்லே. அந்த மலர் மரபு தொடர்பற்றுப் போய் விடவில்லே. அதை வளர்ப்பதற்காக, அதைப் பேணிப் பாதுகாப்பதற்காகத் தமிழர் குலமும் யவனர் குலமும் ஒன்று சேர்ந்து இப்போது ஒருமித்து ஒரு தியாக வேள்வி நடத்துகிறது. அந்த வேள்வியிலே நம்முடைய யவன வீரர்கள் காணிக்கை செலுத்துகிருர்கள்; செலுத்தி மகிழ்கிருர்கள். அவ்வளவே. இதற்கு நீ துயரம் அடையாதே! என்ருே ஒரு நாள் இந்த வேள்விக்குரிய பயன் நமக்குக் கிடைக்கப் போகிறது. அந்த நன்னுளே எதிர்நோக்கி நாம் பொறுமையாக இருக்க வேண்டும்! அதுவே நாம் செய்யக்கூடிய வேள்வி!''

இப்படி மணிமாலே சொல்லிக் கொண்டிருக்கும்போதே கன்னிமாடத்தின் குடுமிக் கண் வழியாக மெல்லிய குரலில் பதற்றம் பதற்றமாகச் சொற்களேத் தூவினுள் பணிப் பெண்:

''அம்மா! அம்மா! ஓடி வாருங்கள். ஓடி வாருங்கள். இங்கே வந்து பாருங்கள்!''

(தொடரும்)

## பருவத்தின் புதிர்

க. பத்மாபசேகனா

சின்னச் சின்னப் பாவாடை :
சொகுசாம் பட்டுப் பாவாடை :
சொன்ன சொல்லில் மழலேத் தேன்
சொட்டும் இனிமை மதுரமொழி—
இன்னவகையில் இளஞ்சிட்டாய்
இருந்த அந்தப் பெண்மகளும்
தன்னிக ரில்லா அழகுருவாய்த்
திகழும் பருவப் புதிரென்னே!

சங்குல் மறையும் பொழுததனில்
கனகச் சுடராய் அகல்விளக்குத்
தங்கித் திகழும் இருஒளி போல்
தெரியும் இருவிழி இவளுடைமை!
மங்குதல் இல்லாப் புதுமைவெறி
மங்கை இவள்தன் திருமேனி!
சங்கீதம்போல் இதழமுதம்
சேர்ந்த பருவப் புதிரென்னே!

பன்னிப் பலகதை பேசவரும்
பாங்கில் புருவம் அசைந்தாடும் :
உன்னிப் பார்த்துத் தரைமண்ணில்
உருளும் கால்விரல் அழகழகாய்!
கன்னிச் செம்மனம் கிளுகிளுக்க,
கைகள் பட்டுப் பிணேஆட —
வன்னப் புரு அவள் வதனத்தில்
வந்த பருவப் புதிரென்னே!

தொட்டு மகிழ்ந்து உறவாடும்
தொடுவான விளிம்பில் முழுநிலவு
எட்டிப் பிடித்து விளேயாட
எங்கிருந்தோ வந்து மூளேத்தாற்
போல் —
கட்டிப் பிணேக்கும் ஒட்டியாணம்
காட்டும் மெல்லிடை அழகுமிழ —
கட்டழகாம் இவள் பட்டுடலில்
காணும் பருவப் புதிரென்னே?





# SWARAJYA ANNUAL NUMBER 1967

The Swarajya Annual 1967, the sixth in the series, will be published on the January 23, 1967, the birth anniversary of Khasa Subba Rau, Founder-Editor, to whose hallowed memory the Annual is dedicated. Published as it will be a few weeks before the general elections, the Annual, known for its value as an instrument of political education, it will have an added importance this year.

Well-informed and instructive article covering a wide and varied range of our current national life, political and economical, educational, social, cultural and so on, are included in the Annual. The nation's foremost thinkers, politicians, statesmen, administrators, publicists, industrialists and educationists each eminent in his sphere of work will be writing for the Annual Number, which includes about 50 articles, will be a good and handy reference to the student of public affairs, professional politicians as well as laymen. Rich cartoonish illustrations will lend added interest to the articles and the fine printing on imitation art paper will make this publication of about 240 pages attractive in form and get up.

**Price Rs. 5/-** per copy: postage 75 paise extra

*Register your copy with the nearest agent for Swarajya and Kalki*

**The Manager, 'Swarajya', Kalki Building, Madras - 10**

# குறைந்த செலவில் அதிக உற்பத்தி

டாடா ஸ்டீல் தொழிற்சாலையில் உள்ள ஆறு இரும்பு உருக்கு உலைகளையும் சில ஆண்டுகளுக்கு ஒரு முறை 'பழுது' பார்க்கவேண்டியுள்ளது. இரும்புத் தொழில்துறையினர் இவ்வேலையை ரீலைனிங் என்று அழைக்கின்றனர். இது ஒரு முக்கியமான வேலையாகும், இவ்வேலைக்கு ஆயிரக்கணக்கான டன் உஷ்ணத்தால் பாதிக்கப்படாத செங்கற்களும், எஃகும், உருக்கு இரும்பும், பல மைல் நீளமுள்ள மின் கம்பிகளும் மற்றும் 'குழாய்களும்' தேவைப்படுகின்றன. மேலும் பல தொழிற்கலை வல்லுனர்களும் தேர்ச்சி மிக்கத் தொழிலாளர்களும் தேவைப்படுகிறார்கள். இவ்வேலைக்கான ஒவ்வொரு கட்டமும், ஒவ்வொரு அம்சமும் முன்கூட்டியே திட்டமிடப்படுகிறது. பிறகு இவ்வேலையை விரைவாகவும் குறைந்த செலவிலும் முடிக்கும் பொருட்டு, தொழிற் கலைஞர்களும் தொழிலாளர்களும் இரவு பகலாக இணைந்து கருமமே கண்ணாகச் செயல் படுகின்றனர்.

கடந்த பல ஆண்டுகளாக டாடா ஸ்டீல் இத்துறையில் சிறந்த முன்னேற்றத்தைக் கண்டுள்ளது. 1957ல் ஓர் இரும்பு உருக்கு உலையை ரீலைனிங் செய்வதற்கு 99 நாட்கள் தேவைப்பட்டன. 1963ன் தொடக்க காலத்தில் இவ்வேலை 74 நாட்களில் செய்யப்பட்டது. இச்சாதனையை மிஞ்சுவது கடினம் என்று பலரும் அப்போது கருதினர். ஆனால் ஆறு மாதங்களுக்குள்ளாகவே இரும்பு உருக்கு உலை 64 நாட்களில் ரீலைனிங் செய்யப்பட்டது.

ஆனால் இத்தோடு முடிவு அடையவில்லை. 1957ல் 99 நாட்களில் இரும்பு உருக்கு உலையை ரீலைனிங் செய்யப்பட்ட வேலை 57 நாட்களிலேயே செய்யப்பட்டுள்ளது. இதன் விளைவாக, 'பழுது பார்ப்பதில் மிச்சப்படுத்தப்பட்ட நேரம்' இன்றியமையாத் தேவையான எஃகு உற்பத்தியை அதிகரிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஒரு வேலையை மேலும் மேலும் குறைந்த நேரத்தில் செய்வதற்காக எடுக்கப்படுகின்ற இடைவிடாத இதயபூர்வமான முயற்சிகளும் இதர சாதனைகளும் செலவினங்களைச் சிக்கனமாக்கி உற்பத்தியைப் பெருக்குதல் என்ற நிறுவனம் ஏற்றுக்கொண்டுள்ள அடிப்படை இலட்சியத்தை அடைவதற்காகப் புரியப்படுகின்றன.




The Tata Iron and Steel Company Limited

IWTTN 2034A



## நம்ம வீட்டு லக்ஷ்மி

லட்சாதிபதி சோமசுந்தரத்துக்கு மனைவியாக வாய்த்தவளும் குழந்தைகளாக வந்தவர்களும் ஊதாரிகள். அவர் பாடுபட்டுச் சம்பாதித்த பணத்தில் படாடோபமாக வாழுகிறார்கள். என்ன சொல்லியும் திருந்தாத அவர்களைத் திருத்த முற்படுகிறார் சோமசுந்தரம். பணம், தொழில், காலம் இம்மூன்றின் அருமையையும் அவர்களுக்குப் போதிக்க அவர் ஆடிய நாடகமே நம்ம வீட்டு லட்சுமி. படம் பார்க்கும் நமக்கும் ஒரு நாடகத்தைக் காணும் உணர்ச்சியே ஏற்படுகிறது.

வியாபாரத்தில் பெருத்த நஷ்டமடைந்ததாகக் கூறி, ஒரு லட்சத்தைப் பெண்டாட்டி பிள்ளைகளுக்குப் பங்கு போட்டுத் தரச் சொல்லும் போதே கதையின் சஸ்பென்ஸ் நமக்குப் புரிந்து விடுகிறது. இன்றைய சீர்கெட்ட வாழ்க்கை முறைக்குத் தேவையான பல படிப்பினைகளைப் போதிக்கிறது படம். அதே சமயத்தில் படம் ஓடத் தேவையான கவர்ச்சி நடனங்களையும் காதல், சண்டைக் காட்சிகளையும் கொண்டிருக்கிறது. 'நாம் இருவரி'ல் கண்ட பந்துலுவை மீண்டும் இங்கு சந்திக்கிறோம் சோமசுந்தரமாக. ராஜன் கதாபாத்திரங்களின் முகத்தைப் பார்த்து வசனம் பேசினால் என்ன? பாரதி பரவாயில்லை. வாணிஸ்ரீ இன்னும் பட்டை தீட்டப்படவேண்டும். நாகேஷின் பாகம் ஏதோ பார்த்ததையே பார்ப்பது போன்றதோர் அதிருப்திக்கு இலக்காகிறது. கவிஞரின் பாடல்களில் ஒன்றாவது கவனத்தில் நிற்கவில்லை. வசனம் மோசமில்லை. கதையின் கருத்தைப் போலவே அதைக் கொண்டு செல்லும் சம்பவங்களும் பழமையாயிருக்கின்றன.

மதுக்கடையில் நாள்பட்ட சரக்குக்குத்தான் மவுசு அதிகமாம்!

## மதறாஸ் டு பாண்டிச்சேரி

ஒரு தமிழ்ப் படம் வெளிவந்தால் அதன் உண்மையான மூலக் கதை ஆசிரியர் யார் என்பது நீதிமன்றம் வரையில் போய் நிரூபணமாவது இப்பொழுதெல்லாம் சகஜமாகி விட்டது. இந்தத் தொல்லையே வேண்டாம் என்றுதானோ என்னவோ இந்தப் படத்தைக் கதையே இல்லாமல் தயாரித்திருக்கிறார்கள்! சமீபத்தில், ஹாஸ்ய நிகழ்ச்சிகளைக் கொண்ட படங்கள் சில வெற்றி பெற்றதை மனத்தில் வைத்துக் கொண்டு விவித பாரதியின் இந்தப் படம் உருவாக்கப்பட்டிருக்க வேண்டும். குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக் கொண்ட கதைதான்.

சினிமாவில் நடிக்க வேண்டும் என்னும் ஆசை கொண்ட ஒரு குடும்பப் பெண் ஓர் அயோக்கியனை நம்பி மோசம் போகிறாள். ஆரம்ப முதலே கதாநாயகன் அவளைத் தொடர்ந்து சென்று இறுதியில் அவளைக் காப்பாற்றி விடுகிறான். கல்பனா முக்கிய பாத்திரமாகத் தோன்றி ஆடிப் பாடுகிறார். அவர் நடிப்பு, பேச்சு, முக பாவங்கள் எதுவுமே பாராட்டும்படியாயில்லையே!

ரவிச்சந்திரன் குத்துச் சண்டை போடும் கதாநாயகன். கதாநாயகனைக் கடைசி வரையில் தொடர்ந்து சென்று சண்டையிடும் வில்லன் கன்னபார்ட் நடராஜன். மலைக் காட்டில் சண்டை நடக்கிறது. கடைசி வரையில் காத்திருந்து விட்டுப் போலீஸ் வருகிறது! படம் முடிகிறது.

நாகேஷ், ஏ. கருணாநிதி இருவரும் முறையே கண்டக்டராகவும், டிரைவராகவும் வருகின்றனர். அவர்கள் நடிப்பு மிகவும் நன்றாயிருக்கிறது. ஆனால் அவர்கள் நடத்தும் சலூன் ஹாஸ்யம் தேவையேயில்லை. ''எதிர் நீச்சல்'' நாடகத்தில் வரும் பட்டு மாமியைப் போல இப்படத்திலும் ஒரு மாமியைப் புகுத்தியிருக்க வேண்டாம். திரைக் கதையைப் போலவே, பஸ்ஸும் மீண்டும் மீண்டும் போன வழியிலேயே சுற்றிச் சுற்றி வருவது ஒரு தமாஷ்தான்!

திரைப்படக் கலை நுணுக்க அம்சங்கள் எல்லாமே முற்போக்கில் இருக்கும் இந்த நாளில் இதையும் ஒரு படம் என்று எடுத்தார்களே!



# முள்ளும் மலரும்

முதல் பரிசு நாவல்

உமாசந்திரன்

## அத்தியாயம் 22

டிராலியில் ஏறக் கூர்க்கா போலா தயங்கியதைக் கண்டதும் குமரன், ''நீ இங்கேயே இருக்கலாம், போலா! நீ எதுக்குக் கீழே வரவேண்டும்?'' என்று கூறினான். போலா ஹுக்காப் பையை அவிழ்த்தவாறு அங்கிருந்து அகன்றான்.

''அது சரி. இன்னும் எதற்குக் காத்திருக்கிறோம்? டிராலி எங்கே?' என்று கேட்டாள் கனகா.

''டிராலி கீழிருந்து யாரையோ ஏற்றி வரப் போயிருக்கிறது. அது திரும்பி வருவதற்காகத்தான் நான் காத்திருந்தேன். நீயும் வந்தாய்''என்று கூறியவாறு குமரன் டிராலிச் சரிவின் விளிம்பை நோக்கி நடக்கவும் கனகாவும் அவனுடன் நடந்தாள்.

கொட்டகையிலிருந்து மாயாண்டி அவர்களருகே ஓடி வந்தான்.

''டிராலி பவர்ஹவுஸ் நிலையிலிருந்து புறப்பட்டாச்சு, சார். இன்னும் கொஞ்ச நேரத்திலே இங்கே வந்துவிடும்'' என்று தகவல் தெரிவித்தான்.

''டிராலி வந்து கொண்டிருக்கும் போது நீ அந்த இடத்தைவிட்டு நகரக் கூடாது. போய் உன் வேலையைக் கவனி'' என்றான் குமரன்.

''இதோ, ஓடறேன், சார்!'' என்று மீண்டும் கொட்டகையை நோக்கி ஓடினான் மாயாண்டி.

டிராலி நன்றாகக் கண்ணுக்குத் தெரிய ஆரம்பித்தபோது அதில் உட்கார்ந்து வருபவர் யாரென்று கண்ட



தும் மாயாண்டியின் வியப்புக்கும் பதற்றத்துக்கும் அளவேயில்லை. காளியண்ணனும் மங்காவும் மட்டும் அந்த டிராலியில் வருவார்கள் என்று அவன் எப்படி எதிர்பார்த்திருக்க முடியும்?

'இந்தச் சமயம் பார்த்து இந்த எஞ்சினீயர் ஐயா வேறு வந்து காத்துக் கொண்டிருக்கிறாரே. காளியண்ணனால் தான் அவர் காத்திருக்க வேண்டியிருந்தது என்பதைக் கண்கூடாகக் காணும் போது அந்த ஐயா எப்படிக் கோபித்துக் கொள்ளப் போகிறாரோ? அவருடைய கோபமெல்லாம் அவன் மேலேயே திரும்பினால்? டிராலியைக் கீழே அனுப்பியது தவறு என்று அவனுக்குக் கெட்ட பெயர் வந்துவிடுமோ?' டிராலி நிலைக்குவந்து நிற்பதற்குள் மாயாண்டியின் பூஞ்சை மனம் ஏதேதோ அச்சங்களுக்கு ஆளாகித் தவித்தது.

ஆனால் குமரன் டிராலிக்காகக் காத்துக் கொண்டிருந்ததைப் பற்றிக் காளியண்ணன் சிறிதும் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. குமரனைக் கண்டும் காணாதவன் போல் வேறு பக்கமாகப் பார்த்துக் கொண்டு டிராலியிலிருந்து இறங்கினான். மங்காவோ வழக்கமான துள்ளலுடன் டிராலியிலிருந்து கீழே குதித்துச் சரிவு வழியே மேலே ஓடி வந்தாள்.

''வணக்கம் சார்!'' என்றாள் மங்கா குமரனைப் பார்த்ததும். ''அம்மா, உங்களுக்கும் வணக்கம்'' என்று கனகாவுக்கும் ஒரு கும்பிடு போட்டாள்.

''என்ன மங்கா! இன்னிக்கு உன் வேலை சீக்கிரமே முடிந்து விட்டதா?'' என்று கேட்டான் குமரன்.



''இந்த வள்ளியண்ணன் என்னை வேலை செய்ய விட்டால் தானே? அது குடுத்த தொந்தரவு பொறுக்காமல் தான் நான் அரை நாள் லீவு போட்டுட்டு வரும்படி ஆயிடுச்சு'' என்றாள் மங்கா.

''இவர்கள் இரண்டு பேருக்காகவா டிராலி கீழே போயிருந்தது?'' என்று கேட்டாள் கனகா எரிச்சலுடன்.

''அதனாலென்ன, கனகா? டிராலி கீழே போய்விட்டு மேலே வருவதற்கு அவ்வளவு நேரம் ஆகத்தானே ஆகும்'' என்றான் குமரன்.

''அதெப்படி? இவர்களுடைய சௌகரியத்துக்காக நாம் காத்துக் கொண்டிருக்க வேண்டுமா?'' என்று சிடுசிடுத்தாள் கனகா.

''ஏம்மா! நாங்கன்னா அவ்வளவு எளப்பமா? வேலை செய்யற எங்களுக்கு உபயோகப்படாத டிராலி வேறே யாருக்காக இருக்கு? காத்துக் கிடந்ததாச் சொல்றீங்களே, நீங்க போய் என்ன செய்யப் போறீங்க? இடுப்பு முறிஞ்சு போகும்படியாக ஜல்லிக்கூடையைத் தலையில் தூக்கிகிட்டுச் சுத்தறோமே நாங்க! உங்களாலே முடியுமா?'' என்றாள் மங்கா.

''நீ வாயை மூடு. உன்கூட நான் பேச வரவில்லை'' என்று சீறி விழுந்தாள் கனகா.

மங்கா கண்களை உருட்டி அவளை முறைத்துப் பார்த்தாள். ஆனால் அவள் துடுக்குத்தனமாகப் பேச ஆரம்பிப்பதற்குள் குமரன் குறுக்கிட்டான்.

''கனகா! இந்த இடத்தினுடைய சட்டதிட்டங்கள் உனக்குப் புதியவையாக இருக்கலாம். ஆனால் பலவிதமான இடைஞ்சல்களுக்கும் அசௌகரியங்களுக்கும் இடையே எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து உழைக்க வேண்டியிருக்கும். இந்தப் பிரதேசத்தில் உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற பேதங்கள் பாராட்டிக் கொண்டிருப்பது சாத்தியமல்ல. வசதிகள் குறைவாக இருப்பதால் ஏற்றத்தாழ்வுகளுக்கு இடம் கொடாமல் அவரவர் தேவை ஒன்றையே பிரதானமாகக் கருதுகிறோம். ஒருவருக்காக இன்னொருவர் காத்திருப்பது என்ற பேச்சுக்கே இதில் இடமில்லை'' என்றான்.

''என்னவோ குமரண்ணா! உங்கள் மனம் இதற்கெல்லாம் ஒத்துப் போய் விடுகிறது. ஆனால் அவ்வளவு பரந்த மனப்பான்மை எனக்குக் கிடையாது என்று ஒப்புக் கொண்டு விடுகிறேன்'' என்றாள் கனகா.

காளியண்ணன் அப்போதுதான் மேலே வந்தான். மங்கா டிராலியில் மறந்து விட்டிருந்த சாப்பாட்டுப் பாத்திரத்தை எடுத்து வருவதற்காக அவன் மறுபடியும் டிராலிக்குப் போய் வர நேரிட்டது.

''வணக்கம் சார்! உங்க புண்ணியத்தாலே நான் உங்களுக்கு ஒத்தைக் கையாலேதான் வணக்கம் தெரிவிக்க வேண்டியிருக்கு'' என்றான் காளி, குமரனைப் பார்த்து.

''ஏன்? உனக்குக் கைபோனதுக்கு ஐயாதான் பொறுப்பாளியா? மொதல்லேயே அவங்க பேச்சைக் கேட்டிருந்தால் உனக்கு இப்போ ரெண்டு கையும் முழுசா இருந்திருக்கும், தெரிஞ்சுக்க'' என்றாள் மங்கா.

காளியண்ணனின் குத்தல் பேச்சைக் குமரன் பாராட்டவில்லை. ''ஏன் காளி! இன்று உனக்கு விடுமுறையாயிருக்கிறதே என்று பவர்ஹவுஸுக்குப் போயிருந்தாயா?'' என்று கேட்டான்.

''வழக்கமா விடுமுறை நாள்களிலே மீன் பிடிச்சுப் பொழுதைப் போக்குவேன். ஆனா இந்த ஒத்தைக் கையை வச்சுக்கிட்டு மீன் பிடிக்கிறது எப்படி? அதனாலேதான் பவர்ஹவுஸுக்குப் போயிட்டேன்'' என்றான் காளி.

''இந்த ஆளு சொல்றதை நம்பாதீங்க, சார். போன வார விடுமுறையிலேகூட இது மீன் பிடிக்கிறதை என் கண்ணாலே பார்த்தேன். அதுக்குத் தூண்டியிலே புழுவைக் கோத்துக் கோத்துக் குடுத்து ஒத்தாசையும் செய்தேன். அந்த விசுவாசம் இதுக்குக் கொஞ்சமாவது இருந்திச்சுன்னு நெனைக்கிறீங்களா? தூண்டில் குச்சியாலேயே என்னை அடிச்சு நொறுக்கிடுச்சு சார்.''

''ஏ மங்கா! அதெல்லாம் இந்த ஐயாவுக்குத் தெரிஞ்சு என்ன ஆகணும்? நட வீட்டைப் பார்க்க'' என்றான் காளியண்ணன்.

மங்கா அலட்சியமாக அவனைப் பார்த்தாள்.

''ஏதய்யா, பிரமாதமா வெரட்டுறியே. உன்னைப் புடிச்சிருக்குன்னு ஒரு வார்த்தை சொன்னேனில்லே, உடனே என்னை வேலைக்கு வாங்கிட்டதாவே நெனைப்பு வந்திருச்சா உனக்கு?''

''மங்கா! நீ வாயை மூடிக்கிட்டுச் சும்மா இருக்கமாட்டே?'' என்று கத்தினான் காளி.

''பாத்தீங்களா சார்! எப்படிக் கூச்சல் போட்டு என்னை மெரட்டுதுன்னு. இந்த லட்சணத்திலே நான் வேலையை விட்டுட்டு ஆத்தாளையும் அழைச்சுக்கிட்டு இவங்க வீட்டுக்கே

வந்திடணுமாம். எந்த மூஞ்சியை வச்சுக்கிட்டு இப்படியெல்லாம் சொல்லுதோ தெரியலே!''

மங்காவின் இந்த இயல்பான பேச்சைக் கேட்டுக் குமரன் சிரித்துவிட்டான். அவனுடைய சிரிப்பு காளியண்ணனுக்கு ஆத்திரமூட்டியது. ''இத பாரு மங்கா! நீ எங்க வீட்டுக்கு வந்துதான் ஆகணும்னு யாரும் உன் கிட்டே மல்லுக்கு நிக்கலே, தெரிஞ்சுக்க'' என்று கத்தினன்.

''மல்லுக்கு நிக்காத ஆள்தான் வேலை நடக்கற எடத்திலே என்னைத் தொரத்தித் தொரத்தி வந்து தொந்தரவு குடுத்தியா? ஆனா ஒண்ணு மட்டும் சொல்லி வைக்கிறேன் கேட்டுக்க. உன்னைப் புடிச்சிருக்குன்னு சொல்லிட்டேன் உண்மைதான். ஆனா அதுக்காக வேலையை விட்டுட்டு உங்க வீட்டுக்கே வந்திடுவேன்னு மட்டும் எதிர்பார்க்காதே'' என்ருள் மங்கா.

''வராட்டா வேண்டாமே. அதைப் பத்தி நான் கவலைப்படப் போறேன்னு நெனைச்சியா? நீயும் உங்க ஆத்தாவும் எக்கேடு கெட்டால் எனக்கென்ன?'' என்று வெறுத்தாற்போல் கூறிய காளியண்ணன், மங்காவின் சாப்பாட்டுப் பாத்திரத்தைக் கீழே எறிந்துவிட்டு வேகமாக அங்கிருந்து சென்ருன்.

''கோவம் வந்தா வரட்டுமே, நல்லா வரட்டும். நான் சொன்னதிலே ஏதாவது தப்பு இருந்திச்சா, நீங்களே சொல்லுங்க சார்!'' என்று கூறிக்கொண்டே மங்கா கீழே உருண்டு கிடந்த சாப்பாட்டுப் பாத்திரத்தைக் கையில் எடுத்துக் கொண்டாள்.

மாயாண்டி குமரனை நோக்கி விரைந்து வந்தான்.

''டிராலி தயாராயிருக்குங்க. ஐயா இப்பப் புறப்பட்டாத்தான் சரியாயிருக்கும்'' என்ருன்.

''நான் போய் வரேன், சார்!'' என்று குமரனுக்கு வணக்கம் தெரிவித்துவிட்டு மங்கா அங்கிருந்து அகன்ருள்.

''வா, கனகா! நாம் புறப்படலாம்'' என்று ஒரு பெருமூச்சுடன் கூறிக் குமரன் கனகாவை உடன் அழைத்துக் கொண்டு டிராலியில் போய் உட்கார்ந்து கொண்டான்.

டிராலி புறப்பட்டது.

சிறிது நேரத்துக்கு இருவரும் ஒன்றும் பேசவில்லை. மங்காவும் காளியண்ணனும் பேசிக் கொண்ட பேச்சுக்கள் இருவர் மனத்திலும் வெவ்வேறு விதமான சிந்தனைகளை நிரப்பியிருந்தன.



''வராத மனுஷர் வந்திருக்கிறீர்களே! உங்களைச் சாப்பிடச் சொல்லலாம்னு ரேஷன் கடையிலேயே அரிசி இல்லையாம்; காப்பி குடிக்கச் சொல்வோம்னு காப்பிப் பொடி இல்லை; தண்ணீராவது தரலாமென்ருல், குழாய் நின்னுவிட்டது!''

''பரவாயில்லே! எதுவும் தரவேண்டாம். ஐந்து ரூபாய் கைமாற்ருகக் கொடுங்க. அது போதும்!''

---

திடீரென்று குமரன் சிரித்ததும், கனகா வியப்புடன் அவனைப் பார்த்தாள். ''ஏன் சிரிக்கிறீர்கள் குமரண்ணு?''

''மங்காவின் ஒளிவுமறைவு இல்லாத பேச்சை நினைத்துக் கொண்டேன். என்னல் சிரிப்பை அடக்க முடியவில்லை'' என்ருன் குமரன்.

''போதுமே, அந்தப் பெண்ணை நினைத்துக் கொண்டாலே எனக்கு ஆத்திரம்தான் வருகிறது. சுத்த அநாகரிகம்'' என்ருள் கனகா அருவருப்புடன்.

''அநாகரிகம் என்று நீ எதை நினைக்கிருயோ, அதில்தான் மாசுபடியாத மன இயல்பின் அழகு நிறைந்திருப்பதாக எனக்குத் தோன்றுகிறது'' என்ருன் குமரன்.

''நீங்கள்தான் மெச்சிக் கொள்ள வேண்டும். மங்காதான் அப்படியென்ருல் அந்தக் காளியண்ணன் அதற்கு மேல் இருக்கிருன். அதுவும் ஒரு கை போன பிறகு அவனைப் பார்ப்பதற்கே பயமாயிருக்கிறது'' என்ருள் கனகா.

குமரன் சிரித்தான். ''இரண்டு பேர்களைப் பற்றியும் உன் அபிப்பிராயத்தைச் சொல்லி விட்டாய். மூன்ருவது ஆளைப் பற்றி உன்னுடைய அபிப்பிராயம் என்னவென்று நான் அறிந்து கொள்ளலாமா?'' என்ருன்.

''மூன்ருவது ஆளா? அது யார்?''

''வள்ளிதான்.''

"ஓ...அந்தப் பெண்ணா? அதைப்பற்றி என் அபிப்பிராயத்தை நீங்கள் எதற்காகத் தெரிந்து கொள்ள வேண்டும்?"

"முக்கியமான காரணம் இருக்கிறது, கனகா. உன்னை என் தங்கையாகவே நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன் என்று உனக்குத் தெரியாதா?"

"நானும் உங்களை என் அண்ணாவாகத்தான் நினைத்துக் கொண்டிருக்கிறேன். ஆனால் அதற்கும் வள்ளிக்கும் என்ன சம்பந்தம்?"

"தனக்கு வரப் போகும் அண்ணியைப் பற்றித் தங்கை என்ன நினைக்கிறாள் என்று அண்ணன் தெரிந்து கொள்ள நினைப்பது இயற்கைதானே."

கனகா திடுக்கிட்டாள்.

"என்ன சொல்கிறீர்கள், குமரண்ணா? எனக்கு வரப் போகும் அண்ணியா ? யார்? வள்ளியா?"

"ஆம் கனகா! என் வாழ்க்கைத் துணைவியாக நான் என் மனத்தில் வரவேற்கக் கூடிய ஒரே பெண் வள்ளிதான் என்று நான் தீர்மானித்துவிட்டேன். என் விருப்பத்தை வள்ளியிடம் சொல்லியும் விட்டேன்" என்று குமரன் அமைதியாகக் கூறியதும் கனகா சில கணங்களுக்கு அப்படியே திகைத்துப் போய் உட்கார்ந்திருந்தவள் சட்டென்று ஏதோ ஆவேசம் கொண்டவள் போல், "இல்லை குமரண்ணா! நீங்களாவது வள்ளியை வாழ்க்கைத் துணைவியாக ஏற்பதாவது! இது ஒரு நாளும் நடக்க முடியாது. நடக்கக் கூடாது!" என்று கத்தினாள்.

குமரன் கலங்காத குரலில் சாந்தமாகக் கூறினான். "கனகா! நீ இப்படி ஆத்திரப்படுவாய் என்று நான் எதிர்பார்க்காமல் இல்லை. ஆனால் என்றாவது ஒரு நாள் நான் அதற்குத் தயாராயிருந்துதானே ஆக வேண்டும். உன் ஆத்திரத்துக்குக் காரணமும் எனக்குப் புரிகிறது. வேண்டாத ஏற்றத்தாழ்வுகளை மனத்தில் கற்பனை செய்து கொண்டு நீ பொங்கிச் சீறுகிறாய். ஆனால் என் வரையில் அந்த ஏற்றத்தாழ்வுகளுக்கு அர்த்தம் ஏது?"

"நீங்கள் அப்படி நினைக்கலாம். ஆனால் அவ்வளவு பரந்த மனப்பான்மை எனக்குக் கிடையாதென்று உங்களுக்குத் தெரியாததில்லையே! வள்ளியைப் பற்றி என் அபிப்பிராயத்தை இனிமேல்தான் நீங்கள் புரிந்து கொள்ள வேண்டுமா? உங்களுக்குக் கீழே சாதாரண வேலையில் இருக்கும் ஒரு முரட்டு ஆளின் தங்கை. படிப்பு கிடையாது. குலமோ குடும்பக் கௌரவமோ எதுவும் கிடையாது. அப்படிப்பட்ட ஒரு பெண்ணை வாழ்க்கைத் துணைவியாகத் தேர்ந்தெடுக்க உங்கள் மனம் ஒப்பினாலும் அவளை அண்ணியாக ஏற்க என் மனம் ஒப்ப வேண்டாமா?"

குமரன் சிரித்தான்.

"ஏன் நான் பேசுவதெல்லாம் உங்களுக்குச் சிரிப்பாக இருக்கிறதா?"

"அப்படியில்லை, கனகா! நான் சிரித்தது வேறொன்றை நினைத்து."

"எதை நினைத்து?"

"வாழ்வில் நான் தனிக்கட்டைதானே, என் வரைக்கும் என்ன தீர்மானம் செய்தாலும் தட்டிப் பேச ஆள் கிடையாது என்று நம்பிக் கொண்டிருந்தேன். ஆனால் தனிக்கட்டைக்குக் கூடத் தங்கையின் முட்டுக்கட்டை உண்டு என்று நினைத்ததும் சிரிப்பு வந்து விட்டது."

"தங்கை என்ற பாசம் இருந்தால் நீங்கள் முட்டுக்கட்டையாக நினைக்க மாட்டீர்கள்."

"அப்படி நினைக்கவில்லை, கனகா! உன்னுடைய எதிர்ப்பெல்லாம் தாற்காலிகமாகத்தான் இருக்கும் என்று எனக்குத் தெரியும். வள்ளியைப் பற்றி நீ என்னதான் தவறான அபிப்பிராயம் கொண்டிருந்தாலும் சீக்கிரத்திலேயே அதை மாற்றிக் கொண்டு விடுவாய் என்பதில் எனக்குச் சந்தேகமே கிடையாது. அது மட்டுமல்ல, இது விஷயத்தில் நான் கேட்கும் உதவியைச் செய்யவும் நீ பின்வாங்க மாட்டாய் என்று உறுதியாக நம்புகிறேன்."

"உதவியா ?"

"ஆம் கனகா! சமயம் வரும்போது அது என்னவென்று சொல்லுகிறேன்" என்று குமரன் கூறிக் கொண்டிருக்கும் போதே டிராலி நிலைக்கு வந்து நின்றது.

இருவரும் கீழே இறங்கினார்கள்.

"வா கனகா! முதலில் உன்னைச் சபேசனிடம் அழைத்துப் போய் அவனை ஆச்சரியத்தில் ஆழ்த்த வேண்டும்" என்று குமரன் புதியதொரு குதூகலத்துடன் கூறவும் கனகா மற்றதையெல்லாம் மறந்து அவனுடன் பவர்ஹவுஸை நோக்கி நடக்க ஆரம்பித்தாள்.

* * *

சம்பா நீர்த் தேக்கத்தில் புது மணப் பெண்ணின் மனத்தில் அலைமோதி நிற்கும் உவகையைப் போல் தண்ணீர் அலை மோதி நின்றது. மூன்று பக்கங்களிலும் உயர்ந்து நின்ற குன்றுகள்தான் அந்த நீர்த் தேக்கத்தின் இயற்கையான கரைகளாக அமைந்திருந்தன. அந்த மூன்று குன்றுகளுக்கும் நடுநாயகமாக நிமிர்ந்து நின்றிருந்

தது சம்பாதேவிக் குன்று. அந்தக் குன்றின் மேல் கோயில் கொண்டு தலைமுறை தலைமுறையாக அந்தப் பகுதியைச் சேர்ந்த எளிய மக்களின் பிணி தீர்க்கும் தெய்வமாக விளங்கி வந்த சம்பா தேவி, நீர்த் தேக்கம் ஏற்பட்டபின்பு அந்த நீர்த் தேக்கத்தின் காவல் தெய்வமாகவும் விளங்க ஆரம்பித்திருந்தாள்.

சம்பாதேவிக் குன்றுக்கும் வைரவன் குன்றுக்கும் நடுவே இருந்த இடைவெளியை ஓர் உயர்ந்த அணைக்கட்டால் அடைத்த பின்புதான் கடல் போன்ற அந்த நீர்த் தேக்கம் உருவாக முடிந்தது. அதற்கு முன்பெல்லாம் அங்கு பெய்த மழை நீர் முழுவதும் அந்த இடைவெளி வழியே ஒரு காட்டாறாகப் பாய்ந்து வீணாகிக் கொண்டிருந்தது. இப்போது நீர்த் தேக்கத்தில் நிரம்பியிருந்த தண்ணீரை வைரவன் குன்றின் அடிப்பாகத்தைக் குடைந்து அமைக்கப்பட்டிருந்த ஒரு சுரங்கத்தின் வழியே பாய்ச்சிக் கருளியாற்று நீர்த் தேக்கத்தில் கொண்டு போய்ச் சேர்த்திருந்தார்கள். இவ்விதம் கருளியாற்று நீர்த் தேக்கத்தில் நீர் மட்டம் ஒரே சீராயிருப்பதற்கு உதவியாக அமைந்திருந்தது சம்பா நீர்த் தேக்கம்.

அன்று ஆடிச் செவ்வாய். சம்பா தேவிக்கு விசேஷமான நாள். அதோடு காளியண்ணனின் நட்சத்திரமும் சேர்ந்திருந்தது. காளியண்ணன் ஆஸ்பத்திரியிலிருந்து வீட்டுக்கு வந்து மீண்டும் வேலையில் சேர்ந்த நாளிலிருந்தே அஞ்சலையத்தை சம்பா தேவிக்குப் படையல் படைத்து வர வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தாள். இன்று எல்லாம் சேர்ந்து அமைந்திருக்கவே இவ்வளவு நல்ல நாளை இழக்க அவள் விரும்பவில்லை. வள்ளியையும் அழைத்துக் கொண்டு அன்று அதிகாலையில் புறப்பட்டு வந்திருந்தாள்.

அன்று சுதந்திர தினமாகையால் பொதுவான விடுமுறை நாளாகவும் அமைந்திருந்தது. காளியண்ணனையும் கூட வரும்படி அஞ்சலையத்தை எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள். ஆனால் காளியண்ணன் அவ்வளவு தூரம் தன்னால் நடந்து வர முடியாதென்று சாக்குச் சொல்லித் தட்டிக் கழித்து விட்டான்.

சுதந்திர தினத்தை அவன் வேறெந்த விதத்தில் கொண்டாட நினைத்திருந்தான் என்று கேட்க அஞ்சலையத்தைக்குத் துணிவு வரவில்லை. கடைசியில்

## தேங்காய் உடைப்பது ஏன்?



“திருமண காலத்திலும் கோயில்களில் அபிஷேக ஆராதனைகளின் போதும் தேங்காயைப் பயன்படுத்துவதன் தத்துவம் என்ன தெரியுமா?

தேங்காய் மனிதனின் உருவகமாகும். தேங்காயிலிருக்கும் மூன்று கண்களில் இரண்டு பொய்யானவை. ஒன்றுதான் மெய்யானது. அதைப் போன்றே மனிதனுக்கும் இருக்கும் இரு கண்களும், பொய்த் தோற்றத்தையே காணுகின்றன. சரியானபடி உபயோகப்படுத்தத் தெரிந்தால் உண்மைகளை அறியக்கூடிய அவனது உள் மனசே மூன்றாவது மெய்ஞ்ஞான விழியாகும். தேங்காயின் உள்பகுதியைப் போன்ற இனிப்பான மெய்த் தோற்றத்தை அவன் வெளிப்படுத்த வேண்டுமெனின் சபல புத்தியாகிய வெளி ஓட்டை உடைத்துத்தானாக வேண்டும். அம்மட்டோ! அப்படி உடைத்தெறிவதன் மூலம் இளநீரைப் போன்று மென்மையாக இருக்கும் மனிதனது ஆன்மா முடிவில்லாததும் அறிந்து கொள்ள முடியாததுமான மெய்ஞ்ஞானத்துக்கு அருகாக வந்துவிடுகிறது.''—இதைச் சொன்னது யார்?

1. திருப்புகழ்மணி டி. எம். கிருஷ்ணசாமி அய்யர். 2. காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள். 3. திருமுருக கிருபானந்த வாரியார்.

இம்மூவரில் யாராக இருக்கலாம் என்று யோசித்துச் சிரமப்பட்டுக் கொண்டிருக்க வேண்டாம். 30ம் பக்கம் பார்க்கவும்.

தேங்காய் உடைப்பது ஏன்? — விடை:

அப்படி ஒரு தத்துவத்தைச் சொன்னது முருகன் வழிபாட்டின் தத்துவங்களை ஆராய வந்திருக்கும் அமெரிக்கரான ஃபிரெட் டபிள்யூ கிளோதி. அவருடைய புதிய விளக்கம் இது! 1936ல் சென்னையில் பிறந்த இவர், கல்வி பயின்றது கொடைக்கானலில். விரைவில் சிகாகோ சர்வகலாசாலையில் 'டாக்டர்' பட்டம் பெறுவதற்கான பயிற்சியை மேற்கொள்ளவிருக்கிறார்.

- கோவை ஆர். எஸ். மணி

வள்ளியும் அவனும் மட்டுமே புறப்பட்டு வரும்படி ஆயிற்று.

சம்பா தேவிக் கோயில் உண்மையில் ஒரு கோயிலின் தோற்றத்தைக் கொண்டிருக்க வில்லை. சின்னஞ் சிறிய கல் மண்டபம் என்றுதான் அதைச்சொல்ல முடியும். கஷ்டப்பட்டுக் குனிந்து உள்ளே சென்றால் ஓர் ஆள் நிற்கும் படியான குறுகிய இடம்தான் வாயிலுக்கும் சம்பாதேவியின் சிலைக்கும் மத்தியில் இருந்தது. அங்கு பிரார்த்தனை செய்ய வருவோர் சிலையின் மேல் அப்பிய குங்குமத்தால் சிலையின் வடிவமே மறைந்து ஒரே குங்குமச் சிலையாகக் காட்சியளித்தாள் சம்பாதேவி. பூசாரியின் தயவை எதிர்பார்க்காமல் அங்கு தனியாட்சி புரிந்து கொண்டிருந்தாள் அவள்.

படையல் படைத்துக் குங்குமம் சாத்தி வணங்கியபின் வள்ளி தலையைத் தாழ்த்தியபடியே வாயிலைக் கடந்து வெளியே வந்தபோது அஞ்சலையத்தையின் அருகே மங்காவும் நிற்பதைப் பார்த்து வியப்படைந்தாள்:

''நீ எப்போ வந்தே மங்கா?''

''எப்ப வந்தா என்ன? நீங்க ரெண்டு பேரும் என்கிட்டே ஒரு வார்த்தைகூடச் சொல்லாமே புறப்பட்டு வந்திட்டீங்களே. எனக்கு இன்னிக்கு லீவுன்னு தெரியாதா? ஒரு வார்த்தை சொல்லி யனுப்பியிருந்தால் நானும் உங்ககூட ஓடி வந்திருப்பேனா, மாட்டேனா?'' என்றாள் மங்கா.

''ஏன் மங்கா! நீ தினமும்தான் அலையறே. இடுப்பொடிய வேலை செய்யறே. இன்னிக்காவது நீ நிம்மதியா வீட்டிலேயே இருந்து ஓய்வு எடுத்துக்கிடலாமில்லையா? அதனாலே தான் உன்னைத் தொந்தரவு செய்ய வேண்டாம்னு நான் வள்ளிகிட்டே சொல்லியிருந்தேன்'' என்றாள் அஞ்சலை அத்தை.

''தொந்தரவாம் தொந்தரவு! லீவு நாளிலே வீட்டிலே சும்மா உக்காந்திருக்க எனக்குப் புடிக்குமா, என்ன? காலையிலே தூக்கம் கலைஞ்சதும் முகம் கழுவின சுருக்கோட உங்க வீட்டுக்குத்தான் கிளம்பினேன். அதுக்குள்ளே ஆத்தாவுக்கு டீ வாங்கி வரணும்ங்கிற நெனைப்பு வந்திச்சு. நான் ஒரு டீ குடிச்சிட்டு ஆத்தாவுக்கும் ஒரு டீ வாங்கிக் குடுக்கலாம்னு-நாயர் கடைக்குப் போனேன் பாரு, அங்கே உங்க அண்ணன் உக்காந்து அந்த நாயர் கொண்டு வச்சதை யெல்லாம் வளைச்சுத் திட்டிக்கிட்டிருந்திச்சு. 'ஏனய்யா இங்கே கண்டதைச் சாப்பிட்டு உடம்பைக் கெடுத்துக்கறேன்'னு கேட்டேன். அப்பத்தான் ஆங்காரத்தோட அது சொல்லிச்சு, நீங்க ரெண்டு பேரும் அதைப் பட்டினி போட்டுட்டுச் சம்பாதேவிக்குப் படையல் படைக்க வந்திருக்கீங்கன்னு.''

''நல்ல ஆங்காரம். அதும் பேரைச் சொல்லித்தானே படையல் படைக்கிறோம். படையல் படைச்சிட்டு வீட்டுக்குத் திரும்பினப்புறம்தான் எதுவும் ஆக்கிப் போட முடியும்னு சொல்லியிருந்தேன். இன்னிக்கு ஒரு நாளைக்குக் கொஞ்சம் கட்டுப்பாடா யிருந்தால் கொறைஞ்சா போயிடும்? எங்க தலை மறைஞ்சதும் நாயர் கடைக்கு ஓடாட்டி என்ன?'' என்று அலுத்துக் கொண்டாள் அஞ்சலையத்தை.

''அண்ணனுக்குப் பசி தாங்காதுன்னு உனக்குத் தெரியாதா அத்தை? அண்ணனுக்கும் சேர்த்து நாம கட்டுப்பாடா இருந்தாப் போச்சு'' என்றாள் வள்ளி.

''பிரமாதமா • அண்ணனுக்குப் பரிஞ்சுக்கிட்டு வரதைப் பார்த்தீங்களா அத்தை. ஏ வள்ளியக்கா, உன்னோட விரதத்தையும் கட்டுப்பாட்டையும் இனிமே கட்டி வச்சிடணும். படையல் படைச்சாச்சில்லே? படையல் சோறு இனிமே நமக்குத்தான். மூணு பேரும் எங்காவது நல்ல எடமாப் பார்த்து உக்காந்து சாப்பிடலாம்'' என்றாள் மங்கா.

சற்றுத் தூரத்தில் நாலைந்து தேவதாரு மரங்கள் சேர்ந்தாற்போல் வளர்ந்திருந்தன. அங்கு சென்று நீர்த்தேக்கத்தைப் பார்த்தவாறு மூவரும் உட்கார்ந்து கொண்டு படையல் பொங்கலைப் பகிர்ந்து சாப்பிட ஆரம்பித்தனர்.

''அக்கா, அதோ பாரு!'' என்றாள் மங்கா திடீரென்று.

வள்ளி அவள் காட்டிய திசையில் பார்த்த போது தூரத்தில் நீர்த்தேக்கப் பரப்பிலே சென்று கொண்டிருந்த உல்லாசப் படகு அவள் கண்களுக்குப் புலனாயிற்று.

(தொடரும்)

இனிய தமிழ் புத்தகங்களை படித்து

அனுபவிக்க இதோ ஓர் அரிய வாய்ப்பு!

# உங்கள் வீட்டிலேயே உங்களுக்குச் சொந்தமாக ஓர் நேர்த்தியான "வீட்டு நூலகம்" அமைக்க

தென் மொழிப் புத்தக டிரஸ்ட்
25, ஸ்டர்லிங் ரோடு, சென்னை-34




SOUTHERN LANGUAGES
BOOK TRUST

# அளிக்கும் திட்டம்

## முதலீடு மாதம் ரூபாய் 5-00 மட்டுமே!

18 மாதங்களில் ரூ. 90.00 மதிப்புள்ள நீங்களே இஷ்டப்பட்டு தேர்ந்தெடுத்த அரிய பல தமிழ் நூல்களும் மற்றும் ரூ. 20.00 மதிப்புள்ள 12 பரிசு நூல்களும் அடங்கிய அழகிய நூலகம் உருவாகிவிடும்.

### இத் திட்டத்தின் சீரிய அம்சங்கள்:

* சிக்கல்கள் அற்ற சுலபமான வழி.
* வேண்டிய புத்தகங்களை தேர்ந்தெடுக்க உதவியாக 75க்கு மேற்பட்ட புத்தகப் பதிப்பாளர்களின் பல அரிய புத்தகங்களின் பட்டியல் இலவசமாக தரப்படுகிறது. சென்னை வாசிகள் டிரஸ்டின் அலுவலகத்திற்கு நேரில் விஜயம் செய்தும் வேண்டிய புத்தகங்களை தேர்ந்தெடுக்கலாம்.
* நாவல், நாடகம், வரலாறு, சரித்திரம், சமயம், விஞ்ஞானம், இலக்கியம், ஓவியம், காவியம் சிறுவர் இலக்கியம் போன்ற எல்லாவித புத்தகங்களும் உள்ளன.
* திட்டத்தில் சேரும் நேயர் மாதச் சந்தாவான ரூபாய் ஐந்தைத்தவிர தபால் செலவு போன்ற எவ்விதச் செலவையும் ஏற்கவேண்டாம்.
* டிரஸ்டின் மாத வெளியீடான "புத்தக நண்பன்" என்னும் சஞ்சிகைப் பிரதி ஒன்று அங்கத்தினர்களுக்கு ஒவ்வொரு மாதமும் இலவசமாக அனுப்பப்படுகிறது.
* 18 மாதங்களில் 12 பரிசுப் புத்தகங்களும் கிடைக்கின்றன.

கீழே கொடுத்துள்ள திட்ட விவரங்களை படித்து உடனே அங்கத்தினராக சேருங்கள்.

1. முதல் மாத சந்தாவான ரூ. 5.00 தென் மொழிப் புத்தக டிரஸ்டாருக்கு கிடைத்தவுடன் சந்தாதார் இத் திட்டத்தின் அங்கத்தினராகப் பதிவு செய்யப்பட்டு அவருக்கு கீழே கண்டவை தபால் மூலம் அனுப்பப்படும்:
   a) பதிவு செய்யப்பட்ட அங்கத்தினர் என்ற ஒரு சீட்டு.
   b) பரிசு புத்தகங்கள் மூன்று. (விளம்பரத்தில் காட்டியுள்ள 10 புத்தகங்களிலிருந்து நீங்கள் தேர்ந்தெடுக்கும் 3 புத்தகங்கள்).
   c) ஒரு பெரிய புத்தகப் பட்டியல்.
   d) டிரஸ்டின் மாதவெளியீடான "புத்தக நண்பன்" என்ற சஞ்சிகையின் பிரதி ஒன்று. (இப் பிரதி தொடர்ந்து ஒவ்வொரு மாதமும் இலவசமாக அனுப்பப்படும்.)
2. 6 மாத சந்தா தொகை செலுத்திய பிறகு அங்கத்தினர்களுக்கு டிரஸ்டார் கீழ்க்கண்டவைகளை அனுப்புவார்கள்:
   a) ரூ. 25.00 மதிப்புள்ள புத்தகங்கள்.
   b) பரிசு புத்தகங்கள் மூன்று.

   மேற்கண்டவைகளைப் பெற, அங்கத்தினர்கள் ஏற்கனவே பெற்ற புத்தகப் பட்டியலிலிருந்து சுமார் ரூ. 75-00 மதிப்புள்ள புத்தகங்களைப் பொறுக்கி அதோடு பரிசுப் புத்தகங்கள் லிஸ்டிலிருந்து தனக்கு விருப்பமான 3 புத்தகங்களையும் குறிப்பிட்டு டிரஸ்டுக்கு தெரிவிக்க வேண்டும். இத் தகவல் கிடைத்தவுடன் டிரஸ்டார் ரூ. 25.00 மதிப்புள்ள புத்தகங்களும் 3 பரிசு புத்தகங்களும் அங்கத்தினருக்கு எவ்வித செலவுமின்றி அனுப்பி வைப்பார்கள்.
3. 12 மாத சந்தா செலுத்திய பிறகு அங்கத்தினருக்கு டிரஸ்டார் மறுபடியும் ரூ. 30·00 மதிப்புள்ள அங்கத்தினரே தேர்ந்தெடுத்த புத்தகங்களும், மேலும் 3 பரிசு புத்தகங்களும் அனுப்பி வைப்பார்கள். இவைகளைப் பெற அங்கத்தினர் மேற்சொன்னபடி செய்யவேண்டும்.

4. 18 மாத சந்தா தொகை முழுவதும் செலுத்திய பிறகு அங்கத்தினருக்கு மேலும் ரூ. 35.00 மதிப்புள்ள புத்தகங்களையும், 3 பரிசு புத்தகங்களையும் டிரஸ்டார் அனுப்பி வைப்பார்கள். இவைகளைப் பெற அங்கத்தினர் முன் செய்ததுபோல் செய்யவேண்டும்.

5. 18 மாதங்களுக்கும் சந்தா செலுத்த முடியாமற்போன அங்கத்தினர்களுக்கு, அவர்கள் செலுத்திய தொகையளவு மதிப்புள்ள புத்தகங்கள் அனுப்பப்படும். இவ்வங்கத்தினர்கள் புத்தகங்களுக்கான பாக்கிங் மற்றும் தபால் செலவையும் ஏற்கவேண்டும்.

**இத் திட்டத்தில் சேர்ந்து 18 மாதங்களும் சந்தா செலுத்தும் அங்கத்தினர் அடையும் லாபம் என்ன!**

| | | | |
|---|---|---|---|
| i) அங்கத்தினர் தேர்ந்தெடுக்கும் புத்தகங்களின் மொத்த மதிப்பு | ... | ரூ. | 90.00 |
| ii) 12 பரிசு புத்தகங்களின் மதிப்பு | ... | ரூ. | 20.00 |
| iii) இலவசமாகப் பெறும் புத்தகப் பட்டியலின் மதிப்பு | ... | ரூ. | 1.00 |
| iv) இலவசமாகப்பெறும் ''புத்தக நண்பன்'' 18 பிரதிகளின் மதிப்பு | ... | ரூ. | 9.00 |
| v) பாக்கிங், தபால் செலவு இலவசம் | ... | ரூ. | 10.00 |
| | | ரூ. | 130.00 |
| அங்கத்தினர் செலுத்தும்தொகை | | ரூ. | 90.00 |
| அங்கத்தினர் அடையும் லாபம் | | ரூ. | 40.00 |

**இலவசம்! இப் பத்து புத்தகங்களில் ஏதேனும் மூன்று!**


காதல் வாழ்க்கை


ஏழாவது குதிரை


வளரும் விஞ்ஞான வித்தைகள்


ராசாசீத சித்பிகள்


அரசியல் கைதி
முதளிப லக்சர் சிறுகதைகள்


மிருகங்களுடன் 3 மணி


புதுத் தமிழ்க் கவி மலர்கள்


ரதோத்சவம்


நிலம் தரும் செல்வம்


தாயார் கொடுத்த தனம்

**கீழ்க்கண்ட கூபனை உடனே பூர்த்தி செய்து அனுப்பி அங்கத்தினர் ஆகுங்கள்:**

## தென் மொழிப் புத்தக டிரஸ்ட்
### 25, ஸ்டர்லிங் ரோடு, சென்னை-34

ஐயா,

''வீட்டு நூலகம்'' அமைக்கும் உங்கள் திட்டத்தில், அதன் நிபந்தனைகளுக்குட்பட்டு, அங்கத்தினராக சேர விரும்புகிறேன். இதற்கான முதல்மாத சந்தாவான ரூ. 5.00 மணியாடர் மூலம்* அனுப்பியுள்ளேன். விளம்பரத்தில் காட்டியுள்ள பத்து பரிசு புத்தகங்களில் எனக்குப் பிடித்த மூன்று புத்தகங்களின் பெயர்களை கீழே கொடுத்துள்ளேன்.

1

2

3

பெயர் ....................................

ஊர் : ....................................

கையொப்பம் ....................................

தேதி : ....................................

முழு விலாசம் ....................................

....................................

*குறிப்பு : சந்தா தொகை எப்பொழுதும் மணியாடர் மூலம் தான் அனுப்பப்பட வேண்டும். சென்னையில் வசிக்கும் அங்கத்தினர் சந்தா தொகையை டிரஸ்டின் அலுவலகத்தில் நேரில் கட்டி ரசீது பெற்றுக் கொள்ளலாம்.
வரும் பொங்கல் தினத்துக்குள் அங்கத்தினராக சேருவோருக்கு அதிகப்படியாக ஒரு பரிசு புத்தகம் அளிக்கப்படும்.

# ஊர் வம்பு

□ மிக்லோஸ் ஹுபாய்

□ ஐயப்பனோடு ஐம்பது நாட்கள்

நாடகத் துறை முழுதும், சர்க்கார் அல்லது நகரசபையின் ஆதிக்கத்தில்தான் இருக்கிறது. தொழில்முறை நாடகக் குழுக்களுக்கான நிர்வாகிகளை இந்த நிறுவனங்கள் தான் நியமிக்கின்றன.

நாடகக் குழுக்களுக்குக் கணிசமான மானியங்கள் அளிக்கப்படுகின்றன. நடிகர்கள், டெக்னீஷியன்ஸ் முதலியவர்களுக்குச் சர்க்காரோ, நகரசபையோ மாதாந்திர ஊதியம் அளிக்கிறது. நடிகர்களுக்குத் திறமைக்குத் தகுந்தவாறு ஊதியம் வழங்கப்படுகிறது.

நாடக நடிகர்கள், சினிமா, ரேடியோ போன்ற துறைகளிலும் ஈடுபடுகிறார்கள். அவர்கள் வாழ்க்கைத்தரம் உயர்ந்திருக்கிறது.

நாடக ஆசிரியர்களுக்கு மாதாந்திர ஊதியம் கிடைக்காது. அதற்குப் பதிலாக, அன்றாட வசூலில் பத்து சதவிகிதம் ஒதுக்கி விடுகிறார்கள்.

நாடகங்கள் முன்கூட்டியே தணிக்கை செய்யப்படுவதில்லை. ஆனால் ஆட்சேபகரம் என்று கருதப்படும் எந்த நாடகத்தையும் தடை செய்ய, சர்க்காரின் கலாசாரக் கல்வி மந்திரிக்கோ நகரசபைக்கோ உரிமை உண்டு. தடை செய்யுமுன் ஆட்சேபகரமானது என்று நிரூபிக்கும் பொறுப்பு அவர்களுக்கு உண்டு. நாடகக் குழு நிர்வாகியுடன் கலந்து விவாதித்த பிறகே ஒரு முடிவுக்கு வர வேண்டும்.

புத்தகங்களைச் சர்க்கார் பதிப்பகங்களே வெளியிடுகின்றன. ஆசிரியர்களின் சுதந்திரம் கட்டுப்படுத்தப்படவில்லை என்றாலும் அந்த ஆசிரியர், ஒரு குறிப்பிட்ட எல்லையைத் தாண்டமாட்டார் என்றே எதிர்பார்க்கப்படுகிறது. பிரசுரிப்பதற்கு இதுதான் சன்மானம் என்று முன்கூட்டியே நிர்ணயிக்கப்படுவதில்லை. புத்தகத்தின் பக்கங்களைப் பொறுத்தும் அதன் விற்பனையைப் பொறுத்தும் சன்மானம் அளிக்கப்படுகிறது.

"இதென்ன? இதெல்லாம் புதுமையான செய்திகளாக இருக்கின்றனவே!" என்று வியப்படைய வேண்டாம்.

மேலே கண்டவையனைத்தும் ஹங்கேரிய நாட்டில் அமுலில் இருக்கும் நடைமுறைகள். சமீபத்தில் அந்த நாட்டிலிருந்து பாரதத்துக்கு விஜயம் செய்திருந்த கலாசாரக் குழுவைச் சேர்ந்த மிக்லோஸ்ஹுபாய் (Miklose Hubay) என்னும் நாடக ஆசிரியரைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தபோது அவர் சொன்ன விஷயங்கள்தாம்!

சென்னையிலிருக்கும்போது இரண்டு தமிழ் நாடகங்களைப் பார்க்க விரும்பினார். அவர் பார்த்த நாடகங்கள் மாலிக்காபூரும் எதிர் நீச்சலும்.

இங்கே நாடகத் துறையில் இளைஞர்கள் நிறைய இடம் பெறுகிறார்கள் என்று மகிழ்ச்சியடைந்தார். 'மாலிக்காபூரி'ல் — காட்சி அமைப்புக்களும், 'எதிர் நீச்சலி'ல் சோகம் ஹாஸ்யம் ஆகிய மாறுபட்ட உணர்ச்சிகளின் மோதல்களும் அவரைப் பெரிதும் கவர்ந்தனவாம்.

ஹுபாய்க்கு ஆங்கிலம் பரிச்சயமில்லை. ஃபிரெஞ்சு மொழியில் சரளமாகப் பேசுகிறார். அவர் ஆங்கிலத்திலேயேதான் நமக்குப் பதில் சொல்கிறார் என்ற உணர்ச்சியைத் தோற்றுவித்தவர், மொழிபெயர்ப்பாளராக உதவிய இளைஞர் சம்பத்.

சென்னை மாநிலக் கல்லூரி ஆங்கில ஆசிரியர் திரு ஜகதீசன், நாடகத் துறையில் ஈடுபட்டிருக்கும் சிலருக்கு மிக்லோஸ் ஹுபாயை அறிமுகப்படுத்தும் பணியை மேற்கொண்டார்.

தேநீர் விருந்தோடுகூட, இந்தக் கருத்து விருந்துக்கு அவர் ஏற்பாடு செய்து முப்பது பேர்களுக்கு மேலாக அழைப்பு விடுத்திருந்தும், வந்திருந்தவர்கள் என்னவோ ஒன்பது பேர்கள்தான்.

தலைகள் குறைந்தாலும் கலையைப் பற்றி ஆர்வம் குன்றாமல் பேசினார் ஹுபாய்!

— கோமதி சுவாமிநாதன்



1. ஜகதீசன். 2. மிக்லோஸ் ஹுபாய். 3. சம்பத்.

ஐயப்ப பக்தர்கள் சுமார் ஐம்பது பேர்கள் முன்னிலையில் 'ஐயப்பனோடு ஐம்பது நாள்' புத்தகத்தை வெளியிட்டார் ஷெரீப் மருதைப் பிள்ளை. தொழில் மந்திரி திரு ஆர். வெங்கடராமன் தலைமை தாங்கினார். 'ஒரு முறை மேனாடு சென்றவர்கள் ஏழு புத்தகம்! எழுதி விடுகிறார்களே ஏழு முறை போய் வந்தவர் ஒரு புத்தகம்கூட எழுதக் காணோமே?' என்று தொழில் மந்திரியைக் கேட்டவர்கள் நிறைய உண்டாம். "நான் ஒவ்வொரு முறையும் மேல்நாடு

சென்று திரும்பிய பிறகு இங்கு உருவாகும் ஒவ்வொரு தொழிலகமும் நான் எழுதிய ஒரு புத்தகம் என்று வைத்துக் கொள்ளுங்கள்! அப்போது தெரியும் நான் எழுதிய புத்தகங்கள் எவ்வளவு என்று!'' இப்படி மறுமொழி கூறினார் மந்திரி வெங்கடராமன் அன்று.

திரு காமராஜருடன் ருஷ்யா சென்று திரும்பிய பிறகுதான் முதல் முறையாக எழுத ஆரம்பித்திருப்பதாகத் தெரிவித்து விட்டு, 'பக்தி செலுத்துவதால் பயன் என்ன?' என்று தர்க்கம் செய்பவர்களுக்கு விஞ்ஞான ரீதியாகவும் பதில் சொல்ல முடியும் என்று நிரூபித்தார் மந்திரி. பூஜையிலிருக்கும் போது ஒருவருடைய நாடித் துடிப்பு, ரத்த அழுத்தம், நரம்புகளில் பாயும் உணர்ச்சி, அலைகளின் வேகம் போன்றவற்றை நவீன விஞ்ஞான உபகரணங்களைக் கொண்டு பரிசீலித்துப் பார்க்கட்டும்! உடலுக்கு ஆரோக்கியம் அளிக்கக்கூடிய வகையில் அவற்றில் மாறுதல்கள் உண்டாவதை விஞ்ஞானிகள் காண்பார்கள். ஆகவே அமைதியான பக்தி, பூஜை முதலியவை ஆன்மாவுக்கு மட்டுமின்றிச் சரீரத்துக்குமேகூட நன்மை பயக்கக் கூடியதுதான்; என்றார்.

ஆனால் இது உணர்ச்சி வசப்பட்டு, உடல் பதறும் ஐயப்ப பக்தர்களுக்குப் பொருந்துமா என்பது யோசிக்க வேண்டியவிஷயம்அல்லவா?

எழுத்தாளர் சங்கத் தலைவர் அகிலன் புத்தகத்தைப் படித்துவிட்டு வந்ததால் புத்தகத்தைப் பற்றி நிறையப் பாராட்டிப் பேசினார்.

கிடைக்குமிடம்: சாஸ்தா பப்ளிகேஷன்ஸ், சென்னை—53.

---




ராமருக்குக் கோயில் உண்டு. கேள்விப் பட்டிருக்கிறோம். ஆனால் சீதைக்கென்று கோவில் உண்டா? உண்டு! ஈழ நாட்டில் இருக்கிறது. ராவணன் ஆண்ட இலங்கை கடலில் மூழ்கி விட்டது என்று சிலர் கூறிய போதிலும், ''இராவணன் எல்லா'' (இராவணன் குகை) ''சீதாவாகா'' (சீதை ஆறு) ஆகியவை நுவார் எலியா பக்கவில் உள்ளன. முதலாம் ராஜசிம்மன் என்ற இலங்கை அரசன் அந்த இடத்தைத் தலைநகரமாகக் கொண்டு கோவிலும் கட்டினானாம். பிறகு போர்த்துகீசியர் காலத்தில் இக் கோயில் சின்னாபின்னமாக்கப்பட்டுவிட்டது. இந்த இடத்தை ''சீதா எலியா'' (சீதையின் ரோடு) என்று அழைக்கின்றனர். அழகான நிலப் பரப்பு, பலவிதமான மரங்களும், ஓடைகளும், நீர்வீழ்ச்சிகளும், பசுமையான புல்வெளிகளும் இவ்விடத்தை அழகு செய்கின்றன. நுவார் எலியா செல்லும் ரஸ்தாவில், தரை மட்டத்துக்குக் கீழ்ப் பள்ளத்தில் சீதை அம்மன் கோவில் உள்ளது. இங்குதான் சீதை வைக்கப்பட்டிருந்த அசோக வனம் இருந்ததாம். பக்கத்திலுள்ள ஹக்கால தாவர இயல் பூங்காவில் மிகப் பெரிய அசோக மரங்களைக் காணலாம். இக்கோவில் சமீப காலத்தில் கட்டப் பட்டிருக்க வேண்டும். செங்கல்லும் கருங்கல்லும் சுண்ணாம்பும் தகரமும் போட்டுக் கட்டப் பட்டுள்ளன. கோவிலுக்குப் பின்னால் ஒரு சிறு ஓடை ஓடுகின்றது. ஓரிடத்தில் ஓடை பூமிக்குள் மறைந்து மீண்டும் வெளிவருகிறது. பக்கத்தில் உள்ள மரத்தின் தழைகளைப் பறித்து ஓடையில் போட்டால் அவை உள்ளே சென்று விடுகின்றன. சுமார் ஐம்பது அடி நீளமுள்ள இப்பாதாள வழி தங்களுடைய மனத்தில் உள்ள எண்ணங்கள் பலிதம் அடையுமா அடையாதா என்று கண்டுபிடிக்க உதவுகின்றது. இந்த ஓடையில் புஷ்பத்தைப் போட்டு ஆவலுடன் வெளி வருவதை எதிர்பார்த்து நிற்கின்றனர்.





சீதை அம்மன் கோவிலுக்குள் சீதை, ராமர், லக்ஷ்மணர், ஹனுமான் முதலியோர் சிலைகள் உருவில் எழுந்தருளியுள்ளனர். இக்கோவிலைக் கட்டியவர் நூறு ஆண்டுகளுக்கு முன் கேரளத்திலிருந்து வந்த சுவாமி சிவமயம் என்று கூறுகிறார்கள். — **என். ராமகிருஷ்ணா**

## அத்தியாயம் 23

# கல்யாணப் பரிசு




கண்ணன் பிறந்தது கிருஷ்ணாஷ்டமியின் நடுநிசியில்தானே! அதே வேளையைத்தான் அவன் திருமண முகூர்த்தமாகவும் நிச்சயித்திருந்தான் போலும். அதற்காகத்தான் குழலிசைக் கானத்தைக் காற்றிலே அனுப்புகிறான். முன்பு கோபியரை ராஸ லீலைக்கு அழைக்கவும் வேணுகானத்தைத் தானே காற்றில் அனுப்பினவைத்தான்? குழலிசையைக் கேட்கக் கேட்க மீராவின் நெஞ்சு நெக்குருகியது. எத்துணை காலமாயிற்று அந்த அமிருதப் பிரவாகத்தில் நனைந்து! பண்டைக் காலத்தை நினைவு கூர்ந்தான். பிஞ்சுப் பருவத்தில் இவள் துளசிச் சரத்தை எடுத்து அவனுடைய வேணுவுக்குள் திணித்தான். "நீ என்று என்னைக் கல்யாணம் செய்து கொள்ள மனம் வைக்கிறாயோ, அன்றைக்கு இந்தச் சரத்தைக் குழலிலிருந்து எடுத்து என் கழுத்தில் வரமாலையாகப் போடு. அன்றைக்கே நானும் இந்தக் காலியான குழலுக்குள் சப்த ஸ்வரங்களாகப் புகுந்து கொள்வேன்" என்றான். அதன் பிறகு அவன் அவளைக் கள்ளத்தனமாக — அவள் அறியாமலே — கல்யாணம் செய்து கொண்டான். இன்றோ அவளறியுமாறே திருமணம் செய்துகொள்ளப் போகிறானும்! ஆகா, கிட்டக் கூடிய அநுபவமா அது! மீரா தன் கழுத்தைப் பார்த்துக் கொண்டான். அதில் துளசிஹாரம் மணந்து கொண்டிருந்தது. கர்ப்பக்கிருஹத்தைப் பனித்த கண்களுடன் பார்த்தாள் மீரா.

விக்கிரகத்திலிருந்து பரந்தாமனே திருமணக் கோலத்தில் இறங்கி வந்தான் — குழலூதியபடி, அதற்கேற்ப நடமாடியபடி.

அவளருகே வந்து "நீ எல்லா விதத்திலும் என்னைப் போலவே ஆகி விட்டாய்! நான் உருவமுள்ளவன் என்றார்கள் சிலர்; உருவமற்றவன் என்றார்கள் சிலர்; நான் ஒரு நிலையில் உருவுள்ளவன்; இன்னொரு நிலையில் உருவற்றவன் என்றும் பிறிதொரு சாரார் கருதினார்கள். அநுபூதிமான்களோ நான் ஒரே சமயத்தில் உருவுள்ளவனாகவும் உருவற்றவனாகவும் இருக்கிறேன் என்று கண்டார்கள். இதேபோல் 'நீதான் என் குழலின் கானம்; ஒன்று நீ ராதாவாக, ஆண்டாளாக, மீராவாக இருக்க முடியும், அல்லது என் குழலிசையாக இருக்க முடியும்' என்று நான் நினைத்து வந்தேன். இப்போதோ நீ ஒரே சமயத்தில் என் கானமாகவும் இருக்கிறாய், மீராவாகவும் இருக்கிறாயே அதெப்படி?" என்றான் கண்ணன்.

"கிரிதரா, நீ மகா தற்பெருமைக்காரன். நானே கானமாகி விட்டால் உன் கானத்தைக் கேட்டு உன் நாத வித்தகத்தைப் பாராட்ட முடியாது என்பதால் என்னையே இரண்டாகப் பகுத்து மாயம் செய்கிறாய். உன் மாயம் இப்போது எனக்கு வேண்டாம்; நீ செய்யக் கூடிய சத்தியம்தான் வேண்டும்."

"அதென்னது நான் செய்யக் கூடிய சத்தியம்?"

"வேறென்ன? என்னை மணப்பதுதான்" — வெட்கம் விட்ட மீராவுக்குக் கூட இதைச் சொல்லும்போது முகம் கவிழ்ந்தது.

"நானும் உன்னை மணக்கத்தான் வந்தேன். ஆனால் மீரா, யோசித்துப் பார்த்தால் இதெதற்கு. நீசமான தேக உறவு என்றுதான் தோன்றுகிறது!"

"என்ன பிதற்றல் பிதற்றினாய்?" என்று வெகுண்டெழுந்த மீரா கண்ணனின் வாயைப் பொத்தினாள். அவனுடைய பட்டு இதழ்கள் தனது கையில் பட்ட இன்ப அநுபவத்தையும் மறுத்துவிட்டுத் தொடர்ந்து பேசினாள்:

"கிருஷ்ணா, நீ என்னைச் சோதிக்கதற்கு அளவேயில்லை. இனியும் சோதிக்க முடியும் என்று நினைக்காதே. என் சித்தத்தைக் குழப்ப வேண்டும் என்றுதானே உன்னைக் கூடுவது நீசமான தேக உறவு என்கிறாய்? உன் உடலைக் கூடுவதும் மானுட காயத்தைக் கூடுதலும் ஒன்றுக்கொன்று தொடர்பே இல்லாத விஷயம் என்று எனக்குத் தெரியாதா என்ன? உன்னைக் கூடுவது நீசமாயின் நைஷ்டிக பிரம்மசாரியான நாரதர், காந்தாசக்தி என்ற நாயக — நாயிகா பாவத்தைப் பக்தியின் சிகரமாக வைப்பாரா? உன் தேகத்தைச் சேர்வது பௌதிகமான சிற்றின்பமாயின் பிரம்மசரியத்தின் உருவமான சுகதேவர் கோபியருடன் நீ செய்த ராஸ லீலையை மோக்ஷ இன்பமாகப் பாடி விருப்பாரா? கிருஷ்ணா, உன் மர்மம் எல்லாம் அறிந்தவன் நான். உன் உடல் இன்னது என்பதை அறிந்தவள் நான். உன் உயிர் வேறு, உடல் வேறு அல்ல. கவிதையில் எப்படிச் சொற்கள் கருத்தைப் பொதிந்து கொண்டிருக்கின்றனவோ — சொல்லையும் கருத்தையும் எப்படிப் பிரிக்க முடியாதோ — அப்படியே தத்துவத்தைப் பொதிந்து கொண்டு அதிலிருந்து பிரிக்கவொண்ணாமல் திகழ்வதல்லவா உன் திருமேனி? மந்திரங்களேயன்றோ உன் எலும்புகள்? ஸ்வரங்கள் அன்றோ உன் உடலணுக்கள்?




கருதியல்லவா உன் குருதி? ஆத்மா — உடல் என்ற மாறுபாடு ஜீவர்களுக்குத்தானே ஒழிய உனக்கல்லவே! உனது லீலைகள், குணங்கள், நாமம், ரூபம், யாவுமே சச்சிதானந்தமல்லவா? நீ சுந்தரமாக இருக்கிறாய் எனில் அந்தச் சௌந்தரியத்தை நாயகி பாவத்தில் அன்றி வேறெப்படி அநுபவிக்க முடியும்? நீ தாயாகவோ, தந்தையாகவோ, குருவாகவோ அருள் புரிய வேண்டுமாயின் இந்தச் சுந்தர ரூபம் தேவையில்லையே! அழகில்லாவிடினும் தாயையும் தந்தையையும் குருவையும் நாடிவிடுவோமே! உனக்குச் சௌந்தரிய ரூபம் இருக்கிறதென்றால் அது நாங்கள் நாயகியாக இருந்து அநுபவிப்பதற்காகவே ஏற்பட்டதுதானே? ஆம், இதை நீயேகூட மாற்ற முடியாது. உன்னுடைய இனிய அதரங்கள் அநுபவிக்கப்படாமல் போகலாமா? உனது கோமள மேனி அநுபவிக்கப்படாமல் போகலாமா? உனது பிரேமை பொங்கும் பார்வைக்குத் தக்க பாத்திரமின்றி அது வீண் போகலாமா? கண்ணா, நீ பயனற்றவனாக இருக்க முடியாதெனில் உன் சௌந்தரியமும் பயனற்றதாக இருக்க முடியாது. அவ்வாறெனில் நாங்கள் உன் நாயகியாகத்தான் இருந்து தீர வேண்டும். சௌந்தரியத்தின் மூலமே நாங்கள் சச்சிதானந்தபதம் பெறுவதைத் தடுத்துச் சோதிக்காதே'' என்று ஆவேசமாகப் பொழிந்து தள்ளினாள் மீரா.

''எல்லாம் சரிதான். என்னிடம் தத்துவமும் உருவமும் பிரிக்க முடியாமல் ஒன்றியிருக்கலாம். ஆனால் உன் விஷயம் என்ன? உன்னுடைய கரசரணாதி அங்கங்கள் மானுடமானவைதாமே! அவற்றால் நீ எப்படி என்னைத் தூய்மையுடன் சேர இயலும்?'' என்று மடக்கினான் கண்ணன்.

''மீரா ஏமாளியில்லை கண்ணா, ஏமாளியில்லை'' என்று உத்வேகத்துடன் மொழிந்தாள் அவள். ''என் தேகம் மானுடமான, பௌதிகமான, லௌகிகமான நாற்றக் குடில்தான். அதனால் நான் மற்ற மானுடர்களுடன் தொடர்பு கொள்வதும் நீசமானதுதான். ஆனால் செம்மண்ணில் கலந்த நீர்போல் உன்னிடம் சேர்ந்தவுடன் என் அங்கங்களும் உன் செம்மையைப் பெற்று விடுமே ஸ்வாமி! அனலில் விழுந்த கரியும் அனலாவது போல் உன்னைச் சார்ந்தபின் என் பௌதிக தேகமும் தத்துவமயமாக அன்றோ ஆகிவிடும்? ஸ்பரிசவேதியில் தங்கியவுடன் இரும்பும் பொன்னாவதுபோல் உன்னைத் தொட நினைத்தவுடன் என் மேனியும் உன் மயமாக — தன்மயமாக அல்லவா ஆகிவிடும்?'' மீரா உறுதி நிறைந்த குரலில் மாதுரிய பாவத்தின் லக்ஷணத்தை அறுதியிட்டுக் கூறினாள்.

அப்புறம் கண்ணன் அவளைத் திருமணம் செய்து கொள்வதன்றி வேறு வழியில்லை!

ஆகா, அது எப்பேர்ப்பட்ட அற்புதத் திருமணம்!

வேதமந்திரங்களும் காண முடியாத வேதநாயகன் மந்திரங்களைத் தன் மணிமுகத்தால் கூறி, மந்திரத்வனியும் அதன் சக்தியும் ஒன்றுவதுபோல் மீராவை மணந்தான்.

மீராவின் நிலவு நிறக்கரத்தைக் கண்ணனுடைய செந்தளிர் உள்ளங்கை பற்ற, அவளது வானவண்ணப் புறங்கை அதற்கு உறையிட்ட போது சகலப் பிரம்மாண்டங்களுக்குமே தங்களைக் காக்கும் கரமொன்று இதமாகப் பிடித்து விடுவது போலிருந்தது.

ஆம், அது அண்டசராசரங்கள் அனைத்திலும் நிகழ்ந்த திருமணம்.

சகல புவனங்களிலும் நாதமென்ற தோரணம் நாட்டிட, ஊர்வலத்துக்குப் பதில் பிரபஞ்சத்தையே பவனி வந்தான் மாப்பிள்ளை மாதவன், இந்திரன் உள்ளிட்ட தேவர் குழாம் தொடர.

உலகைத் தாங்கும் ஆதிசேஷனையே மங்கல சூத்திரமாக்கி மீராவின் கழுத்தில் கண்ணன் அணிவிக்க, அனந்தனின் முடியில் ஒளிர்கின்ற நாகரத்தினங்களே திருமாங்கல்யமாகப் பிரகாசித்தன.

ஸப்தபதியில் மீராவின் அடியை மாதவன் தன் கரத்தால் பற்றி ஏழு முறை எடுத்து வைக்கும் போது பூலோகம், புவர்லோகம், ஸுவர்லோகம், மஹர்லோகம், ஜனலோகம், தவலோகம், சத்தியலோகம் — இந்த ஏழிலுமே அவள் உலாவினாள். ஸப்த ஸ்வர உலகில் சஞ்சரித்தாள்.

சூரியனை வேள்வித் தீயாக்கி நட்சத்திரக் குவியல்களை அவல் பொரிகளாக வாரி எடுத்து மீராவும் கண்ணனும் லாஜஹோமம் செய்தனர்.

சந்தியாகாலத்தை அள்ளி எடுத்து மீராவுக்கு நலுங்கிட்டான் நாரணன். சந்திரனைச் சந்தனமாக்கி அவனுக்குப் பூசினாள் மீரா.

உலகங்களையே பந்தாக்கி இருவரும் உருட்டிக் கொண்டார்கள்.

அகிலாண்ட கோடிப் பிரம்மாண்ட நாயகனின் நாயகியாக அவனோடு விசுவவெளியில் நடனமாட முன் வந்தாள் மீரா.

''இரு மீரா! 'காதலும் பிரேமையும் காற் சிலம்பாக்கி' ஆடப் போவதாகப் பாடினாயே! இதோ, கல்யாணப்பரிசாக உனக்குக் காற்

சிலம்பு தருகிறேன். அதைக் கட்டிக்கொண்டு ஆடு'' என்றான் மாதவன்.

கலகலவெனச் சிரித்தான். அந்தச் சிரிப்பே கிண்கிணிப் பரல்களாயின. மீரா ஆனந்தக் கண்ணீர் வடித்தாள். அந்த முத்துக்களின் இனிமையையும் தனது சிரிப்பு மணிகளுக்கு ஊட்டி, அப்படியே சலங்கைச் சரமாக வாரி எடுத்து மீராவின் பாதத்தில் கட்டினான் புருஷோத்தமன்.

மீராவும் கண்ணனும் சராசரமனைத்துக்கும் அதிபர்களாகச் சஞ்சரித்து ஆனந்த நிருத்தம் புரிந்தார்கள்.

அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகனின் தனிப்பெரும் நாயகியாக இருந்து அடையும் இன்பம் மீராவுக்குத் திருப்தி அளிக்கவில்லை. எளிய மீரா அவனுக்கு எளிய முறையில் பணி செய்யவே ஆசைப்பட்டாள். கண்ணனை நோக்கிக் கானம் செய்தாள்:

பணியாளாய் என்னைப்
பணியாய் - ப்ரபுவே (பணி)

புனியாளாயிப் பண்செய்வேன் மன்னனை
மணிமலர்த் தோட்டம் வளர்ப்பேன்
பனிமலர் மாலையை அணியவரும் உன்னை
அநுதினமும் கண்டின்புறுவேன்

பிருந்தாவனமாய்க் கொடிவிடமைப்பேன்
எந்தாய் இனிதொழுந்தருள
விந்தை நிறைந்த உன் முந்தைய லீலையை
சுந்தரமாய்ப் பண்ணிசைப்பேன்

பதுகையருகிலே பசும் வனமெடுப்பேன்
நடுநடுவே பாதிவிடுவேன்
கண்டாங்கிச் சேலையைத் துண்டாக்கி அணிந்து
கண்டே உன்னை உள்ளம் களிப்பேன்

பவ்வியமாகப் பணி செயும் எனக்கு
திவ்விய தரிசனம் தருவாய்
ஊதியமாக உன் உள்நினைவளிப்பாய்
பக்தியை மானியம் அருள்வாய்

பீதக ஆடையும், தோகையும், மாலையும்
ஊதுகுழலுமணி நாதன்
தரிசனமும் உள்நினைவும் பக்தியும்
நிறைவு செய்யும் எந்தன் நெஞ்சை

தியானம் புரிந்திட யோகி வருவான் - உத்
தியான வனந்தனுக்கே
பத்தரும் முத்தரும் சித்தரும் வருவார்
நித்தம் சத்சங்கம் பெறுவேன்

இரைகடல் ஆழமும் குகையின(து)ஆழமும்
நிறைந்தவன் மீராநாதன்
ப்ரேமை நதிக்கரையில் ஞான நடுநிசியில்
ஸ்யாமளனும் வந்து நிற்பான்.

ராஜஸ்தான மகாராணி மீரா எளியவளாகத் தோட்டம் போடும்போது, அந்தத் தோட்டத்தைத் தேடித்தான் வலிய சாதனைகள் செய்யும் தவசியரும் வருவார்களாம்! ஆண்டவனோடு மெய்யடியாரையும் பச்சைப் புல்லைக் காட்டியே அவள் அழைத்துக்கொண்டு விடுவாளாம் — சாமானிய மாந்தர் பசுவை அழைப்பதுபோல்.

கண்ணன் சிரித்துப் பேசினான்: ''ஸ்வரங்கள் புஷ்பிக்கும் உன் இதயத்தைவிட எனக்கு வேறு நந்தவனம் எதற்கு மீரா? உன் இதயத்தில் என்றும் இருப்பேன். ஆனால் வெளிப்பட உன்னோடு இனி இருப்பதற்கில்லை. இதோ செல்கிறேன். இனியும் உன்னோடு பேசிக் கொண்டிருந்தாலும் ஊர் விழித்து விடும். உன் மானம் போய் விடும்.''

''மானமா? போவதா? சர்வ தர்மங்களையும் விட்டபோது என் மானத்தையும்....'' என்று தொடங்கிய மீரா நாக்கைக் கடித்துக் கொண்டாள். தர்மங்களைத் தான் விட்டதாகச் சொல்வதும் ஓர் அகம்பாவமாகவே அவளுக்குத் தோன்றியது. அதுவுமன்றித் தருமங்களை விடுவதென்பது முனைந்து முயன்று செய்கிற காரியமாகவும் அவளுக்குத் தோன்றவில்லை. 'இலையுதிர் காலத்தில் மெய்யாகவே மரங்கள்தாம் இலைகளை உதிர்க்கின்றனவா? அல்லது இலைகளே தாமாக மரத்தை விட்டு உதிர்கின்றனவா? தர்மங்களைச் சாதகன் விடுவதா? அவனுடைய பக்குவத்தால் தர்மங்களே சாதகனை விடுவதா?' மீராவுக்கு விளங்கவில்லை.

''மானமோ, அவமானமோ, அபிமானமோ எதுவானாலும் இனி உன் பொறுப்பு. கட்டின பெண்டாட்டியின் மானம் போகாமல் பெயரைக் காப்பாற்றிக் கொள்வது உன் சாமர்த்தியத்தில்தான் இருக்கிறது'' என்று சொல்லி மீரா இசைத்தாள்:

பாணிக்கிரகணம் செய்துவிட்டாய் - இனி
நாணம் காப்பதுன் கடன்நாதா
கடக்கவொண்ணுதசம் சாரக்கடலிடை
கப்பலாய் வந்தென்னைக் காப்பாய்.

துணை யிழந்தோரைத் தூக்கிவிடுவதில்
இணையில் வேந்தனே, இறைவனே
ஆதரவற்றவர்க்(கு) அரும்பலமாகி
போதகம் தந்திடும் ஜகத்குருவே

பக்தி செய்தவர்க்குப் பல்யுகமாக
சத்திய இன்பம் சாதித்தாய்
சரணத்திலே சரண்புகுந்த மீராவுக்(கு)
அரணாய் மானம் ரட்சிப்பாய்.

கண்ணன் இதற்கு ஒன்றும் விடை சொல்லவில்லை. கெட்டிக்காரன்! வரப்போவதை அறிந்திருந்ததால் வார்த்தையைக் கொடுத்து மாட்டிக் கொள்ளாமல் தப்பித்தான்.

மீராவிடமிருந்தே தப்பி மறைந்துவிட்டான் மாதவன்.

## அத்தியாயம் 24

# பைத்தியத் தம்பதி!

பலபலவென்று பொழுது விடிந்தது.

மீரா ஆலயத்திலிருந்து புறப்பட்டு மாளிகைக்கு நடந்தாள். அவளது நெஞ்சகத்தில் இரவு நடந்த அற்புதங்களே கமகமத்துக் கொண்டிருந்தன. 'சர்வேசுவரன் என்னை வந்து மணந்து கொண்டானா? அது கனவா, நனவா? கனவு என்று உலகம் நினைக்கும். ஆனால் அதைவிட நனவு தனக்கு எதுவுமில்லை.

மீராவின் எதிரே சௌபாக்கியதேவி சேடியர் புடைசூழத் தென்பட்டாள். துர்கா பரமேசுவரிக்குக் காலை வழிபாடு செய்ய 'பாய்ஜி ராஜ்' செல்கிறாள்.

கண்ணன் என்கிற சமத்துவத்தைப் புத்தம் புதிதாகக் கலியாணம் செய்து கொண்ட மீராவுக்கு அப்போது பாய்ஜி ராஜும்கூட அன்புருவாகவே தோன்றினாள். யாரிடம் எது சொல்கிறோம் என்பதுகூடத் தெரியாமல் மாமியிடம் சென்று ஒரே மகிழ்ச்சி பரவசமாக அவள் பாடினாள்.

சொப்பனத்தில் மணந்தாரம்மா!
ஒப்பரிய உலக நாயகர் என்னைச் (சொப்ப)

கனவினிலே மணந்தாரம்மா
தினம்தொழும் தினகர் நாயகர் என்னைச் (சொப்ப)
கண்ணிமைக்காத நான் கனவு காண்பதுமுண்டோ?
எண்ணிப் பார்த்தாலிது உண்மைதானோ அம்மா?

அத்தன் வருகையொன்றே சித்தத்திலே நிறைந்து
பித்தம் பிடித்தவளாய் நித்தம்வழி பார்த்தேன்
கனவோ? நனவோ? கன்னல் வில்வீசி
மணந்து கொண்டாரென்னை மன்னன் கோபாலன்

கங்கையினும் சிறந்து பொங்கும் அமுதில் - மண
மங்கை புரிந்தேன் உயர் மங்கலஸ்நானம்
பஞ்சடைந்த நெஞ்சில் ரஞ்சகம் நிறைந்து
மஞ்சள் பூசாமலே காஞ்சனமானேன்

மூப்பற்றதேவர் முப்பது கோடியுடன்
மாப்பிள்ளையாய் ஊர் ஒப்ப உலா வந்தார்
தோரண வீதியில் வாரணமென வந்து
பூரண சுமங்கலிப் பேறெனக் களித்தார்

ஊர்வலமானபின் ஆர்வமிக்க மீரா
நீர் வண்ணனைச் சேர்ந்தாள் பூர்வஜன்ம பாக்கியம்.

ஆண்டாள் தன் கனவுக் கல்யாணத்தை அருமை சகியிடம் கூறினாள். மீராவோ கொடுமை மாமியிடம் அல்லவா கூறினாள்? மீராவின் 'பிதற்றலை'க் கேட்கச் சகிக்காமல் சௌபாக்கியதேவி மேலே நடந்தாள்.

'ஆம், ஊர் உலகத்துக்குப் புரியாதுதான்! அவனைப் பற்றி முரண் முரணாக எத்தனை சொன்னார்கள்! அத்தனையும் தள்ளி அல்லவா அவனை நான் பெற்றுவிட்டேன்? அன்பைக் கொடுத்து அவனை விலைக்கு அல்லவா வாங்கி விட்டேன்? முன்னொரு சமயம் அவனுக்கு என்னை விற்றுக் கொண்டதாகவும், அவன் என்னை இன்னொரு கையில் மீண்டும் விற்றலும் அதை ஏற்றுக் கொள்வதாகவும் பாடினேன். ஆனால் இப்போதோ அவனுக்கு என்னால் ஒரு பயனும் இல்லை என்பதும், அவன் என்னை வாங்க வேண்டிய அவசியமே இல்லை என்பதும் தெரிந்து விட்டது. நான் தான் அவனை வாங்கியிருக்கிறேன். இந்த உண்மையை நாடு நகரம் அறிய நகரா முழக்கி அறிவிக்க வேண்டும் போல் உள்ளத்தில் நமைச்சல் எடுக்கிறதே!'

மீரா தன் நமைச்சலில் மாமியாரின் முன்பே ஓடி நின்றாள். ஆனந்த பாஷ்பத்தில் சிக்கிய புஷ்பக் குரலில் மீண்டும் பாடினாள்:

ராமனை வாங்கிவிட்டேன் - அம்மா
சியாமனை வாங்கிவிட்டேன்

இரகசியம் இல்லை; களவியல் இல்லை
முரசறைந்தே அவனை வாங்கினேன்

கருப்பன் என்றார் சிலர்; வெளுப்பன் என்றார் சிலர்
விரித்த கண்ணால் பார்த்து வாங்கினேன்.

கிராக்கி என்றார் சிலர்; மலிவு என்றார் சிலர்
தராசிலே நிறுத்து வாங்கினேன்

பெரியனென்றார் சிலர்; சிறியன் என்றார் சிலர்
சரிஎடை தவறாமல் வாங்கினேன்

பணிஅணி அனைத்தும் பாஜுபந்துவும்
பணமாய் அளித்தே வாங்கினேன்

விந்தை விற்பனையில் நந்தனைப் பெற்றது
முந்தைப் பிறப்பின் முறைமை.

சிலர் அவனைக் கருப்பு என்றார்களாம்; சிலரோ வெளுப்பு என்றார்களாம்! திருமாலாகப் பாவித்தவர்கள் கருப்பு என்றிருப்பார்கள்; பரமேசுவரனாகப் பாவித்தவர்கள் வெளுப்பு என்றிருப்பார்கள். மீராவோ அவனைத் திருமாலென்றோ, பரமேசுவரன் என்றோ ஒரு விதத்திலும் பெயரிட்டு, உருவத்தைக்

# மீசைமீது ஆசை!



''என்னுடைய நண்பர் திரு ம. பொ. சி.யின் அடர்ந்த மீசையைப் பார்த்து எனக்கும் ஆசை ஏற்பட்டது. ஆறு மாதம் வேலூர் சிறையில் இருந்தபோது நானும் அது மாதிரி மீசை வளர்த்தேன். ஆனால் அந்தப் பாரத்தை என்னால் தாங்க முடியவில்லை. அதை ம. பொ. சி. ஒருவரால்தான் தாள முடியும் என்று நான் முடிவு செய்தேன். அதனால் வளர்த்த மீசையை எடுத்து விட்டேன்!''

ராஜாஜி பிறந்த தின விழாவில் இத்தகவலை அண்ணாவே வெளியிட்டபோது பலத்த சிரிப்பொலி எழக் கேட்டானேன்!

தகவல்: நாகை வே. ஜெயராமன்

கட்டுப்படுத்திப் பார்க்கவில்லை. அதனால் அவள் அன்பு என்ற வண்ணமாகவே அவனைக் கண்டாள். அந்த வண்ணத்தில் தானும் ஊற விரும்பினாள். இதுதான் அவளுடைய திருக் கலியாணம்.

சௌபாக்கிய தேவிக்கு இதெல்லாம் புரியுமா? 'பாஜுபந்துவைக் கொடுத்தேன், என்று ஒரு சுமங்கலி சொல்லுகிறாளே' என்றே துணுக்குற்றாள்.

ஆம், ராணாவின் பத்தினி மீரா என்பதற்கு அடையாளமாக அவளுக்கு அணிசெய்திருந்த பாஜுபந்துவையும், மற்ற சௌமங்கலிய ஆபரணங்களையும் கண்ணன் எடுத்துச் சென்று விட்டான். 'தோட்டம் போடுகிறேன்; எனக்குக் கூலி தா' என்று இவள் கேட்டாள்! அவனே இவளிடமிருந்ததையும் பறித்துக் கொண்டு போய்விட்டான்!

சௌபாக்கியதேவி மீராவைக் கோபிக்கவில்லை; பைத்தியத்தைக் கோபித்துப் பயன் என்ன? அவள் துர்கா பரமேசுவரியின் கோயிலுக்குக் கூடப் போகவில்லை. நேரே மகன் கும்பனின் அரண்மனைக்குத்தான் சென்றாள். அன்னை தேடி வந்திருக்கிறாள் என்றறிந்ததும், ஆயிரம் சிந்தனையுடன் அவளிடம் வந்து வணங்கிப் பாதங்களைக் கண்ணில் ஒற்றிக் கொண்டான் கும்பாஜி.

சௌபாக்கியதேவி சுற்றி வளைக்காமலே பேசினாள்: ''அப்பனே! மீரா விஷயம் நம் கை மீறிப் போய் விட்டது. நீயும்தான் அவள் இஷ்டப்படியெல்லாம் செய்து பார்த்தாய். எதிலும் அந்தப் பெண்ணைச் சரி செய்ய முடியவில்லை. அவளுக்குப் பைத்தியம் முற்றியிருக்கிறது. அவள் தன் மானத்தைக் காத்துக் கொள்ளாவிடில் தவறில்லை. பைத்தியத்தின் போக்கு அது என்று உலகம் மன்னித்துவிடும். ஆனால் அவளால் ராஜஸ்தானம் அடைகிற மானக் கேட்டை நாம் தடுக்காவிட்டால் நாமும் பைத்தியம்தான்'' என்று சொல்லிவிட்டு விறுவிறுவென வெளியேறினாள் சௌபாக்கியதேவி.

'பைத்திய'த்தைப் பார்க்க ராணாவும் விரைந்தான். அப்போதும் பைத்தியம் பாடிக் கொண்டுதான் இருந்தது. எந்த வெறியாயினும் வெறித்தனத்துக்குப் பாட்டுத்தானே பாஷை? வெறி பிடித்தவர்கள் வாயில் வந்ததைப் பாடிக் கொண்டுதான் இருப்பார்கள். அறிவு தடம் புரண்டால் சாமானிய வெறி. அறிவைத் தடயம்கூடக் காண முடியாதபடி அன்பு ஓங்கி விட்டாலும் வெறிதான் பிடிக்கும். ஆனால் இந்த வெறிக்குள் சுருதியும் லயமும் சீர்மையும் இருக்கும். சுருதி—லயம்—சீர்மை கூடிவிட்டால் அங்கு பாட்டுப் பிறக்க வேண்டியதுதானே? இதைப் புரிந்து கொள்வது கடினம். Harmonious madness என்று வானம்பாடியின் கானத்தை ஷெல்லி வர்ணித்தானல்லவா? அந்த ரத்தினச் சுருக்கமான வர்ணனைக்கு மேல் சொல்வதற்கில்லை.

சிலர் சொல்கிறார்கள்: 'கண்ணன் சந்தம் தவறாமலா, அக்ஷரக் கணக்குப் பிசகாமலா கீதையைச் சுலோகம் சுலோகமாகத் தனஞ்சயனுக்கு உபதேசித்தான்? கண்ணன் உரைநடையில்தான் உபதேசம் தந்திருப்பான். அதை வேத வியாசர் சுலோகங்களாக்கித் தந்திருக்கிறார்' என்று. இது சரியல்ல; கண்ணனுக்கு இருந்த அருள் வெறியில் அவனால் வசன நடையில் பேசியே இருக்க முடியாது. உணர்ச்சியின் அடர்த்தியில் இசைதான் முகிழ்க்கும்.

எதையுமே வெளியிட ஓர் இசை மொழி உண்டு. நாடகத்தில் யுத்தமாயினும், கொலையாயினும், காதலாயினும் பின்னணியாக ஓர் இசை இருந்து கொண்டேயிருக்கிறது. இது அந்தந்த பாவத்தை நம் மனத்தில் இசைவாக்கித் தருகிறது. கலையுலகில் மட்டும் நாம் காணும் இந்த இசையை, வாழ்வு முழுவதையும் கலையாக்கிக் கொண்ட மகாத்மாக்கள் அநுதினமும் மொழியுடன் வெளியிடுகிறார்கள். மீராவின் வாழ்க்கையைக் கதை என்ற ரீதியில் பார்ப்பவர்களுக்கு அதன் சம்பவங்களே முக்கியமாகப் படும். ஆனால் மீராவின் வாழ்க்கையைக் கலையாகப் பார்ப்பவர்களுக்கு அதன் சங்கீதமே முக்கியமாகும். கதாரீதியில் பெரிதாகத் தெரியும் சம்பவங்களைவிட மீராபாய் தனது கண்ணன் காதலையே பெரிதாக மதித்தாள். அவன் கூடலின்பமும் ஊடலின்பமும் அளித்ததையே பெரிதாகக் கருதினாள். கருத்து கானமாயிற்று. நூற்றுக்கணக்கில் பாடினாள். இலக்கியத்தில் பிரிவுத் துயரையும் சேர்க்கையையும் சம்பிரதாயமாக எப்படியெல்லாம் வர்ணிப்பார்களோ அப்படி வர்ணித்துப் பாடினாள். ஆனால் திரும்பத் திரும்ப வரும் இக்கருத்துக்களுக்கிடையிலேயே, மீரா என்ற தனிப்பட்ட வியக்திக்கு உரிய தனிப்பட்ட தொனியையும் ஆங்காங்கே அழுத்திப் பாடினாள்.

கும்பராணா வரும்போது அவள் சிருங்கார நாயகியாக மட்டுமிராமல் மனம் கனிந்த பக்தையாகிக் கிரிதரனின் திருவடி குறித்துக் கானம் செய்து கொண்டிருந்தாள்:

ஹரியின் கழலிணையை
ஸ்மரிப்பாய் மனமே

பாக்கிய நிலையம்; கோமள சீதளம்;
தாக்கிய தாபமுந் தீர்த்துத் தணித்திடும்
ஹரியின் கழலிணையை
ஸ்மரிப்பாய் மனமே

ப்ரஹ்லாதனுக்கு ப்ரம்மநிலைதனை
ஆஹ்லாதமுடன் அளித்த கழலிணை

பாலகன் த்ருவனைப் பாலனம் செய்து
மேலவனாக்கிய கோலக் கழலிணை

மூவுலகத்தையும் மாயமுடன் அளந்து
மாவலிக்குப்பதம் நல்கிய கழலிணை

கௌதமசதியைக் கல்லுரு நீக்கி
உத்தம சீலம் உதவிய கழலிணை

காளியன் தலையில் கோபியர் இன்புற
கேளிக்கை நடனம் புரிந்த கழலிணை

கோவர்த்தனம் தாங்கி தேவர்கோனைத் திருத்தி
ஆவர்த்தன மழை தடுத்த கழல்கள்

மீரா வழிக்கு மீராவைப் படுத்தி
ஆளாக்கிய நந்த லாலாவின் கழல்கள்

பாவனமே உருவமாகி மீரா பாமாலை சாத்துவதைக் காணக் காணக் கும்பனின் நெஞ்சு உருகியது. மீராவுக்குப் பிடித்திருந்த பைத்தியத்தை அவனுக்கு மிகவும் பிடித்துவிட்டது. 'இப்பேர்ப்பட்ட தாய்மையை,



## கூட்டுறவுகளின் மூலம் விற்பனை வாய்ப்புக்களை அவனுக்குதவுகிறது ஸ்டேட் பாங்க்

இன்று பொன் கொழிக்கும் அவனுடைய அறுவடைக்குக காததுநிற்கிறது சந்தை. காரணம், கூட்டுறவுகளின மூலம் சமயத்திலே கைகொடுக்க முன்வந்த ஸ்டேட் பாங்கின் பேருதவியே.

2000 கிளைகளுக்கு மேல் உடைய ஸ்டேட பாங்க் ஆப் இந்தியாவும் அதன் துணையகங்களும் அவைமூலம் ஆணடுதோறும் கூட்டுறவு பாங்குகளுக்கு மட்டுமின்றி, விற்பனையிடல் மற்றும் பிராஸஸிங கழகங்கள், சர்க்கரை ஆலைகள், தொழில்துறைக் கூட்டுறவுகள், நுகர்வுப பண்டக கூட்டுறவு மண்டிகள் ஆகியவை போன்ற கூட்டுறவுகளுக்கே நேரிடையாக நிதி உதவியும் பிற உதவிகளும் வழங்குகின்றன.

# சேவை புரிவதற்கே ஸ்டேட் பாங்க்

LPE Aiyars S.227

# தூக்கம் கலைந்தது!

ராவ்பகதூர் ரங்கநாதனின் வீடு ஒரு வாரமாக அல்லோலகல்லோலப்பட்டது. விஷயம் ஒன்றும் பிரமாதமில்லை. ஒரு வாரமாக அவருக்குத் தூக்கம் என்பதே இல்லாமல் போய் விட்டது.

அவரை வந்து பார்த்த பல டாக்டர்களும் நல்லதொரு மருந்தை எழுதிக் கொடுத்துவிட்டுப் போனார்கள். வந்து பார்த்த நண்பர்களுக்குக் கணக்கே கிடையாது. ஒவ்வொருவரும் ஒவ்வொரு யுக்தியைச் சொன்னார்கள்.

"படுக்கும் முன் சூடான வெந்நீரில் ஸ்நானம் செய்து பாருங்கள்" என்றார் ஒருவர்.

"இரவு சாப்பிடாமல் படுத்துக் கொள்ளுங்கள்" என்று பட்டினிப் பெருமையை விளக்கினார் மற்றொருவர்.

"......எழுதிய கதையைப் படியுங்களேன். தன்னால் தூக்கம் வந்து விடாதா?" என்று ஓர் ஆசிரியரின் பெயரைக் குறிப்பிட்டார் ஒரு அரசியல் பேர்வழி.

ரங்கநாதன் ஒருவருடைய யோசனையையாவது புறக்கணிக்க வேண்டுமே? கிடையாது. அப்படியும் பலன் என்னவோ ஏற்படவில்லை.

எட்டாவது நாள் காலை ரங்கநாதத்தின் கடைசிப் பையன் ஓர் ஆசாமியை அழைத்துக் கொண்டுவந்தான். வந்த ஆசாமி தாம் ஒரு 'மெஸ்மரிஸ்ட்' என்றும், தம்மால் முடியாத காரியமே கிடையாது என்றும் வெகு நேரம் சுய புராணம் பாடிவிட்டு ரங்கநாதத்தைப் படுக்கையில் படுக்க வைத்தார். பிறகு தம் கையை அவரது முகத்துக்கு நேரே இப்படியும் அப்படியும் ஆட்டத் தொடங்கினார். ஒரே நிமிஷத்தில் ரங்கநாதத்தின் இமைகள் கொஞ்சம் கொஞ்சமாக மூடிக் கொண்டன. சுற்றத்தார் நிம்மதியுடன் பெருமூச்சு விட்டனர். ரங்கநாதத்திடமிருந்து பலமான குறட்டை வரத் தொடங்கியதும் அங்கிருந்தவர்கள் ஒவ்வொருவராக நழுவலானார்கள்.

மெஸ்மரிஸ்ட், "இவர் வந்தால் நடக்காத காரியமும் உண்டா?" என்று மார் தட்டிக் கொண்டார்.

மூன்று நிமிஷங்கள் ஓடி விட்டன. ரங்கநாதன் கண்களை இலேசாகத் திறந்து பார்த்தார். பின்னர் சுற்றுமுற்றும் விழிகளை ஓட விட்டார். கவலையுடன் முகத்தருகே குனிந்த தம் மனைவியிடம், "அந்தத் தொல்லை பிடித்த ஆசாமி போய்த் தொலைந்தானா? நான் மட்டும் தூக்கம் வந்துவிட்டதாகப் பாசாங்கு பண்ணியிருக்காவிட்டால் அவன் போயிருப்பானா? தன் பெருமையைப் பாடிப் பாடி ஏற்கனவே தூக்கமில்லாமல் அவதிப்படும் எனக்குத் தலைவலியையும் அல்லவா கொண்டு வந்திருப்பான்?" என்று சொல்லிப் படுக்கையில் எழுந்து உட்கார்ந்து கொண்டார் ரங்கநாதன்.

- எறும்பு

0

0

0

0

0

0



நாதத்தை, தாளத்தைப் பித்தத்தினால் பெற முடியுமாயின் அந்தப் பித்தம் எனக்கும் பிடித்தால் தேவலையே' என்று ஏங்கினான் அவன். ராஜகுலத்தின் மானத்தை வாங்கி விட்டதாக மீராவை அவன் கண்டிக்காமலும் தண்டிக்காமலும் இருந்தது மட்டுமின்றி, அவளுக்குப் பித்துப் பிடித்ததே என்று பரிதாபம் கொள்ளவுமில்லை; தனக்கும் அந்தப் பித்தை அவள் போதிப்பாளோ என்றே ஆசைப்பட்டான்.

"மீரா, கண்ணனின் பாதத்தைக் கீதத்தில் கட்டிவிட்டாய். ஆனால் ஒன்று, கோவர்த்தனத்தை உன் கிரிதாரி கையால் தாங்கிக் கொண்டிருப்பதாகத்தான் நான் கேள்விப் பட்டிருக்கிறேன். அவன் காலினால் கோவர்த்தனத்தை எற்றியதாக அல்லவா நீ பாடினாய்?" என்று கேட்டான் ராணா.

"காலாவது கையாவது? அவனுக்கு அப்படியெல்லாம் பிரித்துப் பிரித்து அங்கம் சொல்ல முடியுமா? நகத்திலிருந்து சிகை வரையில் ஒரே ரஸம் நிறைந்தவன் அல்லவா அவன்? ரஸராஜன் அல்லவா அவன்?" என்றாள் மீரா.

'ரஸராஜ்' என்பது மீரா தந்துள்ள ஓர் அற்புத வாக்கு.

மீரா தொடர்ந்து பேசினாள்: "கிரிதரக் கோலம் ஒன்றுதான் கண்ணனுக்கு உண்டு என்பதுமில்லை. இன்னும் எத்தனையோ—லாவண்யக் கோலங்கள்......."

அப்படிப்பட்ட ஒரு லாவண்யக்கோலத்தை மீராவின் கண்கள் கண்டுவிட்டன போலும்! அப்படியே நிலைத்து விட்டன அவள் விழிகள்.

"என்ன மீரா? அப்படியே கண் நிலைக் குத்திட்டுவிட்டதே! எதை, யாரைப் பார்க்கிறாய்?" என்றான் ராணா.

ராணாவின் குரல் மீராவுக்குக் கேட்டது. ஆயினும் அவளது கண்கள் இன்னும் மாலவன் கோலத்திலேயே லயித்திருந்தன.



ஓர் ஆணைப் படிக்க வைத்தால் ஒருவரைப் படிக்க வைத்ததாகும். ஒரு பெண்ணைப் படிக்க வைத்தால் ஒரு குடும்பத்தையே படிக்க வைத்ததாகும்.

- டாக்டர் லீவர்

தகவல்: த. சங்கரபாண்டியன்

---

"நானே விரும்பினாலும் பார்வையை எடுக்க முடியவில்லையே ஸ்வாமி!" என்றாள் அவள் ராணாவிடம். "சிக்கலாக, கோணல் மாணலாக, வளைந்திருக்கும் ஒன்றில் மாட்டிக் கொண்ட வஸ்துவை எளிதில் வெளியே எடுக்க வராதல்லவா? அப்படித் தான் என் பார்வையும் மீள எடுக்கவொண்ணாமல் மாட்டிக் கொண்டு விட்டது!" என்று முணுமுணுத்தாள்.

"தேவி, உன் கண்ணில் தெரியும் தோற்றத்தில் கண்ணன் அழகுதானே நிறைந்திருக்கும்? அதில் சிக்கலும், கோணலும், வளைவும் உண்டா என்ன?" என்று ஆச்சரியத்துடன் வினவினான் ராணா.

"நன்றாகக் கேட்டீர்கள். கண்ணன் உருவம் என்றால் அது நேராக இருந்து விடுமா? அவனுக்கு உள்ளேயும் நேர்மை கிடையாது. வெளியேயும் நேர்மை கிடையாது!" என்று கூறிவிட்டு எதையோ நினைத்துச் சிரித்தாள் மீரா.

"ஆம், அவன் தோற்றத்தில் எதுவும் நேர் கிடையாது - தலையிலிருந்து கால்வரை. தலைப்பாகையை நேராக வைத்திருக்கிறானா? சாய்த்து வைத்திருக்கிறான். ஒரே நேராக— சங்கீதத்தின் நேர்மைக்கே உருவம் போல— இருக்கும் குழலையும் வாயில் சாய்த்து வைத்திருக்கிறான். உடலையே 'த்ரிபங்கம்' என்பார்களே அப்படி மூன்றாக வளைத்துப் பாங்கே விஹாரியாக நிற்கிறான். அப்போது ஹாரமும் சாய்ந்து விடுகிறது. இடது காலை வலக் காலுக்குக் குறுக்காகக் கொண்டு வந்து குத்திட்டு வைத்து நட்டம் செய்கிறான். இத்தனை கோணல்களுக்குள் போன பார்வை எப்படி இலேசில் வெளியே வரும்?

சொக்க வைக்கும் சொரூப வளைவினில்
சிக்கி கொண்டன என் கண்கள்
மதன மோகனனின் வதன அழகமுதம்
கதினம் இன்று எந்தன் நயனம் மாந்திடுது

கருங்குழல் வளைவு; புருவமும் வளைவு
துடியிடையும் வேணு பிடித்த கையும் கோணல்
சிரமதனில் பாகை சிறிது சாயவைத்து
நறுமலர் மாலையும் சரிய நடம்புரிந்தான்

காணும் உருவமுற்றும் கோணல் மிகுந்திடினும்
நேர்மையற் றவனிடம் பார்வை புதைந்ததையா
மீராப் பிரபுவிடம் மோகமுற்ற கண்
கிரிதரன் வடிவினில் பிரிவற லயித்தது"

கும்பராணாவின் கண்களுக்குப் பாங்கே விஹாரி புலனாகவில்லை. என்றாலும் பாங்கே விஹாரியின் சௌந்தரியத்தை அவனது ரசிக உள்ளம் மானசீகமாகக் கண்டு இன்பம் கொண்டது. ஸ்தூலமாகக் காணும் கிரிதரனையும் தரிசிக்க அவனது மனம் விழைந்தது.

"மீரா, ஆலயத்துக்குப் போகலாம் வா" என்று அவளை அழைத்தான் ஆர்வத்துடன்.

கும்பாபிஷேக தினத்துடனேயே கோயிலை மூடிவிட வேண்டியதுதானோ என்று எண்ணியிருந்த மீராவின் செவியில் தேனாக விழுந்தது அவன் வார்த்தை.

கும்பனும் மீராவும் கிரிதரன் ஆலயத்தை அடைந்தனர். மன்னரே வருகிறார் என்று அறிந்ததும் அர்ச்சகரும் தைரியம் அடைந்து ஓடி வந்து திருக்கதவம் திறந்தார்.

கிரிதரன் தரிசனம் சாதித்தான் — ஆனால் கிரிதரனாக அல்ல. பாங்கே விஹாரியாகவே கோலம் காட்டினான்.

மீரா பாடினாள் :

மீரா மட்டும்தான் பாடினாளா?

ராணாவும் சேர்ந்து பாடினான்.

பாங்கே விஹாரியைப்
பாங்காய்ப் பணிந்திடுவோம்

வண்ண மயில் தோகை
மின்னும் சிரப்பாகை
குழையின் ஒளிக்கலகம்
இழையும் சுருள் அலகம்
நெற்றியில் கஸ்தூரி திலகம்
அதன் மணத்தில் மயங்குது உலகம்

அதரமதனில் குழல்
அதனுள் அமுதப் புனல்
நானிலம் செழிக்கத் தேனிசை ஊறி
மகிழ்வித்துக்கொள்வான் தன்னை
மகிழ்வாள் அதனில் நப்பின்னை

கிரிதர நாகரன்
திரிசெயும் மோகனன்
ஒளி அலை வீசி மிளிர் கடலாய் வர
மூழ்கி மஞ்சனம் கொள்வோம்
அங்கம் அவன் வண்ணமாவோம்

ராணாவுமா பாடினான்? அவன் எப்படிப் பாடினான்? ஆகா, மீராவின் வெறி அவனுக்கும் வந்துவிட்டதால் அந்த வெறியின் மொழியும் அவனுக்கு வந்து விட்டதா!

என்னவாயினும் மீராவைப்போல் அந்த வெறியின் உச்சத்திலேயே ராணாவால் இருக்க முடியவில்லை. அப்போதும் அவளது வெறியை ரசித்தான். அவளைப் போல அவனால் வெறி மொழியைப் பாடி வெளியிட முடியாவிடினும் அவள் ஆடிப் பாடும்போது அதன் அழகை ரசித்துத் தானே வீணை மீட்டினான். ஆகா, அவை எவ்வளவு அற்புதமான நாட்கள்!

மீராவும் ராணாவும் இப்படிச் சீராகப் பத்திமை செய்வது அந்தக் கோணல்கார பாங்கே விஹாரிக்குப் பிடிக்குமா? தன்னுடைய வண்ணத்தில் எப்போதும் மீராவைப் போல மூழ்கி மஞ்சனம் செய்யும் பாக்கியத்தை அவன் ராணாவுக்குத் தொடர்ந்து அளிப்பானா? (தொடரும்)

# விளையாட்டுக் கலைகளுக்கு யோகம்



**அ**ன்னியச் செலாவணி'' நெருக்கடியினால் நம் விளையாட்டுக் கலைஞர்கள் யாருமே பாங்காக்கில் நடைபெறும் ஆசிய விளையாட்டுப் போட்டிகளில் கலந்து கொள்ள முடியாமல் போகுமோ என்ற பயம் முதலில் ஏற்பட்டது. இந்திய விளையாட்டுக் கலைகளுக்கு.. யோகமிருக்கிறது; இல்லாவிட்டால் அவர்கள் ஆசிய விளையாட்டுப் போட்டியில் கலந்து கொள்ளப் போகிறார்கள் என்று செய்தி கிடைத்திருக்குமா ? அவர்கள் போகாமல் இருந்திருந்தால் இந்திய ஹாக்கிக்கு இன்று ஆசியாவிலேயே முதன்மையானது என்ற சிறப்பு கிடைத்திருக்குமா?

1928ம் வருஷத்திலிருந்து ஹாக்கி விளையாட்டைப பொறுத்தவரை உலகுக்கே மன்னர்களாகத் திகழ்ந்து வந்தோம். நடுவில் பாகிஸ்தானிடம் உலக, ஆசிய வெற்றி வீரர் பதவி இருந்து வந்தது. 1964ல் டோக்கியோவிலும் இப்பொழுது பாங்காக்கில் நடைபெற்ற ஆசிய ஹாக்கிப் போட்டியிலும் அந்தப் பதவிகளை மறுபடியும் பெற்றுவிட்டோம். இறுதி விளையாட்டுப் போட்டியில் ரயில்வேயைச் சேர்ந்த பல்பீர் சிங் பாகிஸ்தான் கோஷ்டியின் மீது ஒரு 'கோல்' போட்டுக் கிடைத்தற்கரிய பெருமையைப் பாரதத்துக்குப் பெற்றுத் தந்திருக்கிறார். முட்டில் அடிபட்டும் கூட கட்டுப் "( Knee cap ) போட்டுக் கொண்டு வந்து 'உயிரை விட்டு' ஆடிய பல்பீரைத் தூக்கி வைத்துக் கொண்டு 'பங்க்ரா' நடனம் ஆடினார்கள் ரஸிக மக்கள்.





மற்ற விளையாட்டுப் போட்டிகளிலும் இந்தியா தங்கப் பதக்கங்களைப் பெற்றுப் புகழ் பெற்றிருக்கிறது. 'பாக்ஸிங்'கில் ஹாவா சிங் தங்கப் பதக்கம் அடைந்திருக்கிறார். பீம்சிங் உயரம் தாண்டலில் தங்க மெடலைக் கொணர்ந்திருக்கிறார். எண்ணூறு, நானூறு மீட்டர் ஓட்டப் பந்தயங்களில் மேஜர் பாஜவாவும், அஜ்மீர் சிங்கும், 'ஷாட் புட்'டில் ஜோகிந்தர் சிங்கும், தட்டு வீச்சில் பிரவீண் குமாரும் தங்கப் பதக்கங்களை அடைந்திருக்கிறார்கள்.

அவர்கள் அனைவருக்கும் நமது பாராட்டுதலைத் தெரிவிக்கிறோம். விளையாட்டுக்களில் வெற்றிபெறத் தீவிரமாக முனைய வேண்டியது அவசியமே என்றாலும் இப்போட்டிகளெல்லாம் பொறாமை நீங்கி நட்புறவை வளர்க்கவே ஏற்பட்டவை. அம்முறையில் பாரதத்துக்கும் இதர ஆசிய நாடுகளுக்கும் இடையில் நட்புறவை வளர்க்க உதவிய வீரர்களை வாழ்த்துகிறோம். ஆசிய விளையாட்டுப் போட்டியில் அதிக பதக்கங்களைப் பெற்ற ஜப்பானிய ஆட்டக்காரர்களுக்கு நம் விசேஷ பாராட்டுதல்கள்.



மேலிருந்து கீழ்: ஜோகிந்தர் சிங், பல்பீர் சிங் (ரயில்வே) காப்டன் லக்ஷ்மண், ஹர்பிந்தர் சிங்

**வீணை தனம்மாளின் நூற்றாண்டு விழாவை அண்மையில் கொண்டாடினோம். அவர் மறைந்து ஓராண்டுக்குப் பின்னர், நினைவு தினத்தையொட்டி அப்போது வானொலி ஆசிரியராகப் பணியாற்றிய தித்தாரப்பன் (தீபன்) அவர்கள் தலையங்கமாக எழுதிய கட்டுரை இது.**

# வீணை தனம்மாள்

## தீபன்

இருபது இருபத்தைந்து வருஷங்களிருக்கும். ஒரு நாள் வெள்ளிக் கிழமை. சூரியாஸ்த மனவேளை. சென்னைப்பட்டணத்தில் ஒரு ஒடுக்கமான முடுக்கு. அதில் ஒரு சின்ன வீடு. வீட்டுக்குள் வாசலுக்கு நேரே பாயில் ஒரு ஸ்திரீ வீணையும் கையுமாய் உட்கார்ந்திருந்தார். இல்லை, வீற்றிருந்தார் என்றே சொல்ல வேண்டும். ஏனென்றால் அந்த மாதிரிக் காட்சிகள் நமக்கெல்லாம் வீணையேந்தி வெண் தாமரையில் வீற்றிருக்கும் வாணியையே ஞாபகப்படுத்துகின்றன. அந்த ஸ்திரீ வீணா நாதத்துக்கொப்பான இனிய குரலுடன் ஒரு பாட்டுப் பாடி அதையே வீணையிலும் வாசித்து அங்கே உட்கார்ந்து ரசித்துக் கொண்டிருந்தவர்களைப் பரவசப்படுத்தி வந்தார்.

அப்பெண்மணி தம்மை மறந்து பாவம் சொட்டப் பாடி வீணா கானம் செய்து கொண்டிருந்தபோது திடீரென்று அவர் முகத்தில் கோபக் குறி தோன்றிற்று. அங்கே இருந்தவர்கள் எல்லோரும் என்ன விஷயம் என்று தெரியாமல் திகைத்தார்கள். உடனே கோபம் பின்வருமாறு வெளியிடப்பட்டது: ''அட, ஞானசூனியங்களா! அபஸ்மாரங்களா!'' என்று. எல்லோரும் தங்களைத்தான் திட்டுகிறாரோ என்று பயந்து கொண்டிருந்தார்கள். அப்போது தெரு வழியே ஒருவன் செருப்பைத் தேய்த்துத் தேய்த்து நடந்து போய்க் கொண்டிருந்தான். அப்படி அவன் நடந்ததனால் உண்டான 'சத்தம்' சங்கீதத்தில் லயிக்க விட்டிருந்த அந்த அம்மாளின் மனசை அறுத்திருக்கும் என்பதில் சந்தேகம் என்ன? இப்படி 'அட ஞானசூன்யங்களா! அபஸ்மாரங்களா!' என்ற பதங்களை யார் பிரயோகித்திருக்கக் கூடும் என்று தென்னாட்டு சங்கீத உலகப் பரிச்சயம் உள்ள வயோதிகர்களிடம் கேட்டால் உடனே சொல்லி விடுவார்கள்: ''வீணை தனம்மாள் தான், வேறு யாராயிருக்கக் கூடும்? வேறு யாரால் இப்படி பாவபூர்வமாக ஏச முடியும்?'' என்று சொல்வார்கள். தனம்மாள் ஏசுவதுகூட சங்கீத பரிபாஷையிலேயே இருந்தது. காரணம், அவர் வாழ்க்கையை அப்படி சங்கீதத்துக்கு அர்ப்பணம் செய்திருந்தார்.

வாழ்நாள் முழுவதையும் அவர் ஸ்வர சுத்த லயமாகக் கழித்து வந்தார் என்றே சொல்லலாம். எதை வேண்டுமானாலும் அவர் பொறுத்துக் கொள்வார். ஆனால், ஒரு அபஸ்வரத்தைக்கூட அவரால் பொறுக்க முடியாது.

முன்காலத்தில் நம்மவர்களில் பலர் ரொம்பவும் குறைவாகப் பேசி வந்தார்களாம். ஏனென்றால் குறைவாகப் பேசினால் பொய்யும் குறைவாக இருக்குமல்லவா? அப்படிச் சத்தியத்தைக் காப்பாற்றி வந்தார்கள். அதேபோல் தனம்மாளும் ஸ்வர சுத்தத்தைக் காப்பாற்றி வந்தார். சங்கீதத்தில் ஸுஸ்வரம் உண்மை, அபஸ்வரம் பொய் என்பதை நன்கு உணர்ந்தவர் தனம்மாள் ஒருவர்தான் என்றால் அது மிகையல்ல.

இன்னும் தனம்மாளுக்குச் சங்கீதத்தில் அபஸ்வரம் மட்டுமல்ல, 'அதிகப்பிரசங்கித்தனமும்' பிடிப்பதில்லை. அதிகப்பிரசங்கித்தனம் என்ற பதம் அனாவசியமான, அளவுக்கு மிஞ்சிய பிருக்காக்கள், ரவைகள், சங்கதிகள், வாண வேடிக்கைகள், ஸ்வரப் போர்கள், தாளக் குஸ்திகள் முதலியவைகளைக் குறிக்கிறது. இவைகளெல்லாம் அர்த்தமற்றவை, பாவமற்றவை. உண்மையான சங்கீதத்துக்கு இந்த 'அனாவசியங்கள்' பங்கம் விளைவிக்கின்றன என்பது அவருடைய அபிப்பிராயம். கழுத்தை நெருக்கும் கல்லட்டியலும், சுவாசத்தையே அடைத்துவிடும் புல்லாக்கும், இடுப்பை முறிக்கும் ஒட்டியாணமும், கரண்டையைப் போர்க்கும் பாதசரமும் எவ்வளவு அழகாகத்தான் இருக்கட்டும், அவைகளை அணிந்துகொள்வது எவ்வளவு சுகக் கேடு? இவைகளையெல்லாம் வேண்டாம் என்று வெறுத்துத் தள்ளியவர் தனம்மாள். ஆகையால் அவருடைய சங்கீதத்தில் எளிமை நயம் ஒரு சிறந்த அம்சமாக விளங்குகிறது.

இயற்கைக்கும் கர்நாடக சங்கீதத்துக்கும் விரோதமான அம்சங்கள் அவரிடத்தில் மருந்துக்கும் கிடையாது. கர்நாடக சங்கீதத்துக்கென்று ஏற்பட்ட கமகத்தைத்தான் அவர் அதிகமாகக் கையாளுவார். அவருடைய சங்கீதம் ஒரே கமக மயமாக இருக்கும். அவருடைய சங்கீதத்தைக் கேட்டுக் கொண்டிருக்கும்பொழுது அலை ஏறி இறங்குகிற தோணியில் போவது போன்ற உணர்ச்சி ஏற்படும்.

கமகத்துக்குச் சாதகமாக அவர் பாடினாலும் சரி, வீணை வாசித்தாலும் சரி, எல்லாம் சௌக்க காலத்திலேயே இருக்கும். கலி காலத்தில் எல்லோருக்கும் வேகத்தில்தான் மோகம் அதிகமாக இருக்கிறது. சங்கீத லோகத்தில் கூட அநேகர் மோட்டாரிலும் ஆகாய விமானத்திலும் ஏறிக் கொண்டு அதிவேகமாகச் சஞ்சரிக்கிறார்கள். தனம்மாள் இது விஷயத்தில் கொஞ்சம் கர்நாடகம்தான். பழைய சம்பிரதாயப்படி பல்லக்கில்தான் ஏறிச் செல்வார். பல்லக்கில் போகும் அழகே ஒரு தனி அழகல்லவா? அதுமட்டுமா? பல்

யத்தில் போகும்போது சாலையின் இருபுறமும் உள்ள ஒவ்வொரு காட்சியையும் நன்றாக அனுபவித்துப் பார்த்துக் கொண்டு போகலாம். அதே போல் சௌக்க காலத்தில் தனம்மாள் பாடும்போதும் வாசிக்கும் போதும், ஒவ்வொரு ஸ்வரத்திலும் நின்று அதை அவரும் நாமும் நன்கு அனுபவித்த பின், நிதானமாக இன்னொரு ஸ்வரத்துக்குப் போவார். இது காரணமாக, ஸ்வர வித்தியாசத்தை நன்றாக உணர்ந்து சங்கீதத்தைப் பரிபூரணமாக அநுபவிக்க முடிகிறது. ஆனால் ஸ்வரம் விட்டு ஸ்வரம் தாண்டுவதோ பாய்வதோ அவரிடம் கிடையாது. ஸ்வரத்துக்கு ஸ்வரம் கமகத்தின் வழியாக நழுவி விடுகிறது என்பதுதான் தனம்மாளின் தனி நடை. அதில் உள்ள இன்பமும் ஒரு தனிதான்.

ராக பாவம் இன்னொரு முக்கியமான அம்சம். இது விஷயத்தில் தனம்மாளுக்கு ஒரு தனிப்பட்ட அபிப்பிராயம் உண்டு. அதாவது, ராகத்தை வெகு நேரம் ஆலாபனை செய்யக் கூடாது, செய்யவும் முடியாது என்பதுதான். தனம்மாள் எந்த ராகத்தையும் மூன்று நிமிஷம், மிஞ்சினால் ஐந்து நிமிஷத்துக்கு மேல் வாசிப்பதே கிடையாது. அதற்கு மேல் ஒரு ராகத்தில் விஸ்தாரம் பண்ண இடமில்லை என்பது அவருடைய அபிப்பிராயம். அந்த மூன்று நிமிஷமும், ராகத்தின் களையும், ஜீவ ஸ்வரங்களும் தெளிவாகக் கையாளப்படும். ரக்தி ராகங்களுக்கே மூன்று நிமிஷம் என்றால், அபூர்வ ராகங்களைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். அவைகளுக்குக் கொடுத்தது வைத்தது அரை நிமிஷம்தான். ஆனால், தற்காலத்தில் அநேகர் அபூர்வ ராகங்களையே பல்லவி ராகமாகப் பாடுகிறார்கள்! இது என்னமோ தனம்மாளுக்கு விளங்குவதே இல்லை. இந்த ஆச்சரியத்தை ஒரு சமயம் பின்வருமாறு தெரிவித்தார்:

'இந்தக் காலத்திலேதான் மணிரங்கைக் கூடப் பல்லவி ராகமாகப் பாடுறாங்களே!'

இந்த வாக்கியம் தனம்மாளின் அபிப்பிராயத்தை நன்கு வெளிப்படுத்துகிறது. சங்கீத இலக்கியத்தில் சேர்க்க வேண்டிய வாக்கியங்களில் இதுவும் ஒன்று.

இன்னொரு விசேஷம், அவர் 'எடுத்ததும்' இன்ன ராகம் என்று தெரிந்துவிடும். கருட்டி ராகம் பாடினால், கருட்டி ராகத்துக்குரிய ஜீவ ஸ்வரங்களை மட்டும்தான் தொடுவார். அப்பொழுது, கருட்டி ராகமே ஓர் உருவெடுத்து வந்தது போலத் தோன்றும். அதாவது, கண்ணால் பார்ப்பது போன்ற ஒரு தெளிவு ஏற்படும். இன்னும், தற்கால நாகரிகத்துக்கும் புது 'மோஸ்த'ருக்கும் ஏற்றபடி இந்துஸ்தானியைக் கலந்து பாடுவதென்பது அவரிடம் கிடையவே கிடையாது. பழைய கர்நாடக வழிதான். ஆனால் அது, புத்தம் புதிதாக இருக்கும், எங்கும் கேளாத மாதிரியில் இருக்கும். உண்மையான கலைகளெல்லாம் அப்படித்தானே !

இப்படியாக, தனம்மாள் சங்கீதத்தில் எத்தனையோ மேலான அம்சங்கள் நிறைந்திருந்தன. ஆனால், இவைகளுக்கெல்லாம் மேலான ஓர் அம்சம் உண்டு. அதுதான் மற்ற அம்சங்களுக்கெல்லாம் அடிப்படை என்று சொல்ல வேண்டும். அதாவது, அந்த அம்மாள் சங்கீதம் பாவ பூர்ணமான சங்கீதம் என்பதுதான். இதயத்திலிருந்து அந்தச் சங்கீதம் வருகிறது. ஆகையால், அது கேட்போர் இதயத்துக்குப் போய்ச் சேருகிறது. குரலையும் விரலையும் பழக்குவதோடு நின்று



விடாமல் மனசையே பழக்கி வந்திருக்கிறார். அவர் உள்ளத்தில் உணர்ந்தனவெல்லாம் தங்குதடையின்றி அப்படி அப்படியே நாத ரூபம் எடுத்து நமக்குக் காட்சி அளிக்கின்றன. ஒவ்வொரு ஸ்வரமும், ஒவ்வொரு அட்சரமும் உள்ளத்திலிருந்து வருவதால், அவை புதிது புதிதாக இருக்கின்றன அன்று அலர்ந்த மலர்போல.

சங்கதிகள் என்று எடுத்துக் கொண்டால், அவர் போடும் சங்கதிகள் மணி மணியாய் இருக்கும். 'ராம நீ சமானம் எவரு?' என்ற பல்லவியைச் சிலர் எடுத்து விட்டால், அநுபல்லவியை ஆரம்பிக்க அரை நூற்றாண்டாவது ஆகும். பல்லவியில் அத்தனை சங்கதிகள் போடுவார்கள். எல்லாம் அர்த்தமற்றதாக இருக்கும். சங்கதிகளுக்குக் காரணம், தொண்டையில் பிருக்காவும் ரவையும் பேசுகிறது என்பதுதான். அதே பல்லவியில் தனம்மாள் இரண்டு மூன்று சங்கதிகள்தான் போடுவார். அந்தச் சங்கதிகள் அர்த்தத்தையும், பாவத்தையும் விளக்குவனவாயிருக்கும். பாவத்தை விளக்குவதற்காகத்தான் சங்கதிகள் ஏற்பட்டவை என்ற உண்மையைத் தனம்மாள் சங்கீதத்தைக் கேட்கும் போது தான் நன்கு உணரலாம்.

தாயுமானவர், பட்டினத்தார் பாடல்கள், தமிழ்ப் பதங்கள் முதலியவைகளை அவர் பாடும்போது, 'அடாடா! தமிழ் மொழி அமிழ்தினும் இனியது என்பதை இப்பொழுதல்லவா உணருகிறோம்' என்ற எண்ணம் ஏற்படும். 'எத்தனை விதங்கள்தான் கற்கினும் கேட்கினும்' என்ற வரியை எத்தனை விதமாகப் பாடலாமோ, வீணையில் வாசிக்கலாமோ, அத்தனை விதமாகப் பாடியும் வாசித்தும் காட்டுவார் — இல்லை—விளக்குவார். இதல்லவோ சரியான வியாக்யானம்? பொழிப்புரையும், பதவுரையும், இலக்கணக் குறிப்பும் எத்துணை அசம்பாவிதம்! ஒரு பாட்டை விளக்குவதற்கு ஒரே ஒரு வழி உண்டு. அதைப் பாவ பூர்வமாகப் பாட வேண்டும் என்பதுதான்.

இன்னும் தனம்மாள் வார்த்தைகளை உச்சரிப்பதே ஓர் அழகு. அட்சர அட்சரமாகச் சங்கீதத்தில் குழைத்துச் சொல்லுவார். அப்படிச் சொல்லும் போது அந்த வார்த்தையின் மதிப்பு எவ்வளவோ உயர்ந்து விடும். சாஹித்திய வித்துவான் ஒரு வார்த்தைக்கு ஓர் அந்தஸ்து கொடுத்திருப்பார். அதற்கு மேலான அந்தஸ்தைத் தனம்மாள் அதற்குக் கொடுத்து விடுவார். தனம்மாளைக் கேட்கக் கேட்க, சங்கீதத்தின் உயர்ந்த அம்சங்கள் மட்டுமல்ல, இலக்கியத்தின்— கவிதையின் — உயர்ந்த பண்புகளும் புலப்படும். உதாரணமாக, கவிதை சங்கீதாநுபவத்திலிருந்து வெளிப்படுவதுதான் என்ற அரிய உண்மை தெரிய வரும். மொத்தத்தில் அவருடைய சங்கீதம் பாகவதர்களுக்கும் பண்டிதர்களுக்குமே படிப்பினையாக இருந்தது என்று சொல்லலாம்.

வீணை தனம்மாள் என்று பெயர் இருப்பதாலேயே அவர் வீணை வாசிப்பதில்தான் கைதேர்ந்தவர் என்று ஆகிறது. ஆனால், அவர் பாடுவது அதனினும் மேல் என்றே சொல்ல வேண்டும். வாத்தியத்தில் சிறந்தது வீணை என்று சொல்லுவார்கள். ஆனால், வீணையிலும் சிறந்தது வாய்ப்பாட்டு. வாய்ப்பாட்டைக் கவனித்தால், வீணை ஊமை தான். இதைத் தனம்மாள் நன்கு அறிந்திருந்தார். நமது கடைசிக் காலத்திலும்கூட அவர், பாடாமல் வீணை வாசித்ததே கிடையாது. ஒரு தரம் அட்சரத்தை வாயினால் பாடியபின் அதையே வீணையில் வாசித்துக் காண்பிப்பார். சில சமயங்களில் வாயினால் பாடிய சங்கதியை வீணையில் வாசிப்பது கிடையாது. உதாரணமாக, 'மூத்த மாமியோ பொல்லாப் பாதக நீலி' என்ற வரியை எடுத்துக் கொள்வோம். இதை ஒரு தரம் பாடி விடுவார். பிற்பாடு 'மூத்த மாமியோ' என்று பாடிவிட்டு, 'பொல்லா' என்ற பதத்தை வீணையால் வாசிப்பார். அப்பொழுது அந்த வீணை 'பொல்லா' என்ற வார்த்தையைப் பாவ பூர்வமாக உச்சரிப்பது போலிருக்கும். இப்படியாக அவர் ஊமை வாத்தியத்தைப் பேச வைத்து விடுவார்.

அவர் கொடுத்திருக்கும் இசைத்தட்டுக்களில் ஒன்று தோடி ராகத்தில் அமைந்த 'அக்ரே' என்ற சுலோகம். அந்த சுலோகத்தை அவர் பாடவில்லை. வீணையில்தான் வாசித்திருக்கிறார். அந்தத் தட்டில் தோடி ராகம் என்று போட்டிருந்தாலே போதும். ஆனால், வேண்டுமென்றே சுலோகத்தின் பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஏனென்றால், அவர் அந்தச் சுலோகத்தின் ஒவ்வோர் அட்சரத்தையும் மனத்தில் உணர்ந்து வாசித்திருக்கிறார். இந்த மாதிரி, வாத்தியத்திலும் வார்த்தை சுத்தம் இருக்க வேண்டும் என்று எண்ணி வாசித்திருப்பது ஓர் அற்புதமாகத்தான் தோன்றுகிறது. இதுவரைக்கும் சங்கீத உலகத்தில் இவ்விஷயத்தை யாராவது சிந்தித்திருப்பார்களோ என்றுகூட நினைக்க முடியவில்லை. இந்த ஒரு விஷயம் போதும், தனம்மாளுக்குச் சங்கீத உலகத்தில் முதன்மை ஸ்தானம் கொடுக்க வேண்டுமென்பதற்கு. வாத்தியக்காரர்களெல்லாம் மேலே சொன்னபடி வாசிக்காவிட்டாலும், இந்த மேலான தத்துவத்தை உணர்ந்தாலே போதும். நம்முடைய வாத்திய சங்கீதம் எவ்வளவோ உயர்ந்த நிலைமைக்கு முன்னேறி விடும்.

தனம்மாள் சங்கீதத்தில் ஒரே ஒரு குறையுண்டு. அதாவது, அவர் பாடுவதும் வாசிப்பதும் வெகுதூரத்துக்குக் கேட்காது என்பதுதான். ரகசியத்தைக் கூப்பாடு போட்டுப் பேச முடியுமா ? அப்படிப் பேசினால் அது ரகசியமாகுமா ?

❀ ❀ ❀

இப்போது தனம்மாள் இறந்துவிட்டார்.

வீணை இருக்கிறது. அதன் மேல் நடனம் புரிந்த விரலைக் காணோம். வீணையில் நாதம் இருக்கிறது. ஞானம் எங்கே? சகலகலா வல்லியான வாணியிடம் அடைக்கலம் ஆகியிருக்கும்.



# சிவனருட் செல்வர்

### திருமுருக கிருபானந்த வாரியார்

திருநாவுக்கரசர் திருவமுது செய்ய இசைந்தவுடனே வரம்பில்லாத காதலுடன் திருவமுது ஆயத்தம் செய்யத் தொடங்கினர். நால்வகையான அறுசுவை உண்டியும் கறியமுதும் சமைத்தனர். அப்பூதியடிகள் தமது மூத்த புதல்வராகிய மூத்த திருநாவுக்கரசை அழைத்து வாழைக் குருத்தை அரிந்து வருமாறு கட்டளையிட்டார். அச்சிறுவன், ''இத் திருத்தொண்டு நமக்குக் கிடைத்ததே'' என்று மகிழ்ச்சியுடன் தோட்டத்துக்குச் சென்றான். தோட்டத்தில் உள்ள வாழையின் குருத்தை அரியும்போது ஒரு கொடிய நாகம் அந்தச் சிறுவனைத் தீண்டியது. அதைப் பொருட்படுத்தாத அந்தச் சிறுவன் அரிந்த வாழை இலையைத் தன் தாயிடம் கொடுத்தான். விஷம் தலைக்கேறியதால் தன்னை நாகம் தீண்டிய செய்தியை அறிவிக்காமல் வீழ்ந்து மாண்டான். அதனைக் கண்ட அப்பூதியடிகளும் அவர் மனைவியாரும், ''மகன் மாண்ட செய்தியை அப்பரடிகள் அறிந்தால் அமுது செய்யத் தடையாகும்'' என்று மனம் கலங்கினர். ஆகவே, மகனுடைய உயிர் நீங்கிய உடலை ஒருபுறம் வைத்தனர். சிறிதும் தடுமாற்றமின்றி, மலர்ந்த முகத்துடன், வாகீசப் பெருந்தகையை அழைத்து, திருவடி விளக்கி, ''அமுது செய்ய வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டனர்.

திருநாவுக்கரசர் திருவுள்ளத்தில் திருவருளால் ஒரு தடுமாற்றம் ஏற்பட்டது. நடந்ததைத் திருவருளால் அறிந்த அவர், ''மூத்த திருநாவுக்கரசு எங்கே?'' என்று கேட்டார். ''அவன் இப்போது இங்கு உதவான்'' என்றார் அப்பூதியடிகள். ''உள்ளதை உரைப்பீர்'' என்றார் திருநாவுக்கரசர். அப்பூதியடிகள் நிகழ்ந்ததை உரைத்தார். ''நன்று செய்தீர்; யாவரே இவ்வாறு செய்யவல்லார்?'' என்று பெருங் கருணை கூர்ந்து அப்பரடிகள் மாண்ட பிள்ளையின் சவத்தைத் திருக்கோயிலுக்கு முன் கொண்டு வரச் செய்து, ''ஒன்று கொலாம்'' என்ற திருப்பதிகத்தைப் பாடியருளினர்.

ஒன்று கொலாமவர் சிந்தை யுயர்வரை
ஒன்று கொலாமுய ரும்மதி சூடுவர்
ஒன்று கொலாமிடு வெண்டலை கையது
ஒன்று கொலாம் அவர் ஊர்வதுதானே

என்னே விந்தை! மாண்ட மைந்தன் திருவருளால் உயிர் பெற்று எழுந்தான்.

அப்பூதியடிகள் அதுகண்டு அகமிக மகிழ்ந்தாலும், அப்பரடிகள் அமுது செய்வதற்குக் காலம் தாழ்த்துவதற்கு வருந்தினர். அவருடைய அல்லலையறிந்த அப்பர் அப்பூதியடிகளின் திருமனைக்கு எழுந்தருளி அமுது செய்து அருள் புரிந்தார்.

அப்பரடிகள் திருப்பழனம் சென்று அப்பூதியடிகளைச் சிறப்பித்துத் திருப்பதிகம் பாடியருளினர்.

வஞ்சித்தென் வளைகவர்ந்தான்
　　வாரானே யாயிடினும்
பஞ்சிக்கால் சிறகன்னம்
　　பரந்தார்க்கும் பழனத்தான்
அஞ்சிப்போய்க் கலிமெலிய
　　அழலோம்பும் அப்பூதி
குஞ்சிப்பூ வாய்நின்ற
　　சேவடியாய் கோடியையே.

திருப்பழனத்தில் திருத்தொண்டு புரிந்து கொண்டு பல நாட்கள் தங்கியிருந்தார் வாகீசர்.

பின்னர் திருவாரூரில் பூங்கோயில் மேவிய புற்றிடங் கொண்ட புண்ணிய மூர்த்தியைத் தரிசிக்க விரும்பிப் புறப்பட்டார். அவரது வருகையைக் கேள்வியுற்ற திருவாரூர் வாழும் அன்பர்கள் நகரை இந்திர லோகமாக அலங்கரித்தனர். ஊர்ப்புறம் வந்து, ''கருங்கடலில் கல்லே புணையாகக்

கொண்டு கடந்து வந்த பெருந்தகை வரும் பேறு பெற்றோம்'' என்று பெரிதும் உவந்து எதிர் கொண்டனர். எதிரே வந்த அடியார்களைச் சொல்லரசர் தொழுதார். ''அன்பில்லாத அரும் பாதகராகிய அமணரிடம் தொடக் குற்று அதன் பயனாய் வந்த சூலை நோய் நீங்கப்பெற்ற அடியேன், புற் றிடங் கொண்ட புண்ணியனுடைய தொண்டருக்குத் தொண்டராம் புண் ணியம் பெறுவதுண்டோ?'' என்று கருதித் திருவீதியுள் சென்றார்.

திருத் தொண்டர்கள் சூழப் பூங் கோயிலுக்குள் நுழைந்து தேவாசிரியன் மண்டபத்தை வணங்கினார். பின் உட் புகுந்து புற்றிடம் கொண்டாரைக் கண்டு மண்மிசை வீழ்ந்து தொழுதார். கண்கள் நீர் பொழிய உடல் புளகமுற, போற்றித் திருத் தாண்டகம் பாடினார்.

பிரமன்தன் சிரமரிந்த
பெரியோய் போற்றி
பெண்ணுருவோ டாணுருவாய்
நின்றாய் போற்றி
கரநான்கும் முக்கண்ணும்
உடையாய் போற்றி
காதலிப்பார்க் காற்ற
எளியாய் போற்றி
அருமந்த தேவர்க்
கரசே போற்றி
அன்றரக்கன் ஐந்நான்கு
தோளுந் தாளும்
சிரம்நெரித்த சேவடியாய்
போற்றி போற்றி
திருமூலட் டானனே
போற்றி போற்றி

திருநாவுக்கரசர் ஆரூர் இறைவரை இறைஞ்சித் திருப்பதிகம் பல பாடித் திருப்பணிகளைப் புரிந்து காலங்கள் தோறும் சென்று தியாகப் பெருமானை வழிபட்டு வந்தார்.

# 35. குரவர் இருவர்

தியாகேசப் பெருமானிடம் பிரியா விடை பெற்றுத் திருவாரூரினின்றும் புறப்பட்டார் அப்பரடிகள். திருப்புக லூரின் எல்லையை அடைந்தார்.

திருஞானசம்பந்தர் சீகாழியினின்றும் புறப்பட்டுப் பல திருப்பதிகளை வணங்கித் திருப்புகலூர் வந்து முருக நாயனாரது திருமடத்தில் எழுந்தருளி யிருந்தார். வாகீசப் பெருந்தகையும் அவ்வூர் நோக்கி வருகின்றார் என்ற செய்தி யைக் கேள்விப்பட்டார். அவரை எதிர் கொண்டு அழைக்க, அடியார் திருக் கூட்டம் புடைசூழப் புறப்பட்டு எதிரே சென்றார். திருஞான சம்பந்தர் எதிர் கொள்ள வருகிறார் என்று கேள்விப் பட்ட திருநாவுக்கரசர் எல்லையில்லாத மகிழ்ச்சி யடைந்தார். இரு பெரு மக்களைச் சூழ்ந்துள்ள திருநீற்றுத் தொண்டர்குழாம் இரண்டும் இரண்டு நிலவின் கடல் அணைந்தது போல் கலந்தது.

அப்பரடிகள் விரைந்து சென்று திருஞானசம்பந்தரை இறைஞ்சினார். திருஞானசம்பந்தர் எதிரே இறைஞ்சி, ''அப்பரே! நீர் சேவித்த திருவாரூரில் நிகழும் பெருமையை எனக்கு எடுத் துரைப்பீர்'' என்று கேட்டருளினார். ''திருவாரூரில் நிகழும் திருவாதிரைத் திருநாளின் சிறப்பை நான் என்னென்று எடுத்துரைப்பேன்?'' என்று கூறிக் கீழ் வரும் திருப்பதிகத்தை அருளிச் செய் தார் அப்பர்:

முத்து விதான மணிப்பொற் கவரி முறையாலே
பத்தர்களோடு பாவையர் சூழப் பலிப்பின்னே
வித்தகக் கோல வெண்டலை மாலை விரதிகள்
அத்தன் ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம்

அந்த அற்புதத் திருப்பதிகத்தைக் கேட்ட திருஞானசம்பந்தருக்கு முன் னிருந்த ஆவல் மிகுந்தது. ''அப்பரே! பூம்பொய்கை சூழ்ந்த திருவாரூர் சென்று தேனமுதைக் கண்டு வணங்கி மீண்டும் வந்து உம்மோடு தங்குவேன்'' என்று கூறி விடைபெற்ற திருஞான சம்பந்தர் அப்பொழுதே திருவாரூரை நோக்கிச் சென்றார்.

திருநாவுக்கரசர் திருப்புகலூருள் புகுந்து, அரவணிந்த அரனாரை அன் புடன் துதி செய்தார்; கண்ணீர் பொழிந்து, தண்டமிழ் மொழிந்து போற்றினார். கோயிலைச் சூழ்ந்துள்ள களைகளைக் கொத்தி எடுத்து உழவாரப் பணி செய்தார்.

நீருமாய்த் தீயுமாகி நிலனுமாய் விசும்புமாகி
ஏருடைக் கதிர்களாகி இமையவர் இறைஞ்ச நின்று
ஆய்வதற் கரியராகி அங்கங்கே யாடுகின்ற
தேவர்க்கும் தேவராவார் திருப்புகலூரனாரே

திருவாரூர் ஆளும் செஞ்சடைக் கட வுளைச் சேவித்த திருஞானசம்பந்தர் திருப்பூம்புகலூருக்குத் திரும்பினார். திரு நாவுக்கரசர் அவரை எதிர்கொண்டு வணங்கினார். இருவரும் அப்பதியில் தங்கியிருந்தனர். அப்பெருமக்கள் இரு வரும் அங்கு சேர்ந்து உறையும் பெரு மையைக் கேட்டு, சிறுத்தொண்ட

# கடந்த காலத்தைக் கருதிப் பார்க்கும்போது– எதிர் காலத்தை எண்ணிப் பார்க்கும்போது

**கனரா பாங்கும் அதன் வாடிக்கையாளர்களும் அற்புத மனநிறைவு ததும்பும் பாதுகாப்பான உணர்ச்சியை அனுபவிக்கின்றனர்**

ஒழுங்கான சேமிப்புகளும், கணிசமான வட்டியும் நிறைந்த சுகமான கடந்த காலத்தை நினைத்துப் பார்க்கையில் அவர்கள் மனநிறைவு பெறுகிறார்கள். அதைப் போலவே, எதிர்காலத்தை எண்ணிப் பார்க்கும்போது, பெருகிக்கொண்டே வரும் சேமிப்புகளும், கூடுதலான வட்டியும் கிடைக்கும்போது, எதிர்காலத்தைப் பற்றிக் கவலையில்லை என்னும் நம்பிக்கையைப் பெறுகிறார்கள். கனரா பாங்க் மிகவும் விசேஷமான வகையில் பொதுமக்களுடைய பாங்காகும். பொதுமக்களின் நலத்தையே மனதிற் கொண்டு, அன்புக் கனிவுடன் கலந்த சேவையை, கனரா பாங்க் வழங்குவது உறுதி. இன்றே கனரா பாங்கில் சேமிப்பு கணக்கை ஆரம்பியுங்கள்—வருடாவருடம் வளர்ந்துகொண்டே போகும் அந்தப் பாதுகாப்பை அனுபவியுங்கள்.



**கனரா பாங்க் லிமிடெட்**

## தலையை ஆட்டாதே!

ஓர் அரச சபையில் பாடகர் ஒருவர் கச்சேரி செய்து கொண்டிருந்தார். கச்சேரியைக் கேட்டுக் கொண்டிருந்த மந்திரி பிரதானிகளும், மற்றுமுள்ள பிரமுகர்களும் தலைகளை ஆட்டி ரசித்துக் கொண்டிருந்தனர். அரசனுக்கு ஒரு சந்தேகம் எழுந்தது: 'எல்லோரும் தலையை ஆட்டுகிறார்களே, உண்மையாகவே ரசிக்கிறார்களா அல்லது சும்மாவானும் ஆட்டி வைக்கிறார்களா' என்று. கச்சேரி முடிந்ததும் பிரதான மந்திரியை அழைத்துத் தமது சந்தேகத்தை வெளியிட்டார் அவர்.

மறுநாள் கச்சேரி தொடங்குவதற்கு முன்னால் பிரதான மந்திரி சபையில் உள்ளவர்களை நோக்கி, ''மகாஜனங்களே! இன்று அரசர் ஒரு கட்டளை இட்டிருக்கிறார்: அதாவது, இன்று நடைபெறப் போகும் கச்சேரியின்போது யாராவது தலையை ஆட்டினால் அவர் தலை, வாள் கொண்டு தரையில் உருட்டப்பட வேண்டும் என்று கட்டளை யிட்டிருக்கிறார்'' என்று சொல்லிவிட்டு, ஆசனத்தில் அமர்ந்தார். அதைக் கேட்டதும் சபையில் உள்ளவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் தலையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டனர்.

கச்சேரி ஆரம்பமாயிற்று. பாடகர் அற்புதமாகப் பாடினார். யாராவது தலையை ஆட்டி ரசிக்க வேண்டுமே! ஊஹூம்! சற்று நேரம் கழிந்தது. கூட்டத்திலிருந்த ஒருசிலர் மட்டும் தங்களையும் மறந்தவர்களாகத் தலைகளை ஆட்டி இசையை ரசித்தனர். மந்திரி மெதுவாக ஆசனத்தை விட்டெழுந்து அரசனிடம் வந்து, ''அரசே! உண்மையான ரசிகர்களைக் கண்டு கொண்டீர்களா?'' என்றார்.

சொன்னது: ரஸிகமணி டி. கே. சி.

தகவல்: 'கோதையப்பன்'



நாயனாரும், திருநீலநக்க நாயனாரும் திருப்புகலூருக்கு வந்து முருக நாயனார் திருமடத்தில் இரு ஞானமூர்த்திகளையும் வணங்கி அவர்களோடு உறையும் பேறு பெற்றனர்.

இவ்வாறு சில நாட்கள் சென்றபின் ஏனைய திருத்தலங்களை வணங்கித் திருத்தொண்டு புரிய விரும்பிய நாவுக்கரசரும் சம்பந்தரும் புகலூர் மேவிய புண்ணியரை வணங்கிப் புறப்பட்டனர். இருவருமாகத் திருக்கடவூர் சென்றனர். ஆங்கே கூற்றை உதைத்த குன்றவில்லியைத் தணியாத காதலுடன் வழிபட்டு, அன்புடன் திருப்பதிகம் பாடி வணங்கினார்கள். பின்னர் குங்கிலியக்கலய நாயனார் அவர்களுக்குத் திருஅமுது செய்வித்தார்.

திருவீழிமிழலைக்கு நாவரசும், ஆளுடைப் பிள்ளையும் சேர்ந்து வருவதையறிந்த மக்கள் கடல் பொங்கியது போல் காதல் பொங்க எதிர்கொண்டு வணங்கி வரவேற்றார்கள். இரு மூர்த்திகளும் அத்திருத்தலத்தில் பல நாட்கள் தங்கியிருந்தார்கள்.

அப்பொழுது மாரி குன்றியது; காவிரியும் நீரின்றி வற்றியது. அதனால் விளைவின்றி எங்கும் வறுமை மிகுந்தது; பெரும் பஞ்சம் ஏற்பட்டது. மக்கள் பட்டினியால் பெரிதும் வருந்தினார்கள். சிவபெருமான் இரு பெருந்தகையாளர்களது கனவிலும் எழுந்தருளி, ''நாட்டின் பஞ்சத்தால் நீங்கள் துன்புற மாட்டீர்கள்; உங்களை வழிபடுவோருக்கு அளிக்கும் பொருட்டு, நாம் உங்களுக்கு நாள்தோறும் படிக்காசு தருவோம். அதனைக் கொண்டு அடியார் மிடியை அகற்றுவீர்கள்'' என்று அருளிச் செய்தார். பொழுது புலர்ந்தது.

இரு சான்றோர்களும் திருக்கோவிலுக்குச் சென்று பரமனைப் பாடிப் பரவினர். கிழக்குப் பீடத்தில் திருஞான சம்பந்தருக்கும், மேற்குப் பீடத்தில் திருநாவுக்கரசருக்கும் இறைவர் படிக்காசு வைத்து அருளினார். அதனைப் பெற்ற குருமூர்த்திகள் ''எல்லோரும் வந்து உண்க'' என்று காலையிலும் மாலையிலும் பறைசாற்றச் செய்து அடியார்களுக்கு அன்னதானம் புரிந்தார்கள்.

அல்லார் கண்டத் தண்டர்பிரான்
அருளால் பெற்ற படிக்காசு
பல்லா றியன்ற வளம்பெருகப்
பரமன் அடியா ரானார்கள்
எல்லாம் எய்தி உண்கவென
இரண்டு பொழுதும் பறைநிகழ்த்திச்
சொல்லால் சாற்றிச் சோறிட்டார்
துயர்கூர் வறுமை தொலைத்திட்டார்

திருஞான சம்பந்தர் அம்பிகையின் ஞானப்பாலுண்ட திருமகனார். ஆதலால் அவருக்கு வாசியுடன் கூடிய காசும், மெய்வருந்தத் திருத்தொண்டு புரிகிற காரணத்தால் வாகீசப் பெருந்தகையார் வாசி யில்லாத காசும் பெற்றார்கள்.

இரு பெருந்தகையாளர்களது திருமடங்களிலும் அடியார்கள் நாள்தோறும் இரண்டு வேளையும் உண்ண உண்ணக் குறையாது திருவருளால் வளர்ந்தது; எல்லோரும் இன்புற்றிருந்தார்கள். நாட்டில் நல்ல மழை பொழிந்தது; நல்லோர் மனம் போலச் செழித்தது. வறுமைப் பேய் அகன்றது.

ஞானமூர்த்தியர் இருவரும் திருமறைக் காட்டின் எல்லையை அடைந்தனர். நறுமணங் கமழும் புன்னை மலர்ச் சோலை சூழ்ந்த உப்பளங்களின் முன்றில்தோறும் சிறுமியர்கள் முத்துக்களைக் கொழிக்கும் வளமையுடைய வேத வனத்தில் விடையவர் எழுந்தருளிய திருக்கோவிலை வலம் வந்த இரு பெருமக்களும் எம்பிரான் திருமுன் சென்றார்கள். முன்னே மணிகண்டரை மறைகள் பூசித்துத் திருக்காப்பிட்ட கதவம் அந்நாள் முதல் இந்நாள்வரை அடைத்தபடியேயுள்ள திருவாயிலை அடைந்தார்கள்.

பழமையாகிய வேதங்கள் திருக்காப்பிட்ட திருவாயிலைத் திறக்கவல்லார் ஒருவரும் வராமையால், அன்பர்கள் அருகில் உள்ள ஒரு வழியே சென்று அரனை வழிபட்டு வந்தார்கள். ''அப்பரே! வேதங்கள் பூசித்த விமலரை நாம் இந்த நேர்வாயிலில் சென்று வணங்க வேண்டும். திருக்கதவம் திறக்கும்படி பாடியருள்வீராக'' என்றார் திருஞானசம்பந்தர். உடனே நாவரசர்,

பண்ணின் நேர்மொழி
யாளுமை பங்கரோ
மண்ணினார்வலஞ்
செய்ம்மறைக் காடரோ
கண்ணி னாலுமைக்
காணக் கதவினைத்
திண்ணமாகத் திறந்தருள்
செய்ம்மினே!''

என்று பாடினார்.

பண்ணின் பயன் துய்க்கும் பரமர் பத்துப் பாடல் பாடியும் கதவம் திறக்கத் தாழ்ந்தபடியால் திருக்கடைக் காப்பாகக் கீழ்க்கண்ட திருப் பாடலைப் பாடினார்.

அரக்கனை விரலால் அடர்த்திட்ட நீர்
இரக்கமொன்றிலீர் எம்பெரு மானிரே
சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக் காடரோ
சரக்க இக்கதவம் திறப் பிம்மினே

இவ்வாறு அவர் பாடி முடிந்த அளவில், வேதவனப் பெருமான் திருவருளால் மணிக்கதவின் தாள் நீங்கித் திறந்தது. மொழிக்கு முதல்வராகிய அப்பர் ஞானக் கன்றுடன் தொழுது, விழுந்து பணிந்தார். அன்பு மேலிட என்பு உருகி இறைவரைப் பணிந்து பாமாலை சாத்திப் புறத்து வந்தார்கள்.

கதவு எப்போதும் திறந்திருக்க முடியுமா? அவசியத்தின்போது மூடவும் கூடியதாக இருக்க வேண்டுமன்றோ? வேதவன ஆலயக் கதவு திறக்கவும் மூடவுமாக இருக்க வேண்டும் என்று எண்ணினார் அப்பரடிகள். திருஞான சம்பந்தரை நோக்கி ''இம்மணிக்கதவம் அடைக்குமாறு பாடியருளும்'' என்றார் சிவஞானமுண்ட சீர்காழிப் பிள்ளையார் பதிகம் பாட எடுத்தவுடனே, முதல் பாட்டிலேயே கதவம் திருக்காப்பிட்டது.

வழிபாடு முடித்து, இரு குருமூர்த்தியரும் திருமடத்துக்குத் திரும்பினர். வாய்மை திறம்பாத வாகீசர் திருமடத்தில் ஒருபுறத்தே படுத்துக் கொண்டார். ஆயினும் அவருக்கு உறக்கம் வரவில்லை. ''நான் பாடியவுடன் திருக்கதவம் திறக்கவில்லை;



அரிதின் முயன்று பாடிய பின்னரே திறந்தது. ஆனால் திருஞான சம்பந்தர் பாடியவுடனே அடைபட்டு விட்டது. இறைவர் திருவுளம் யாதோ?'' என்று அச்சத்துடன் கண்களை மூடிக்கொண்டு அறிதுயிலில் அமர்ந்தார். அவரது கனவில் எழுந்தருளிய வேதவனம் மேவும் விடையவர், பொன்னார் மேனியில் வெண்ணீறு பொலியத் திருவுருக் காட்டி, ''வாய்மூரில் இருப்போம்; வா'' என்று அருளி மறைந்தார்.

துணுக்குற்று எழுந்த அப்பரடிகள்,

எங்கே யென்னை இருந்திடந் தேடிக்கொண்(டு)
அங்கே வந்தடை யாளம் அருளினார்
தெங்கே தோன்றும் திருவாய்மூர்ச் செல்வனார்
அங்கே வாவென்று போனார தென்கொலோ

மன்னு மாமறைக் காட்டு மணாளனார்
உன்னி புன்னி உறங்குகின் றேனுக்குத்
தன்னை வாய்மூர்த் தலைவனு மாசொல்லி
என்னை வாவென்று போனார தென்கொலோ

என்று பாடினார்.

திருமறைக் காட்டை விட்டுப் புறப்பட்டு விரைந்து போகிறார் அப்பரடிகள். ஆதிமூர்த்தி முன் காட்டிய திருக்கோலத்துடன் அவர் முன் செல்ல, அவரைத் தொடர்ந்து சென்றார் அப்பர். ஆயினும் அவரை அணுக முடியவில்லை. கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை. எதிரில் பொன்வண்ணமான கோயில் ஒன்று தோன்றியது. இறைவர் அதனுள் புகுந்து மறைந்தார். திருநாவுக்கரசர் திருவாய்மூர் சென்றதைக் கேள்விப்பட்ட சம்பந்தர் அங்கு விரைந்து சென்றார்.

''ஐயனே! அழைத்து வந்து மறைந்து விட்டீரே! சமயமறியாது



சுதனைத் திறப்பித்த அடியேனுக்கு ஒளித்தது சரி. திருத்தொண்டின் வலிமையால் பாடி அடைப்பித்த சிவஞானப் பிள்ளையார் இங்கு வந்திருக்கிறார். அவருக்குக் காட்சியளிக்காமல் மறைவது முறையோ?'' என்று வேண்டினார் அப்பர். உடனே, இறைவர் திருஞானசம்பந்தருக்குக் காட்சியளித்தார். அக்காட்சியைக் கண்டு பரமனைப் பணிந்த சம்பந்தர், ''அப்பரே! ஐயனைப் பாரும்'' என்று காட்டினார்.

> பாட அடியார் பரவக் கண்டேன்
> பத்தர் கணங் கண்டேன் மொய்த்த பூதம்
> ஆடல் முழவம் அதிரக் கண்டேன்
> அங்கைஅனல் கண்டேன் கங்கையாளைக்
> கோடலரவார் சடையிற் கண்டேன்
> கொக்கின் இறகுகண்டேன் கொன்றைகண்டேன்
> வாடல் தலையொன்று கையிற் கண்டேன்
> வாய்மூர் அடிகளை நான் கண்டவாறே.

என்று பாடினார் கண்ணுதலைக் கண்ட அண்ணல்.

பின்னர் அப்பரும் சம்பந்தரும் வாய்மூர்த் திருக்கோயிலில் வழிபாடு செய்து விட்டுத் திருமறைக் காட்டுக்கு வந்தார்கள்.

இரு தவசீலர்களும் வேதாரண்யத்தில் தங்கியிருந்தபோது சைவம் தழைக்கத் திருஞானசம்பந்தரை அழைத்து வருமாறு பாண்டிமாதேவியார் மங்கையர்க்கரசியாரும், அமைச்சர் குலச்சிறையாரும் ஏவலரை அனுப்பி வைத்தனர். வந்தவர்கள், திருஞானசம்பந்தருடைய திருவடியில் வணங்கி நின்றனர். அவர்களை நோக்கி, 'நீங்குளவோ?'' என்று வினவினார், ஞானபோனகர்.

''ஐயனே! உலகம் உய்ய வந்த தேவரீரது உபய சரணாரவிந்தங்களை நினைப்போருக்குத் தீங்கு வருமோ? ஒரு போதும் வராது. வைதிக சைவ நெறியை விடுத்து, சழக்கு நெறியை எடுத்த சமணர்கள் புரியும் கொடுமைகளை இனி எங்களால் பொறுக்க முடியாது. தேவரீர் அங்கு எழுந்தருளுதல் வேண்டும்'' என்று அவர்கள் விண்ணப்பம் செய்து கொண்டார்கள்.

''அந்தச் சமணரது பொய் நெறியை மாற்றிச் சைவ மெய்ந்நெறியை ஏற்றி இடர் களைவோம்'' என்று சம்பந்தப் பெருமான் தெய்வத் திருநீற்றை நினைந்து எழுந்தார்.

உடனே வாகீசர் அவரைத் தடுத்தார். ''பிள்ளாய்! தூய்மையும், வாய்மையும் இல்லாத சமணர்கள் மாயையில் சாலவும் வல்லவர்கள். அவர்கள் எனக்குச் செய்த தீங்குகள் பல. ஆதலால் நீர் அங்கு செல்ல நான் இசைய மாட்டேன்'' என்றார். **(தொடரும்)**

---

## காலண்டர் மொழிகள்

''அய்க்கண்''



- ☐ வருஷம் வரும் பின்னே;
  காலண்டர் வரும் முன்னே.
- ☐ கம்பெனியின் அழகு,
  காலண்டரில் தெரியும்.
- ☐ கல்யாணம் பண்ணிப்பார்;
  காலண்டர் வாங்கிப்பார்.
- ☐ நீறில்லா நெற்றி பாழ்;
  காலண்டரில்லா சுவர் பாழ்.
- ☐ காலண்டரில்லாக் கம்பெனியில் வேலை பார்க்க வேண்டாம்.
- ☐ ஆயிரம் பேரைக் கெஞ்சியாவது ஒரு காலண்டர் வாங்கு.
- ☐ கெஞ்சல் மேல் கெஞ்சல் செய்தால்,
  கஞ்சனின் காலண்டரும் நகரும்.
- ☐ ஆபீஸ் மானேஜரே காலண்டருக்கு ஆளாய்ப் பறக்கிறபோது,
  அட்டெண்டரெல்லாம் எம்மாத்திரம்?
- ☐ சின்னக் காலண்டரைக் கொடுத்து,
  பெரிய காலண்டரைப் பிடி.
- ☐ 'சீச்சீ! இந்தக் காலண்டர் நன்றாயில்லை' என்றானாம்.



**காற்றிலே பறக்கும் காசுகளை இன்று பார்க்கும் நாம், தூக்கவே முடியாத அளவுக்குக் கனமான காசு ஒரு காலத்தில் இருந்தது என்றால் வியப்புறாமல் இருக்க முடியுமா?**

# தூக்கவே முடியாத காசு!

எதிரிகளுடன் நடந்த போரில் சீஸரின் படை வெற்றி பெற்றது. சீஸரின் படைக்குத் தளபதியாயிருந்து அதை வெற்றியடையச் செய்தவனின் பெயர் ஜெனரல் டெரன்ஷியஸ்.

அவன் வெற்றி பெற்றதும், சீஸரிடம் தனக்கு நூறு மில்லியன் டினார்கள் (நம் ரூபாயைப் போன்றது) பரிசாக அளிக்க வேண்டுமென்று கேட்டான். சீஸருக்கு அவன் பேராசையைக் கண்டு கோபம் வந்தது. ஆனால், அதை வெளிக் காட்டாமல் அவனுக்குத் தக்க பாடம் கற்பிக்க வேண்டுமென்று தீர்மானித்தார். எனவே தளபதியை நோக்கி, ''உன் திறமையை மெச்சினேன். நீ கேட்டபடியே உன் பரிசைத் தருகிறேன். அதற்கு முன் ஒரு நிபந்தனை!'' என்றார்.



''சொல்லுங்கள், எதுவாயிருந்தாலும் ஒப்புக்கொள்கிறேன்.''

''ஒன்றுமில்லை. உன் பரிசை நீ தினமும் ஒவ்வொரு நாணயமாக யாருடைய உதவியுமின்றி எடுத்துச் செல்ல வேண்டும். அவ்வளவே'' என்றார் சீஸர்.

சீஸர், தினமும் தளபதி எடுத்துச் செல்லும் நாணயத்தைப் போல் இரு மடங்கு எடையுள்ள நாணயத்தை மறுநாள் எடுத்துப் போகும்படி வைக்கச் சொல்லி விடுவார். இதற்காகத் தினமும் ஒவ்வொரு நாணயம் கூடிய எடையுடன் வார்க்கப்பட்டது.

இதன்படி அவன் முதலில் எடுத்துச் சென்ற நாணயத்தின் எடை 5 கிராம். அதனுடைய விட்டம் 2.1 செ.மீ.தான். இது ஒரு 'டினார்' நாணயம். இதன்படி எட்டாவது நாளன்று நாணயத்தின் மதிப்பு 128 டினார் ஆயிற்று. ஆனால் எடை 640 கிராம். விட்டமோ பத்தரை செ. மீட்டர்!

16 வது நாள் நிலைமை மிகவும் மோசமாகி விட்டது. யாருடைய உதவியையும் நாடக் கூடாது என்று சொல்லி விட்டாரல்லவா? ஆகவே அந்நாணயத்தை 'உப்பு மூட்டை' தூக்கும்படி ஆகி விட்டது.



17வது நாள் கேட்கவே வேண்டாம்! சக்கரம் மாதிரி உருட்டிக் கொண்டு சென்றான்.

18வது நாள். நாணயத்தின் மதிப்பு 1,31,072 'டினார்'கள். அதன் எடை 655 கிலோ, அதன் விட்டம் 1 மீட்டர் (1 கஜத்துக்கும் அதிகம்). இதை அவனால் உருட்டி எடுத்துச் செல்லக்கூட முடியவில்லை. தன் ஆயுதங்களைப் பயன்படுத்தித்தான் அதை அசைக்கவே முடிந்தது. எனவே அவனால் மேற்கொண்டு எதையும் கொண்டு செல்ல முடியவில்லை. மொத்தம் 18 நாட்களில் அவன் பரிசாகக் கொண்டு சென்றது, அவன் கேட்டதில் இருபதில் ஒரு பங்குதான்.

ஆதாரம்: ஸயன்ஸ் டுடே. அனுப்பியது: வி. மகாலிங்கம்.

## அரியது எது?

பழங்காலத்துச் சம்பவம் இது.

துருக்கியர்களுக்கும் ஈரானியர்களுக்குமிடையே பயங்கரப் போர் மூண்டது. துருக்கியர்கள் தோல்விக்கு மேல் தோல்வியடைந்தனர். ஈரானியர்களோ வெற்றி ஒன்றையே கண்டனர்.

இம்மாதிரி நேரத்தில்தான் ஒரு நாள் துரதிருஷ்டவசமாகப் புகழ் பெற்ற சூஃபித்துறவி ஃபரீதுத்தீன் அத்தார் துருக்கியர்களின் கையில் சிக்குண்டு விட்டார். வேவு பார்க்க வந்தவர் என்று அவர் மீது குற்றஞ் சாட்டித் துருக்கியர்கள் அவருக்குத் தூக்குத் தண்டனை வழங்குவதென்று முடிவு செய்து விட்டனர்.

இதனை அறிந்த தனவந்தர் ஒருவர் துறவியின் எடைக்கு எடை வைரங்கள் தருவதாகவும் அவரை விட்டுவிடுமாறும் கூறினார். வேறு சிலரோ அவருக்காகத் தங்கள் உயிரையே தரச் சித்தமாகி விட்டனர். எதற்கும் துருக்கிய கலிஃபாதான் மசியவில்லை.

செய்தி ஈரானிய மன்னருக்கு எட்டியது. தமது கௌரவத்தைப் பாராமல் துருக்கிய கலிஃபாவிடம் சென்றார் அவர். ''எந்த ராஜ்யத்துக்காக நீங்கள் நான்கு தலைமுறைகளாக எங்களோடு போரிட்டிருக்கிறீர்களோ, அது உங்களுக்கு இதுகாறும் கிட்டவில்லை. அதைச் சண்டையின்றி உங்களுக்குத் தந்து விடுகிறேன். அதை ஏற்றுக் கொண்டு அத்தாரை விட்டு விடுங்கள். பணம் இன்று வரும், நாளை போகும். அது போலவே ராஜ்யமும் ஒரு நாள் தரைமட்டமாகி விடக் கூடும். அல்லது தலைநிமிர்ந்து நிற்கக்கூடும். ஆனால் அத்தாரைப் போன்றவர்கள் கிடைப்பது அரிது. கிடைத்தற்கரியவரை இழந்து ஈரான் அழியாக் களங்கத்தை ஏற்றுக் கொள்ள விரும்பவில்லை. தயவுசெய்து அத்தாரைத் தந்து ஈரானை ஏற்றுக் கொள்ளுங்கள்!'' என்றார்.

மன்னரின் இந்தப் பண்பு மிகுந்த பேச்சு ஈரான் - துருக்கிச் சண்டைக்கு முற்றுப்புள்ளியே வைத்துவிட்டது.

- ரா. வீ.



## ஒரே கல்லில் இரண்டு மாங்காய் !



நீங்கள் தலையைக் கிராப்பு வெட்டிக் கொள்ளுவதற்காகத் தனி நேரம் ஒதுக்க வேண்டாம். சினிமா பார்த்துக் கொண்டே கிராப்பு வெட்டிக் கொள்ளலாம். ஆப்பிரிக்காவில் டர்பன் என்ற நகரில் ஒரு சினிமாத் தியேட்டரிலேயே சலூன் வைத்திருக்கிறார்களாம். சினிமா பார்த்துக் கொண்டிருக்கும்பொழுது வேண்டுமானாலும் கிராப்பு வெட்டிக் கொள்ளலாம். கிராப்பு வெட்டிக் கொள்ளத் தனி சார்ஜ் உண்டு.

- ஆர். கீதா.

---

## ஒருவாய் உணவை முப்பது முறை மென்றால்....

1. ஐ. சி. எஸ். உயர் பதவியை உதறி எறிந்தவர்; ரிக்வேதத்தை வங்காளியில் மொழிபெயர்த்தவர்; லண்டன் பல்கலைக் கழகத்தில் ஏழு ஆண்டுகள் இந்திய சரித்திரம் போதித்தவர். பரோடா திவான் ஆகவும் பல காலம் புகழ் பூத்தவர். 75 ஆண்டுகளுக்கு முன் அமரர் ஆன இந்தப் பிரமுகர் யார் ?
2. மனிதனுக்கு நிகரான புத்திகூர்மை படைத்தது எனக் கூறப்படும், திமிங்கிலம் இனத்தைச் சேர்ந்த கடற் பிராணி. இதன் பெயர்?
3. தமிழகத்தில் உள்ள ஒரு நகரம். 'இந்தியாவிலேயே மிகச் சிறந்த முறையில் நிர்மாணிக்கப் பட்ட ஸ்டேஷன்' என்ற தனிப் பெருமை இங்குள்ள ரயில் நிலையத்தைச் சாரும்! நகரம் எது?
4. புகழ்பெற்ற பிரிட்டிஷ் பிரதமர் ஒருவர், தம் வாழ்நாளில் ஒவ்வொரு வாய் உணவையும் முப்பது முறை மென்று தின்னும் வழக்கத்தை விடாப்பிடியாக வைத்துக் கொண்டிருந்திருக்கிறார்! இம்மூவரில் அந்த விந்தைப் பிரதமர் யாராயிருக்கலாம் ?
   (1) அட்லி; (2) சர்ச்சில்; (3) கிளாட்ஸ்டன்.
5. இன்று அநேகமாக உலகெங்கும் பரவியுள்ள ரோட்டரி இயக்கம் தோன்றிய நகரம் இம்மூன்றில் எது?: சிட்னி, சிகாகோ, சிம்லா.
6. 103 ஆண்டுகளுக்கு முன் டில்லியிலிருந்த ஒரு 'தொடை நடுங்கி' வைஸ்ராய், தினம் இரு முறையாவது லண்டனுடன் தொடர்பு கொண்டிருந்தார். முதுகெலும்பில்லா இந்த வெள்ளையரின் பெயரை ஊகிக்க முடிகிறதா ?
7. ஒரு தந்தை, அவரது தனயன். இருவருமே அமெரிக்க ஜனாதிபதிகளாக இருந்திருக்கின்றனர். அவர்களது பெயர்களைக் கூற முடியுமா?
8. சென்னையில் உள்ள லைட் ஹவுஸின் உயரம் எத்தனை அடி என உத்தேசமாக ஊகிக்க முடியுமா?
9. 'காமன் வெல்த்'தில் இன்று அங்கம் வகிக்கும் நாடுகள் எத்தனை? 23? 27? 29?

--பரணி

(விடைகள் 72ம் பக்கம் பார்க்க)

## என்ன செய்வார் ?

இத்தாலி தேசத்தில் ஒரு சமயம் பிரபல சாகித்தியகர்த்தாவான வெர்டி என்பவரின் மேதையைப் பாராட்ட ஒரு விழா நடத்தினார்கள். அந்த விழாவில் பங்கெடுத்துக் கொள்ளப் பிரபல டாஸ்கானி, மாஸ்கானி போன்ற இசை வல்லுனர்களும் மிலான் நகருக்கு அழைக்கப்பட்டார்கள்.

மாஸ்கானிக்குத் தாம் டாஸ்கானியைவிட உயர்ந்தவர் என்ற எண்ணம் உண்டு. பொறாமை தான் காரணம். இருவருமே அப்பொழுது இத்தாலியில் புகழேணியின் உச்சியில் இருப்பவர்கள். தம்மை அழைக்க வந்த விழா நிர்வாகிகளிடம் மாஸ்கானி ஒரு நிபந்தனை விதித்தார். தாம் பங்குகொள்ளத் தயார் என்றும் ஆனால் டாஸ்கானிக்குக் கொடுக்கப்பட விருக்கும் சன்மானத் தொகையைவிட ஒரு 'லீரா' நாணயமாவது தமக்கு அதிகமாக அளிக்கப்பட வேண்டுமென்றும் நெருக்கினார். நிர்வாகிகள் ஒப்புக் கொண்டார்கள். விழா நடந்து முடிந்தது. மாஸ்கானிக்குச் சேர வேண்டிய சன்மானத்தை மரியாதையுடன் தட்டில் வைத்து நீட்டினார்கள். மாஸ்கானி திகைத்தார். தட்டில் ஒரே ஒரு 'லீரா' நாணயம் மட்டும் இருந்தது. அவருடைய ரகசிய நிபந்தனையை எப்படியோ தெரிந்து கொண்ட டாஸ்கானி சன்மானம் ஏதும் இல்லாமலே தம் இசை நிகழ்ச்சியை நடத்த ஒப்புக் கொண்டார். பாவம் மாஸ்கானி! அவருடைய போட்டி மனப்பான்மையே அவர் காலை வாரிவிட்டது.

தகவல்: எஸ். ராமு.

---

படகு எவ்வளவு செம்மையாக அமைந்திருந்தாலும் கடலின் அலைகள் அதை அசைத்து ஆட்டித்தானே தீரும்? மனம் எவ்வளவு பண்பட்டிருந்தாலும் உடம்பின் வேட்கை ஓரளவு அதை அலைத்துத்தான் தீரும். ஓட்டைப் படகு விரைவில் அமிழும்; உயர்ந்த படகு மெல்ல அமிழும்.

மு.வ. எழுதிய நெஞ்சில் ஓர் முள்
அனுப்பியது: மு. சுப்பிரமணியம்



# நான் வாங்கிய புடவை

எஸ். பத்மாவதி

"பானு! இந்தத் தீபாவளிக்கு உனக்கு ஐம்பது ரூபாய்க்குத்தான் புடவை. அதற்குள் என்ன புடவை வேண்டுமானாலும் வாங்கிக்கொள்" என்று கணவர் கூறவே நான் திடுக்கிட்டேன்.

"இந்த வருஷம் ஏகப்பட்ட செலவு. உனக்குத் தெரியுமே, பானு! இன்ஷ்யூரன்ஸ் பிரீமியம் வேறு இந்த மாதம் ஏகப்பட்டது கட்டியாகணும்" என்று இவர் கொஞ்சும் குரலில் சொல்லவே, "சரி, ஐம்பது ரூபாய்ப் புடவையே போதும்" என்று அரை மனசுடன் சம்மதித்தேன்.

ஐம்பது ரூபாய்க்கு நல்ல 'சில்க்' புடவையாக வாங்கலாம் என்று மவுண்ட் ரோடு சில்க் கடைக்கு இருவரும் கிளம்பினோம்.

பத்துக் கடைகள் ஏறி இறங்கியும் ஒரு புடவையும் என் மனசுக்குப் பிடித்தமாயில்லை. "இது இலேசு. இது கனம். இது அகலம் கட்டை. அது சாயம் போகும். இது நனைந்தால் சுருங்கும். இதற்குக் கரை இல்லை. இது நீளம் குறைவு" என்று நான் ஒவ்வொன்றாகத் தட்டிக் கழிக்கவே சலிப்படைந்த என் கணவர் "மேலே பத்தோ இருபதோ ஆனாலும் பரவாயில்லை, பானு! உனக்குப் பிடித்தமான புடவையை வாங்கிக் கொள்" என்று தெரிவித்தார்.

அவர் சொன்ன பத்து, இருபதுடன், நானும் ஒரு பத்தைச் சேர்த்துக் கொண்டு, (என் கணவர் கணக்கில் சிறிது மந்தம் என்ற நம்பிக்கையில்) "எண்பது எண்பத்தைந்து ரூபாய்க்கு வாங்குவதானால் சில்க் புடவை வாங்குவானேன்? குறைந்த விலைக்கு விற்கப்படும் பட்டுப் புடவையையே வாங்கலாமே? உழைக்கும்" என்று யோசனை கூறவும் பதினைந்தாவது கடையிலிருந்து வெளிவந்த என் கணவர் இன்னும் நான்கு கடைகள் என்னுடன் ஏறி இறங்குவதைத் தவிர்க்கும் உத்தேசத்தில் "அப்படியே செய், பானு! நாளை பட்டுப் புடவை வாங்கப் போகலாம்" என்று கூறிக் காரை நோக்கி விடுவிடு என்று நடந்தார். நானும், இன்னும் பாக்கியிருந்த நான்கு சில்க் ஹவுஸ்களையும் அலட்சியப் பார்வை பார்த்துக் கொண்டே பணிவுடன் அவரைப் பின்தொடர்ந்தேன்.

மறு நாள் பட்டுப் புடவைகள் விற்கும் ஜவுளிக் கடைகளை நோக்கிப் படையெடுக்க ஆரம்பித்தோம். "தீபாவளிக்குப் பதினைந்து நாட்கள் முன்பாகவே கடைகளுக்குச் சென்றால் கூட்டம் குறைவாக இருக்கும். நாம் நினைத்தபடி புடவைகளைப் பொறுக்கலாம்" என்று நான் எண்ணியது போலவே மனிதர் எல்லோரும் எண்ணியிருக்கிறார்கள் என்பது கடைக்குப் போன பிறகுதானே தெரிந்தது!

கடைகளின் வாசலில் நின்று கொண்டிருந்த பணியாட்கள் 'வாங்கம்மா! வாங்கம்மா. உள்ளே வந்து பாருங்கள்' என்று அழைத்த மாதிரியைப் பார்த்து விட்டு எனக்கே இவர்மேல் கோபம் வந்தது.

'எண்பது ரூபாய்க்குப் பட்டுப் புடவை வாங்க வந்தவள்' என்று தெரிந்தால் கடைக்காரப் பையன் என்ன நினைப்பான் 'என்ற எண்ணம் என் உடலைக் கூசவைத்தது. கடைக்காரர் செய்யும் உபசாரத்துக்காகவாவது நூறு ரூபாய் புடவை எடுத்தால் தேவலை என்று எண்ணினேன்.

அந்தப் பிரபலமான ஜவுளிக் கடையில் கூட்டம் சொல்லி முடியாது. ஜகஜ்ஜோதியாக மின் விளக்குகள் கண்களைப் பறித்தன. கடைச் சிப்பந்திகள் பரபரப்பாகப் புடவைகளை எடுத்துப் பாவைகள் முன் குவித்துக் கொண்டிருந்தனர். அவ்வளவு பரபரப்பிலும் கடை முதலாளி முன்னால் வந்து "வாங்கம்மா, வாங்க! டேய், அம்மாவுக்கும் ஐயாவுக்கும் புடவை காட்டுடா!" என்று உத்தரவிடவும், ஓடிவந்த சிப்பந்தி ஒருவன் எங்களைப் பணிவுடன் அழைத்துப் போய் உட்கார வைத்து, பளபளவென்று மின்னும் 'டிஷ்யூ' புடவைகளை அள்ளி எங்கள் முன்னால் போட்டான். ஒவ்வொன்றும் குறைந்தது மூந்நூற்றைம்பது, நானூறு ரூபாய் விலை! நான் திகைப்புடன் கண்களை நிமிர்த்திக் கடையை ஒரு நோட்டம் விட்டபோது, கடைக்கு வந்திருந்த மற்ற நாரீமணிகள் அனைவரும் தங்கள் முன்னிருந்த புடவைக் குவியலையும் மறந்து, என்னையே உற்றுப் பார்ப்பது தெரிந்தது. அவர்கள் கண்களில் பொறாமை பொங்கி வழிவதாகவும் எனக்குத் தோன்றியது.

நான் பெருமையுடன் ஒரு 'டிஷ்யூ' புடவையை அலட்சியமாகக் கையில் எடுத்துப் பிரித்தேன். அப்பொழுதுதான் மூக்குக் கண்ணாடியைச் சாவகாசமாக துடைத்துக் கண்களில் பொருத்திக் கொண்ட என் கணவர் என் கையிலிருந்த புடவையில் கண்களை ஓடவிட்டார்.

அடுத்த கணம் அவர் கடைக்காரனைப் பார்த்து, "அடடா! இந்தப் புடவை இல்லை!" என்று சொல்ல வந்ததும் நான் சட்டென்று அவர் கையை நறுக்கென்று கிள்ளவும் அவர் திடுக்கிட்டுத் தாம் சொல்ல வந்ததைப் பாதியில் நிறுத்தி விட்டு, என்னைப் பார்த்துப் பேந்தப் பேந்த விழித்தார்.

நானூறு ரூபாய் புடவை வாங்க வந்தவளாக என்னைப் பார்த்து மதிப்புப் போட்ட கடைக்காரர் முன் இவர் ஒரு நிமிடத்தில் என் வேஷத்தைத் தம் அசட்டுத் தனத்தால் கலைக்கப் பார்த்தால், நான் பொறுப்பேனா? சிறிது பலமாகக் கிள்ளிவிட்டேன் போலும்! அவர் தம் கையைத் தடவிக் கொண்டு என்னைப் பரிதாபமாகப் பார்க்கவும் அப்பொழுது கடைச் சிப்பந்தி கொண்டு வந்து நீட்டிய 'கூல் டிரிங்கை' எடுத்து அவர் கையில் வைத்தேன். பிறகு அவர் வாயே திறக்கவில்லை.



டிஷ்யூ புடவைகள் எல்லாம் வெளியில் வந்தன. நான் ஒவ்வொன்றாகப் பிரித்துப் பார்த்து விட்டு உதட்டைப் பிதுக்கி என் அதிருப்தியைத் தெரிவித்தேன். என் மைத்துனன் கலியாணத்தில் அவன் மாமியாருக்கு மச்சினன் பெண்ணின் பேத்தி கட்டிக்கொண்டிருந்த புடவை என் கண்ணிலேயே நிற்பதாகவும், அது மாதிரி புடவையைத் தேடி வந்ததாக நான் கதையளந்தேன். கடைக்காரன் பணிவாக "அது எந்த மாதிரிப் புடவை என்று சொல்லுங்க. ஆர்டர் எழுதிக் கொண்டு தீபாவளிக்கு முன்னால் நெய்து தருகிறோம்" என்றதும் எனக்கே சற்று நிலைமையைச் சமாளிக்க முடியாமல் போய் விட்டது. பிறகு ஒரு வழியாக அந்த 'இல்லாத' புடவையையே கொண்டு வந்து காட்டுவதாகச் சொல்லிக் கடையை விட்டு வெளியே வந்தபோது, எனக்கு நன்றாக வியர்த்து விட்டது.

இதுவரை மௌனமாக இருந்த கணவர் வெளியில் வந்ததும், வட்டியும் முதலுமாக எரிந்து விழுந்தார்.

"இது என்ன அட்டுத்தனம் பானு! என் நேரமெல்லாம் வீண்; உன் நேரமும் வீண்; அந்தக் கடைக்காரன் நேரமும் பாழ்" என்று இவர் அடுக்கிக் கொண்டே போகவும், 'பாவம்! இவருக்கு எங்கே இதெல்லாம் புரியப் போகிறது?' என்று எண்ணத்தில் நான் பதில் பேசாமல் இருந்து விட்டேன்.

இருந்தாலும் டிஷ்யூ புடவை வாங்கா விட்டாலும் பார்க்கக்கூடவா கூடாது? அதற்

கென்ன இவ்வளவு ஆர்ப்பாட்டம் என்ற கோபம் மனத்தில் எழுந்தது. அடுத்துச் சென்ற மூன்று கடைகளிலும் நுழையுமுன் அவரே மந்திரிக் கொட்டை போல ''எண்பது ரூபாய்ப் புடவை'' என்று கட்டியம் கூறிக்கொண்டே சென்று அமர்ந்தார். நான் மௌனமாக உற்சாகம் குன்றிப் போய் அவரே புடவையைப் பொறுக்கட்டும் என்று சும்மா இருந்து விட்டேன்.

என் மனநிலை அவருக்குப் புரிந்திருக்க வேண்டும். நான் எல்லாப் புடவைகளையும் வெறுப்புடன் ஒதுக்குவதைப் பார்த்துவிட்டு, சிறிது சமாதானக் குரலில் ''பானு! பத்தோ இருபதோ மேலே போனால் போகட்டும். உனக்குப் பிடித்த புடவையாக எடுத்துக் கொள்'' என்று தாழ்ந்த குரலில் தெரிவிக்கவும், நான் உற்சாகத்துடன் நிமிர்ந்து முன் போலவே எண்பதுடன் பத்து, இருபதைச் சேர்த்துக்கொண்டு, கடைக்காரரிடம், ''இந்தாப்பா! நூற்றுப் பத்து, நூற்றுப் பதினைந்து ரூபாய்க்குள் புடவை எடு'' என்று அதிகாரக் குரலில் தெரிவித்தேன். பிறகு கணவரைப் பார்த்து நன்றியுடன் புன்னகை பூத்தேன். அவர் ஓர் அசட்டுச் சிரிப்புடன் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டார்.

கடைக்காரன் கெட்டிக்காரன். அவனுக்குப் பெண்களின் மனநிலை தெரியாதா? அவன் நூற்றிருபது, நூற்றிருபத்தைந்து ரூபாய் விலையுள்ள புடவைகளை என் முன் அள்ளிப் போட்டுக் கொண்டிருந்தான். நானும் விலையைப் பார்த்தும் பார்க்காதவள்போல் இருந்தேன். புடவை கிடைத்து விட்டால் என் கணக்குப்படி இன்னும் பத்தோ, இருபதோ அதிகமானாலும் கணவரிடம் நைஸாகப் பேசிச் சமாளித்து விடலாம் என்ற நம்பிக்கையில்தான்!

'நூற்றிருபத்தைந்து ரூபாய்ப் புடவை' என்றதும் சட்டென்று அடுத்த தெருவில் திறக்கப்பட்டிருக்கும் புதிய ஜவுளிக்கடையின் ஞாபகம் வந்தது எனக்கு. அதில் இந்த விலைக்கு நவநாகரிக டிசைன்களில் புடவைகள் வந்திருப்பதாக என் சிநேகிதிகள் கூறியது நினைவுக்கு வந்தது. உடனே இந்தக் கடைப்

# ஒலி பெற்ற வடிவம் ....................

பிறப்புடன் ஏற்படுவது சத்தம். சத்தத்தை எழுத்தில் கொண்டு வருவது மனிதப் பிரயத்தனத்தின் பலன். பேசப்படும் வேகத்திலேயே ஒலியின் சாயைகளைச் சித்திரிப்பது பின்னர் வந்த கலை.

இது இந்தியாவில் முன் தோன்றியதா, அல்லது மேல் நாடுகளிலா என்ற பிரச்னையை ஆராய்ச்சியாளர் எழுப்புகின்றனர்.

காலமற்ற வேதம் சப்தப் பிரமாணம் என்பதை நமது பெரியவர்கள் அடிக்கடி எடுத்துரைப்பதுண்டு. எனினும் அது எவ்வாறு தேவ பாஷையான சம்ஸ்கிருதத்தில் நாகரி லிபியில் பொறித்து வைக்கப்பட்டது என்ற கேள்வி எழுகிறது. இதனைக் குறித்துச் சரியான விடையளிப்பது சிரமமெனினும், சப்தத்தை அவ்வப்போது சித்திரித்துக் குறித்துக்கொள்ளும் வேக முறை, வேதம் தோன்றிய சிறிது காலத்துக்குப் பிறகாவது நடைமுறைக்கு வந்திருக்க வேண்டும் என்று அறிஞர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள்.

இதற்கு 'ஒலியெழுத்து' உருக் கொடுத்தவர் விநாயகப் பெருமான் என்றும், அவரது உதவியால்தான் வேதவியாசர் அருளிய மஹாபாரத காவியம் அழியாப் பொக்கிஷமாக இன்றும் திகழ்ந்து வருகிறது என்றும் கூறுகின்றனர். தென் இந்தியச் சுருக்கெழுத்தாளர் சங்கத்தின் சின்னமே எழுத்தாணி கொண்ட விநாயகரும் வியாச பகவானும்தான்.

இங்கிலாந்து தேசத்து வர்த்தக மேதையும் அரசியல்வாதியுமான லார்டு பர்ன்ஹேம் இதனை ஆதரிக்கும் முறையில் பேசியிருக்கிறார்.

''இந்தியாவில் சரித்திரம் தோன்றிய காலம் முதல் சுருக்கு முறையைப் பயன்படுத்தி ஞாபகசக்தியின் மூலமாயும், எழுத்துருபத்திலும், பல்வேறு பொக்கிஷங்களைப் பாதுகாத்து வந்துள்ளனர். தற்சமயம் சென்னை மக்கள் மாதிரி — ஒரு வேளை இங்கிலாந்தைத் தவிர — சுருக்கெழுத்தை வேகமாக எழுதுபவர் உலகில் எந்த நாட்டிலுமே இல்லை'' என்பது அவர் கூற்று.

சிசேரோ, டெமாஸ்தனிஸ் காலத்தில் அதாவது கிறிஸ்து பிறப்பதற்கு நான்கு நூற்றாண்டுகளுக்குமுன்பே கிரீஸ் தேசத்தில் சுருக்கி எழுதும் முறையைக் கையாண்டுள்ளனர் என்று தெரிய வருகிறது. இதனைக் குறித்து இன்றும் ஏதென்ஸ் நகரில் ஒரு கல்வெட்டு இருக்கிறதாம்.

மார்கஸ் டல்லியஸ் டைரோ என்பவர், சிசேரோ முதலான செனட்டர்களின் பேச்சுக்களைக் குறிப்பெடுக்கச் சுருக்கு முறை ஒன்றைப் பயன்படுத்தினாராம்.



பின்பு பிரான்ஸ் தேசத்திலும் பரவிற்றும். இங்கிலாந்தில் உள்ள பொருட்காட்சிச் சாலையில், கி. பி. பத்தாம் நூற்றாண்டிலிருந்து அநுஷ்டித்து வந்த சுருக்கெழுத்து முறைகளை இன்னமும் பாதுகாத்து வருகிறார்கள். 1588ல் டாக்டர் டிமதி பிரைட் என்பவர்தான் முன்னாள் ராணி எலிசபெத் அம்மையார் காலத்தில், முதன் முதலாக, சுருக்கெழுத்து அச்சுப்புத்தகம் வெளியிட்டார். சர்ச் விஷயங்களைப் பிரகாரித்துப் பரப்புவதற்கு இதனைப் பயன் படுத்தி வந்தனர்.

புடவைகள் என் கண்களுக்குக் கர்நாடகத் தினுசாகத் தென்படவே அந்தப் புடவைக் கடைக்குச் செல்ல எழுந்துவிட்டேன்.

அந்தப் புதுக் கடையில் நுழைந்து புடவைகள் பகுதிக்குச் சென்றபோது கும்பல் நடுவிலிருந்து "அடியே பானு! வா, வா!" என்று குரல் கேட்கவும் நான் சுற்று முற்றும் பார்த்தேன். புடவைக் குவியலின் மறுபுறமிருந்து பங்கஜம் தன் பருத்த தேகத்தைத் தூக்கிக் கொண்டு எழுந்து வந்தாள். அவள் என் கணவரின் நண்பருடைய மனைவி.

"தீபாவளிக்கு எடுத்தாச்சா ஜவுளி?" என்று ஆரம்பித்து அவளும் நானும் பேச ஆரம்பிக்கவும், கடைச் சிப்பந்தி அது கடை என்பதை உணர்த்தத் தொண்டையைப் பல முறை கனைத்துக் குரல் கொடுத்தான். பிறகு தொண்டை கம்மிப் போன காரணத்தால் சும்மா இருந்தான்.

கடைசியில் பங்கஜம் ஆரம்பித்த விஷயத்துக்கே திரும்பி வந்தபோது அரை மணி நேரம் ஓடி விட்டிருந்தது.

பங்கஜம் கேலிச் சிரிப்புடன் "சிம்பிளா?" என்று அதிசயக் குரலில் கேட்டுவிட்டு, என் கணவரைப் பார்த்து, "ஏன் சார்! உங்க மனைவி சொல்லுவதைக் கேட்டீர்களா? போன மாதத்திலிருந்து உங்கள் சம்பளம் நூறு ரூபாய் உயர்ந்திருக்கிறது. நல்ல புடவையாக நீங்கள் எடுத்துத் தரவேண்டும் என்று ஆசைப்பட்டால்கூட இந்தச் சிக்கனக்காரிக்கு மனசு வராது. எப்பவுமே இப்படித்தான்... சுத்த கஞ்சராணி!" என்று கூறிக்கொண்டே போனாள். நான் சிலிர்ப்புடன் திரும்பிக் கணவரைப் பார்த்து முறைத்தேன். அவர் உடனே சர்வ நாடியும் தளர்ந்தவர் போல் "அம்மா, பரதேவதே! உன்னிடம் சொல்லாதது தப்புத்தான். இப்போது என்னுடைய மானத்தை வாங்காதே!" என்று கண்களால் கெஞ்சிவிட்டு உடனே பரவலாகக் கிடந்த புடவைக் குவியலிலிருந்து நாற்றைம்பது ரூபாய் விலையுள்ள புடவையை எடுத்து என் முன் காட்டினார். நான் அவருடைய அப்போதைய எண்ணத்தைப் புரிந்து

• • • • • • • • • • • • • • • • • • • • • • • • • •

பாட்டப்பத்து ரா. ராமச்சந்திரன்

பாரதத்தில் துரதிர்ஷ்டவசமாக, சுருக்கெழுத்தைக் குறித்து ஆதாரபூர்வமான சான்றுகள் கிடைக்கவில்லை. ஆனால் வாழ்க்கையிலேயே சிக்கனமாக இருப்பதும், சுருக்கமாகப் பேசுவதும் எழுதுவதும் முக்கிய அம்சங்களாக இருந்து வந்திருக்கின்றன. கல்விலும் சுவடியிலும் பெரிய பெரிய கருத்துக்களையும் கவிதை உருவில் சுருக்கி அடக்கி வைத்துள்ளது நம் நாடு.

கல்லும் சொல்லாதோ கவி என்று அன்று கூறினான் கம்பன். இதனை ஆமோதித்துப் பின் வந்த கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையும்,

"கல்லின் கவிதைகள் எல்லாம் இரு
காது குளிரக்| கேட்பேன்;
புல்லின் பேச்சை அறிவேன் அதைப்
புராணமாக விரிப்பேன்"

என்றார். ஏன், வள்ளுவர் செய்த ஈரடிக் குறளுக்கு விளக்கம் பத்துப் பக்கங்கள் போதாவே.

அன்றாட வாழ்க்கைப் பேச்சுகளிலேயே 'அநாவசிய' வார்த்தைகளை அகற்றுவது சகஜம். 'போய்விட்டு வா' என்பதை 'போய் வா' என்று சுருக்குகிறோம். 'போகலாமா' என்பதை 'போலாமா' என்று பேசுகிறோம். சங்க காலத்தில் 'ஒலி எழுத்து' என்ற ஒரு சுருக்குமுறை நடைமுறையில் இருந்து வந்ததாகச் சொல்லப்படுகிறது.

சுருக்கெழுத்து என்றால் கோடு கிழிக்கும் முறைதான் என்று பொருள் கொள்வது சரியல்ல. அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற 'நாடுகளில் கூடப் பத்திரிகை நிருபர்கள் 'பிட்மேன்' 'ஸ்லோயன்' என்ற பெயர் பெற்ற முறைகளைப் பயிலுவதில்லை. "பிரீஃப் ரைட்டிங்" (Brief Writing) முறைகளைக் கையாளுகிறார்கள். அதாவது, பத்து வார்த்தைகள் பேசப்பட்டால், அவைகளின் கருத்துக்களையும் சாயைகளையும் ஒன்றிரண்டில் சித்திரித்து விடுகிறார்கள்.

உதாரணமாக "உலகம் முழுவதிலும்" என்பதை உணர்த்தப் பெரிய சுழியைப் போட்டு அதன் மேல் சின்ன சைபரைப் போடுகிறார்கள். இதே மாதிரி கற்பனைக் கெட்டியவாறு தாங்களாகவே தயார் செய்து கொள்கின்றனர்.

ஆனால் நம் தமிழ் நாட்டில் சுருக்கெழுத்து வானில் ஒளியைக் காணவில்லை. கல் பேசும் காலம் காணாமலே போய் விட்டதா? அல்லது நாம் பேசாக் கல்லாய்ச் சமைந்தோமா? ஆங்கில முறைகளைத் தழுவித்தான் நம் சுருக்கெழுத்து முறைகள் அமைய வேண்டுமா? இது தவறு என்று சொல்லவில்லை. நம் பண்டைய முறைகள் என்னவாயின? நம் கிரியா சக்திகள் எங்கு மறைந்தன? கற்பனைச் சிந்தனை எல்லையை எட்டிவிட்டதா?

எவ்வளவுதான் 'தழுவி' எழுதினாலும், நம் மொழியின் சிறப்புக்களைப் பூரணமாகப் பிரதிபலிக்கச் செய்ய முடியவில்லையே! பல்லாண்டு பயிற்சி பெற்ற பின்பும், ஆங்கிலச் சுருக்கெழுத்தில் கிட்டும் வேகம் தழுவல் முறை தமிழ்ச் சுருக்கெழுத்தில் கிட்டுவதில்லையே!

இந்நிலைமையைச் சமாளிப்பது அசாத்தியம் என்று நான் சொல்ல மாட்டேன். ஆராய்ச்சி மனப்பான்மையுடன் தீவிரமாக முயன்றால் தமிழ் மொழியின் பூரணப் பொலிவுடன் கூடிய ஒலி அசைவுகளை எடுத்துரைக்கும் புதியதொரு சுருக்கெழுத்துப் பாணியை இத்துறையிலுள்ளவர்கள் தீவிரக் கவனம்செலுத்தினால்உருவாக்க இயலாமலா போய்விடும்?



கொண்டேன். சரியான சந்தர்ப்பம். அதை நழுவ விட நான் அசடா என்ன?

அவர் கையிலிருந்த புடவையைப் பிடுங்கிக் கீழே வைத்து விட்டு நூற்று எழுபத்தைந்து ரூபாய் விலையுள்ள புடவை ஒன்றை எடுத்து அவர் முன் காட்டினேன்.

அவர் ஒரு நிமிடம் தயங்கினார். மறு நிமிடம் அசட்டுச் சிரிப்புடன் தலையை ஆட்டினார். நானும் 'மன்னித்தேன்' என்று கண்களால் செய்தி சொல்லிவிட்டுத் திரும்பினேன்.

எங்கள் மௌன நாடகத்தை ரசித்துக் கொண்டிருந்த பங்கஜம், மௌனமாக "என்ன சங்கதி?" என்று கண்களால் கேட்டாள். "பிறகு சொல்கிறேன்" என்று நானும் மௌனமாக ஜாடை காட்டிவிட்டு உற்சாகத்துடன் நூற்று எழுபத்தைந்து ரூபாய் புடவை ரகங்களை ஆராய ஆரம்பித்தேன்.

கணவர் மெதுவாக எழுந்து தள்ளாடியபடி கடைக்கு வெளியே போட்டிருந்த நாற்காலியில் சென்று அமர்ந்ததைப் பார்த்தபோது எனக்குச் சிறிது பரிதாபமாக இருந்தது. ஆனாலும் "என்னிடம் சம்பளம் அதிகமானதைச் சொல்லாமல் மறைத்ததற்குச் சரியான தண்டனைதான் இது!" என்று எண்ணி மனத்துள் சிரித்துக் கொண்டேன்.

புடவைக் குவியலைக் கிளறி — குவியலா? அல்ல — அவியல்! அதிலிருந்து புடலங்காய்த் தானைப் பொறுக்கி எடுத்தேன். புடலங்காய் எனக்கு மிகவும் பிடிக்குமாதலால் அவியலில் புடலங்காய்த் தானைக் கடித்தால் ஏற்படும் மகிழ்ச்சி அந்தப் புடவையைப் பார்த்ததும் எனக்கு ஏற்பட்டது.

நான் ஒரு புடவையைத் திருப்பித் திருப்பித் திருப்பிப் பார்ப்பதைப் பார்த்த கடைக்காரன், "அம்மா! உங்க செலக்ஷன் வெகு பிரமாதம்! இதுதான் நவீன மோஸ்தர். புது பாஷன் புடவையம்மா! குமரன் கலர், குமரிப்பெண் பார்டர்!" என்று சொல்லவும் அந்தப் புடவையை நான் ஆசையுடன் தடவிப் பார்த்தேன்.

"பத்தே புடவைதாம்மா இதில் வந்தது. இதுக்கு ஏகப்பட்ட கிராக்கி. எல்லாம் வித்துப் போச்சு! அடியிலே சிக்கிக் கிடப்பதனாலே இதுவரை யார் கண்ணிலேயும் இந்தப் புடவை படலே. உங்கள் அதிர்ஷ்டம் உங்களுக்கு அகப்பட்டது" என்று அவன் கூறக் கூற அந்தப் புடவையின் மதிப்பு என் மனத்துள் உயர்ந்து கொண்டே போயிற்று.

'விலை சிறிது அதிகம்தான். பட்ஜெட்டை விட (என்னுடைய பட்ஜெட்தான். கணவரின் பட்ஜெட்தான் எப்போதோ படுத்து விட்டதே!) பத்தோ இருபதோ அதிகமானாலும் நூற்று எழுபது ரூபாய்க்கும் இருநூறு ரூபாய்க்கும் அதிக வித்தியாசம் இல்லை. பிடித்த புடவைதானே முக்கியம்!' என்று சமாதானம் கூறிக் கொண்டேன்.

அதற்குள் புடவைக் குப்பலிலிருந்து வெளிப்பட்ட பங்கஜம் "சை! ஒரு புடவை கூட நன்றாயில்லை. என்னப்பா இன்னும் ஏதாவது இருந்தால் எடுத்துப் போடேன்" என்று கடைக்காரனைப் பார்த்துக் கூறினாள்.

அவள் காலியான கண்ணாடி அலமாரியைப் பார்த்துத் திகைப்பதைப் பார்த்ததும் பாராதவள் போல "என்னடீ பானு! நீ செலக்ட் செய்தாச்சா! காட்டு!" என்று என் கையிலிருந்த புடவையை வாங்கிப் பார்த்த பங்கஜம், "வெளிர் மஞ்சள் நிறம், பஞ்சு மிட்டாய் கலர் பார்டர்..." என்று விமரிசிக்கவும் நான் திடுக்கிட்டேன்.

குமரன் கலரும், குமரிப் பெண் பார்டரும் ஒரு நிமிஷத்தில் பஞ்சு மிட்டாயாக மாறினால் எப்படி இருக்கும் என்று நீங்களே எண்ணிப் பாருங்கள். என் உற்சாகமெல்லாம் ஒரு நொடியில் பஞ்சு மிட்டாயை வாயில் போட்டது போலக் கரைந்து விட்டது.

எங்கள் சம்பாஷணையையும் என் முகம் போன போக்கையும் கவனித்த கடைக்காரன், சாமர்த்தியமாக "இந்தப் புடவையில் இந்தக் கலருக்குக் குமரன் கலர், குமரிப்பெண் பார்டர் என்றுதான் பெயர். யாரிடம் வேண்டுமானாலும் கேட்டுப் பாருங்கள்" என்று தீர்மானமாகக் கூறவும், நான் மனம் தேறிப் புடவையைப் பார்த்த போது, 'என்ன ஆச்சரியம்! அது திரும்பவும் குமரன் கலர், குமரிப்பெண் பார்டராக' என் கண்களில் காட்சியளித்தது.

"இந்த அமுதா கலர், அம்பிகா கலர் இதுலே எதுடீ பிடிச்சிருக்கு?" என்று பக்கத்தில் இருந்த பெண் தன் சிநேகிதியிடம் புடவைகளைக் காட்டிக் கேட்டுக் கொண்டிருந்தாள். நான் ஆர்வத்துடன் அது என்ன புதுக் கலர் என்று எட்டிப் பார்த்தேன்.

எனக்குச் சிரிப்பு வந்தது. கர்நாடகப் பெயர்கள் எல்லாம் நவநாகரிகப் பெயர்களாக மாறும் இந்தக் காலத்தில் வர்ணங்களும் கர்நாடகப் பெயர்களை நவநாகரிகமாக மாற்றிக் கொண்டால்தான் செல்லுபடியாகும் போலும்!

சிறு வயதில் அந்த நிறங்களுக்கு நீலம், பச்சை என்று பெயர் சொல்லிக் கொடுத்தது ஞாபகம் வந்தது. சற்று முன் கடைக்காரன் கூறியதும் நினைவில் எழுந்தது. 'புடவையில் இந்தக் கலருக்கு இந்தப் பெயர்தான்!' என்று அவன் தீர்மானமாகச் சொன்னதை நான் மறக்கலாமா என்று கூறிக் கொண்டே மன நிறைவுடன் கடையை விட்டு வெளியே வந்தேன்.

வீட்டுக்கு வந்ததும், தம் 'பட்ஜெட்' கவிழ்ந்த துக்கத்துடன் அமர்ந்திருந்த கணவரிடம் புடவையைக் காட்டியபோது அவர் சலிப்புடன், "உம்... பழைய கிரீம் கலர்! ரோஸ் பார்டர்!" என்று கூறவும் நான் அவரை முறைத்துப் பார்த்துவிட்டு "இல்லே குமரன் கலர், குமரிப்பெண் பார்டர்!" என்று கூறிவிட்டு, 'அந்தப் பச்சோந்திப் புடவை பலர் கண்களிலும் பட்டுப் பலவித நிறம் மாறிவிடப் போகிறதே' என்று பயத்தில் உடனே எடுத்துப் பீரோவில் வைத்துப் பூட்டிவிட்டேன்.

தீபாவளிப் புடவையை நினைக்கும்போதெல்லாம் மனதில் பளிச்சிடும் பஞ்சு மிட்டாய் ஞாபகத்தை நாளடைவில் மறந்து விடுவேன் என்று நம்புகிறேன்.




## கந்தன் கருணை

'கந்த புராணத்தின் மகிமை எந்தப் புராணத்துக்கும் இல்லை' என்பது வெறும் பாராட்டுரை அல்ல. கச்சியப்ப சிவாசாரியார் இயற்றிய கந்தபுராணம் சொற்சுவையும், பொருட்சுவையும் மிக்குப் பொலிந்து கந்தனடியார்களுக்கு என்றும் பக்திக் கருவூலமாக விளங்குவது.

அதுவும் கந்தனடியார்களுள் தலைசிறந்தவரும், கந்தன் கருணையினால் கந்தன் பெருமையை எடுத்துச் சொல்லும் ஆற்றல் பெற்றவருமான திருமுருக கிருபானந்த வாரியார் அவர்களின் மூலம் முருகன் கதை கேட்பதற்கு ஈடாக எதைச் சொல்ல முடியும்?

தமிழ் கூறும் நல்லுலகமெங்கும் தம் வாக்கு வன்மையினால் அற நெறியைப் பரப்பும் அரும் பெருந் தொண்டாற்றி வரும் திரு வாரியார் அவர்கள் கந்த புராணத்தைக் கல்கி இதழ்களில் தொடர் கட்டுரைகளாக வழங்கிப் பக்தி உள்ளங் கொண்ட பல்லாயிரக் கணக்கானவர்களுக்குப் பரவசமூட்டியது யாவரும் அறிந்ததே.

திரு கிருபானந்த வாரியார் அவர்களின் நூலைப் படிப்பதன் பயன் என்னவென்றால், ஆயிரக் கணக்கான நூல்கள் நிறைந்த ஒரு பெரிய நூல் நிலையத்துக்குள் புகுந்து அத்தனை நூல்களையும் புரட்டிப் பார்ப்பதை விட அதிகப் பலன் அளிப்பதாகும். வேதம், உபநிடதம், சாஸ்திரம், இதிகாசம், புராணம், திருக்குறள், திருப்புகழ் முதலிய பல்வேறு நூல்களின் அரிய கருத்துக்களை மிக எளிதில் படித்துப் பயன் பெறலாம். திரு வாரியார் அவர்களின் எழுத்து ஓர் இலக்கியக் கருவூலமாக, வேதாந்த பொக்கிஷமாக, தத்துவதரிசினியாக, நீதிக் களஞ்சியமாக விளங்குவதாகும். வாரியாரவர்களின் எழுத்துப் பணிக்கு உதவி புரியும் திரு வி. என். சாமி, 'கந்தன் கருணை'யை நூல் வடிவில் தந்திருக்கிறார். பொன்னான பணி.

கந்த புராணச் செய்யுட்களின் சாராம்சமாக விளங்கும் இந்நூல் ஒரு வசன காவியம். ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு சங்கராசாரிய ஸ்வாமிகளின் ஆசியுரை நூலுக்குத் தனி மதிப்பைத் தருகிறது.

பிரசுரம்: சுவாமி பதிப்பகம், 16-ஏ/2, கோபாலபுரம் 2வது தெரு, சென்னை-6. மலிவுப் பதிப்பு: ரூ. 3.50.

## வாசவேச்வரம்

முற்றிலும் கிராமத்துச் சூழ்நிலையை நிலைக்களனாகக் கொண்டு இந்தச் சிறு நவீனம் மிகவும் சுவையாகப் புனையப்பட்டிருக்கிறது.

கிராமத்து மக்களின் மனப்பான்மை, பொழுதுபோக்கு, விருப்பு வெறுப்புக்கள், சண்டை சச்சரவுகள் ஆகியவையெல்லாம் இந்நூலில் படம் பிடித்துக் காட்டியதுபோல் வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. கிராமத்தின் இயற்கை எழிலை எத்தனை அழகாக எளிய சொற்களில் வர்ணித்திருக்கிறார் ஆசிரியை!

ஒரு சிறு கனற்பொறி பெரு நெருப்பாகி விடுவதைப் போல் ஒரு சிறு மனத்தாங்கல், பூசலாகி, சச்சரவாகி, கைகலப்பில் வளர்ந்து, கடைசியில் வெட்டுப் பழியில் போய் முடிவதைப் பெரும்பாலும் கிராமங்களில்தான் காண முடியும். பஞ்சாயத்துத் தேர்தலையும், அது சம்பந்தமான தகராறுகளையும் வைத்துக்கொண்டு இந்நூலாசிரியை எத்தனை பெரிய படுகொலையைப் புனைந்திருக்கிறார்!

கிராம வாசத்தில் தோய்ந்து, கிராம மக்களின் உண்மையான வாழ்க்கையை எத்தனை அநுபவபூர்வமாக எடுத்துக் கூறுகிறார் என்பது இந்நூலின் ஒவ்வொரு அத்தியாயத்திலும் விவரமாகக் காணமுடிகிறது. நூல் முழுவதும் கிராமத்து மண்ணின் மணம் இயல்பாகக் கமழ்கிறது.

சப்புக்குட்டி சாஸ்திரிகளின் உபந்யாசத்தை வைத்துக் கொண்டே கதாபாத்திரங்களை இயங்க வைத்திருப்பது ஒரு புதிய பாணி. ஊருக்கு உபதேசம் செய்யும் சாஸ்திரிகளின் நடத்தை, மற்றும் கிராமத்தில் பலருடைய மாசுபடிந்த உள்ளங்கள், பருவப் பெண் கோமுவின் சேஷ்டைகள், மிராசுதார் சந்திரசேகரய்யரின் விசித்திரமான இல்வாழ்க்கை எல்லாவற்றையும் வைத்துக் கொண்டு கிராமத்தின் எல்லை தாண்டாமல் கதையை ஊருக்குள்ளேயே படரவிட்டிருப்பது 'நன்றாயிருக்கிறது.

புத்தகம் நல்ல தாளில் வெகு அழகாகப் படங்களுடன் வெளியிடப்பட்டிருக்கிறபடியினால் எளிதில் யாரையும் கவர்ந்துவிடும்.

எழுதியவர்: ''கிருத்திகா'', பிரசுரம்: டால்டன் பப்ளிகேஷன்ஸ், சந்த மாமா பில்டிங்ஸ், சென்னை-26; விலை: ரூ. 3.60.

## ஸ்தோத்ர மாலா

இச்சிறு நூலில், கணேசர், சுப்பிரமணியர் ரங்கநாதர், மகாலக்ஷ்மி, சரஸ்வதி, பார்வதி ஆகிய தெய்வங்களின் ஸ்தோத்ரங்களெல்லாம் தமிழ் எழுத்தில் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றன. கடைசியில் காணப்படும் சப்தரிஷி ராமாயணம், நவக்ரஹ ஸ்தோத்ரம் ஆகியவைகளுடன் தினசரி பாராயணம் செய்து வந்தால் சர்வ மங்களங்களும் உண்டாகும் என்பது பக்திமான்களின் நம்பிக்கை. இந்நூலைத் தொகுத்தவர் வித்வான் முக்கூர் ஸ்ரீநிவாஸ வரதாச்சாரியார், 78, ஆதியப்ப நாயக்கன் தெரு, சென்னை-1 விலை குறிப்பிடப்படவில்லை.

நான் சின்னப் பையன்தான்! விடிய விடியப் பதினாறு வயசிருக்கும்! மூணும் இனாலோடே பள்ளிக்கூடத்துக்கு முழுக்குப் போட்டுட்டேன். அப்பன் ஆத்தா இல்லாததாலே யாரோ உறவுக்காரங்க பன்னிரண்டு வயசு வரை சோறு போட்டு வளர்த்துட்டு, அப்புறம், "போடா பயலே! உலகம் ரொம்பப் பெரிசு! போய்ப் பொழைச்சுக்க"ன்னு விரட்டிட்டாங்க.

பஸ் ஸ்டாண்டிலே நின்னு கூலி சுமப்பேன்! நாலணு எட்டணுக் கிடைக்கும். அப்போ காலம் செழிப்பான காலம். நாலணுச் செலவிலே ஒரு நாளைக் கழிச்சிடலாம்! மளிகைக் கடையிலே எடுபிடி ஆளாகக் கொஞ்ச நாள் இருந்தேன். ஒரு நாளைக்கு, ரவை, நெய், ஜீனி மூன்றையும் குழைச்சு உள்ளே விழுங்கிக்கிட்டு இருந்ததைக் கடை முதலாளி பார்த்துட்டு அப்படியே ஒரு அறை வைச்சுட்டாரு! ஒரு மாசமா நான் இப்படி விழுங்கறேன். அவர் பார்த்ததில்லே. இன்னிக்குப் பார்த்துட்டாரு!

அவரு வைச்ச அறையிலே எனக்குச் சொந்தமான ஒரு பல் விழுந்திருச்சு! அந்தப் பல்லோட எனக்கு வேலையும் போச்சு.

அப்புறம் கொஞ்ச நாள் மறுபடியும் பஸ் ஸ்டாண்டிலே சுத்தினேன். அப்போத்தான் மக்கடை முத்து என்னை வேலைக்குச் சேர்த்துக்கிட்டார். அவருகிட்டே வேலை செய்யறதிலே எனக்கு ஓர் ஆதாயம். அவரு ஊருக்கு டெண்ட் சினிமா வரப்போ எல்லாம் அதுக்குப் பக்கத்திலே மக்கடை வைப்பாரு. நான் டீ விக்கக் கொட்டகைக்குள்ளே போயிட்டே இருப்பேன். படம் பார்ப்பேன்.

இந்த வயசிலே எனக்கு இரண்டு ஆசை. ஒண்ணு தியாகராஜ பாகவதர் ஆக்ட் பண்ணின படங்களைப் பார்த்துக்கிட்டே இருக்கணும். அதிலேயும் 'சிவகவி' படத்திலே அவரு பாடற 'சொப்பன வாழ்விலே மகிழ்ந்தேன்'கற பாட்டு இருக்கே.... அது மேலே எனக்கு உசிரு!

டெண்ட் சினிமா கண்டிராக்டர்கிட்டே கேட்டே விட்டேன். அவரு இந்தத் தடவை 'சிவகவி' படம் கொண்டு வரப் போற தில்லேன்னு சொன்னவுடனே, எனக்கு அந்தக் கொட்டகைக்கே தீ வைச்சுடலாமான்னு ஆத்திரம் வந்தது. சிரமப்பட்டு அடக்கிக்கிட்டேன். அவரே தான் இன்னொரு தகவலும் சொன்னாரு! எழுபது மைல்கள் தள்ளி ஒரு ஊரிலே அந்தப் படம் ஓடிக்கிட்டிருந்ததாம்.

அவ்வளவு தூரம் போயிட்டு வரப் பணம் வேணுமே! கையிலே இரண்டணுக் காசுதான் இருக்கு...... என்ன பண்ணறது? மனசிலே எத்தனையோ விபரீதக் கற்பனைகள்! அந்த ஊருக்குப் போய்ட்டு வரணும்கிற வெறியிலே மனசிலே இதுவரையில் தோணாத யோசனைகளெல்லாம் தோணிடுச்சு.

இந்த நினைப்பிலேயே முதலாளி முத்து அனுப்பிச்ச காரியத்தை முடிச்சுக்கிட்டு வரபோதுதானு, யாரு வீட்டிலேயோ, அந்தக்

தகவல் கொடுத்தவர்:

திரு அலெக்ஸின் செல்வராஜ்

(ஓய்வுபெற்ற போலீஸ் இன்ஸ்பெக்டர்)

கேட்டுக் கதைபோல் எழுதியவர்: 'மேனு'




## — நடந்ததுதான் நம்புங்கள் —

ரொமபோனிலே, 'சொப்பன வாழ்வில் மகிழ்ந்து' ரிக்கார்டு போடணும்?

வெறி ஜாஸ்தியாயிடுச்சு!.... மனசிலே இருந்த எண்ணத்தைக் காரியமாக்க முடிவு பண்ணிட்டேன். அதற்கான இடமும் வாய்ப்பாகக் கிடைச்சுப் போச்சு!....

❀ ❀ ❀

மிளகாய்ப் பொடி கண்களில் பட்டால் கண்களைத் திறக்க முடியுமா? கண்களை






மூடக்கூடிய மிளகாய்ப் பொடி ஒரு சமயம் கண்களைத் திறக்கவும் உதவி செய்தது. போலீஸார் கண்களையேதான்!

உலகநாதன் ஒரு ஜவுளிக்கடையின் உரிமையாளர். புளியங்குடியில் இரண்டு மூன்று ஜவுளிக் கடைகள்தான் உண்டு. அவைகளில் சற்றுச் செழிப்பான வியாபாரத்தைக் காண்பது உலகநாதன் கடைதான். அவருக்குச் சொந்த வீடு உண்டு. பணமும் சேர ஆரம்பித்தது.

புளியங்குடியில் நிரந்தரமான திரைப்படக் கொட்டகை கிடையாது. அவ்வப்போது நான்கைந்து மாதங்களுக்கு ஒரு தடவை ஏதாவது டூரிங் சினிமாக் கொட்டகை திடீரென்று தோன்றும். டூரிங் சினிமா வந்துவிட்டால் ஊர்க்காரர்களுக்குத் திருநாள் பட்டபாடு. எந்தப் பழைய படமாக இருந்தாலும் புதிய ஆர்வத்துடன் சினிமாப் பார்க்கக் கிளம்பி விடுவார்கள். உலகநாதன் மனைவி காமாட்சிக்கு இந்தத் திரைப்பட மோகம் அதிகம். அந்த டூரிங் கொட்டகைகளில் காண்பிக்கப்படும் அத்தனை படங்களையும் ஒன்று விடாமல் அவள் பார்த்து விடுவாள்.

புளியங்குடியில் ஒரு மாதத்துக்கு மேலாக ஒரு டூரிங் சினிமா இயங்கி வந்தது. அன்று புரோகிராம் மாற்றம். முதல் நாளே புதிய படத்தைப் பார்க்க வேண்டும் என்ற ஆவலுடன் காமாட்சி, வீட்டை இழுத்துப் பூட்டிக் கொண்டு குழந்தைகளுடன் சினிமாவுக்குப் புறப்பட்டு விட்டாள். போகும் வழியில் கடையிலிருந்த கணவனிடம் சாவியைக் கொடுத்து விட்டுப் போனாள்.

ஓலை சினிமாக் கொட்டகைக்குத் துணையாக அதற்குப் பக்கத்திலேயே ஒரு பலகாரக் கடையும் தோன்றியிருந்தது. காமாட்சி அந்தப் பலகாரக் கடையில் தனக்கும் குழந்தைகளுக்கும் நிறையப் பொட்டலங்களை வாங்கிக்கொண்டு படம் பார்க்கப் போய் உட்கார்ந்தாள்.

உலகநாதன் ஒன்பது மணி அளவில் ஜவுளிக்கடையைப் பூட்டிக் கொண்டு வீட்டுக்குக் கிளம்பினார். அவர் நிதானமாக இரவு பத்து மணிக்கு மேல் சாப்பிடும் பழக்கம் உடையவர். வீட்டில் போய்க் காமாட்சி திரும்பும் வரை சற்றுப் படுத்திருக்கலாம் என்று வேகமாக நடந்தார்.

வீட்டுக் கூடத்தில் காமாட்சி ஏற்றி வைத்திருந்த மண்ணெண்ணெய் பவர்லைட் எரிந்து கொண்டிருந்தது. உலகநாதன் சட்டையைக் கழற்றி கோட் ஸ்டாண்டில் மாட்டப்போன போதுதான் திடுக்கிட்டு நின்றார். கூடத்து அலமாரி திறந்து கிடந்தது. அதிலிருந்த துணிமணிகள் கலைந்து கிடந்தன. அலமாரியில் இருக்கும் கைப்பெட்டி அடி வேறு மூடி வேறாகக் கிடந்தது.

உலகநாதன் பணம் வைக்கும் பெட்டி அது. அன்றாட உபயோகத்தில் இல்லாத நகை நட்டுக்களும் அதில்தான் இருக்கும். முதல் நாள் கல்யாணத்துக்கு ஜவுளி விநியோகம் செய்த வகையில் சிவகிரிப் பண்ணையாரிடமிருந்து வந்திருந்த ரூபாய் ஆயிரத்துச் சொச்சமும் அந்தப் பெட்டியில்தான் வைக்கப்பட்டிருந்தது. ஆனால் இப்போது அந்த இடம் காலி!

உலகநாதன் நெஞ்சம் பதைபதைக்க வீட்டு வாசற் கதவைப் பூட்டிக் கொண்டு போலீஸ் ஸ்டேஷனுக்கு ஓடினார். இன்ஸ்பெக்டரைக் கையோடு அழைத்துக் கொண்டு தான் வந்தார்.

இன்ஸ்பெக்டருடன் சேர்ந்து வீட்டைச் சுற்றிப் பார்த்த போதுதான் திருடன் எப்படி உள்ளே நுழைந்தான் என்பது விளங்க முடிந்தது. பக்கவாட்டில் இருந்த ஜன்னலில் இரண்டு கம்பிகள் நெம்பி வளைக்கப்பட்டிருந்தன. இடைவெளி அவ்வளவு அதிகமாக இல்லை. உள்ளே போனவன் ஒல்லியான ஆசாமியாகத்தான் இருக்க வேண்டும். ஜன்னல் கம்பிகளை நெம்பிய கடப்பாரை வெளியே கிடந்தது. அது உலகநாதனுக்குச் சொந்தமானதுதான். தோட்ட வேலைக்கு உபயோகப்படுத்தக் கூடியது.

ஆயிரத்து நூறு ரூபாய், நான்கு மோதிரங்கள், இரண்டு தங்கச் செயின்கள், களவு போயிருப்பதாக உலகநாதன் புகார் கொடுத்தார். இரவு பத்துமணிக்கு மேல் அந்த இருட்டில் என்ன செய்ய முடியும்? காலையில் வந்து விசாரணையைத் தொடரலாம் என்று இன்ஸ்பெக்டர் கிளம்பினார். அந்த வேளையில் யாரைச் சந்தேகிப்பது? யாரைப் பிடிப்பது?

மறுநாட் காலையில் இன்ஸ்பெக்டர் இரண்டு போலீஸ்காரர்களுடன் வந்தார். கைரேகை அது இது என்று சோதிக்க வசதிகள் இல்லை. வீட்டைச் சுற்றி வந்த போது, திருடன் நுழைந்ததாகக் கருதப்படும் ஜன்னலின் கீழே மண் தரையில் ஏதோ சிவப்பாகத் தென்பட்டது. ''இதென்ன செம்மண் மாதிரி இருக்கிறதே? இந்த இடத்தில் எப்படித் தனியாகச் செம்மண் வந்தது?'' என்று கேட்டுக் கொண்டே ஒரு போலீஸ்காரர் குனிந்து தொட்டுப் பார்த்தார்.

உடனே, ''சார்! இது செம்மண் இல்லே, சார்! மிளகாய்ப் பொடி மாதிரி இருக்கிறது'' என்றும் சொன்னார்.

ஜன்னலுக்கு வெளியே தரையில் சுமார் கால் படி மிளகாய்ப் பொடி எப்படி வந்தது? காமாட்சி சினிமாப் பார்க்கக் காசைச் செலவழிப்பாளே தவிர காலணாப் பெறுமான பொருளையும் வீணாக்க மனமில்லாத கஞ்ச சிரோமணி. அவள் மிளகாய்ப் பொடியைக் கொட்டவேயில்லை. மேலும் அவள் தேவைப்படும் போது கொஞ்சம் கொஞ்சமாகத்தான் தயாரிப்பாள்.

கிராமத்தில் உள்ள ஒன்றிரண்டு கேடிகளைக் கவனிக்கும்படி போலீஸ்காரர்களை அனுப்பிவிட்டு அத்தனை மிளகாய்ப் பொடியையும் ஒரு காகிதத்தில் சுற்றிக் கொண்டு புறப்பட்டார். அந்த மிளகாய்ப் பொடிக்கும் திருட்டுக்கும் ஏதோ சம்பந்தம் இருக்கிறது என்று அவர் உள் மனம் கூறியது.

ஸ்டேஷனில் போய் உட்கார்ந்ததும் அந்த மிளகாய்ப் பொடிப் பொட்டலத்தைப் பிரித்தார் இன்ஸ்பெக்டர். வீடுகளில் தயாரிக்கப்படும் நைசான மிளகாய்ப் பொடியாகத் தெரியவில்லை. ஹோட்டல்களில் ஒன்று இரண்டாக இடித்துத் தயாரிக்கப்படும் ரகமாக இருந்தது. துணிந்து அந்தப் பொடியில் ஒரு சிட்டிகையை நுனி நாக்கில் வைத்துக் கொண்டார். என் மிளகாய்ப் பொடி அது- வாசனை ஜமாய்த்தது.

ஸ்டேஷனில் டியூட்டியிலிருந்த கான்ஸ்டேபிள்கள் நான்கு பேரையும் கூப்பிட்டார். அந்த ஊரிலிருந்த நான்கு ஹோட்டல்களிலும் நுழைந்து எண்ணெயில் கலவாத மிளகாய்ப் பொடியுடன் இரண்டு இரண்டு இட்டிலி வாங்கி வரும்படி அனுப்பி வைத்தார்.

''சார்! நம்ப சினிமாக் கொட்டகையிலே டீக்கடை வைத்திருக்கிற முத்து ராத்திரியிலே இட்டிலி போட்டு விற்கிறான்'' என்று ஒரு போலீஸ்காரர் தகவல் கொடுத்தார். அந்த டீக்கடை மாலை ஐந்து மணியிலிருந்து இரவு ஒரு மணி வரை இயங்குவதால் பகல் நேரத்தில் திறந்திருக்காது!

அதையும் பார்த்துவிட வேண்டும் என்று இன்ஸ்பெக்டர் டீக்கடையை நோக்கி நடந்தார். வீட்டில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்த முத்துவை எழுப்பி அழைத்து வரச் செய்து டீக்கடையைத் திறக்கச் சொன்னார். உள்ளே இருந்த மிளகாய்ப்பொடி டப்பாவை எடுத்து ஒரு துளி வாயில் போட்டுப் பார்த்தார். ''ஆஹா! அதே என் மிளகாய்ப் பொடி! சந்தேகமே யில்லே!'' என்று ஆனந்தப்பட்டார்.

முத்துக் கடை மிளகாய்ப் பொடி உலகநாதன் வீட்டு ஜன்னலருகே எப்படி வந்தது? ஆராய்ச்சி தொடங்கியது!

''நம்ப கடைப் பையனைத்தான் ஏறாரை மணி அளவிலே வீட்டுக்கு அனுப்பிச்சு மிளகாய்ப் பொடி கொண்டு வரச் சொன்னேன். திடீர்னு ஆயிப் போச்சு! போய்க் கொண்டாந்தான். நான் ஸ்டாக்கெல்லாம் வீட்டிலேயேதான் வச்சிருக்கிறது'' என்றான் டீக்கடை முத்து.

''அந்தப் பையனைக் கூப்பிடு'' என்று உத்தரவிட்டார் இன்ஸ்பெக்டர்.

''அவன் ராத்திரிக்கே அவசரமா ஊருக்குப் போகணும்னு சொல்லிட்டுப் போனான். யாருக்கோ உடம்பு சௌகரியமில்லேயாம்!''

பையன் எந்த ஊருக்குப் போனான் என்று தெரியாது!

வீட்டிலிருந்து ஒரு பாத்திரம் நிறைய மிளகாய்ப் பொடி கொடுத்தனுப்பியிருக்கிறார்கள். கடைக்குப் பாதி பாத்திர அளவு தான் வந்து சேர்ந்திருந்தது. அவ்வளவு தான் வீட்டில் இருந்தது என்று சொன்னானாம்.

பதினாறு வயதுப் பையன். ஒல்லியான சரீரம். முன் பல் ஒன்று கிடையாது.

இப்போது இன்ஸ்பெக்டருக்கு எல்லாம் புரிந்து போயிற்று. சுற்று வட்டாரத்தில் பையனைத் தேடிக் கண்டுபிடிக்க ஏற்பாடு செய்தார்.

உலகநாதன் போன ரூபாய் வருமா என்று ஏங்க ஆரம்பித்தார்.

பாகவதர் பாட்டுன்னு அது பாட்டுத் தான். மனசு அப்படியே இறங்குதே! மூணு

நாட்களாகத் தொடர்ந்து ஆறு ஆட்டம் செவகலி பார்த்தாச்சு. இன்னிக்கு ஒரு நாள் தான் அந்தப் படம் ஓடுமாம். டூரிங் முத லாளி நல்லவரு! என் ஆசையைக் கேட்டுட்டு அவரு தங்கியிருக்கிற இடத்திலேயே எனக்கு அறையும் கொடுத்தாரு. ஒருவேளை என் விரல்களிலே பளிச் பளிச்சென்று மின்னுகிற மோதிரங்களைப் பார்த்து நான் ஒரு பெரிய மைனர்னு நினைச்சுட்டார் போலே...! உலக நாதன் வீட்டு மோதிரம்னு கண்டாரா? பணத்தை மாத்திரம் வெளியே காட்டாமல் மடியிலே கட்டிக்கிட்டேன். ஒரு பயலுக்கும் தெரியாது. பதினஞ்சு ரூபாயை மாத்திரம் வெளியே வச்சுக்கிட்டேன். எனக்கு அவ் வளவுதான் தேவை. ஆனால் அந்த உலக நாதன் வீட்டு அலமாரியிலே நிறைய இருந்த தைப் பார்த்தவுடனே என்னவோ அற்ப ஆசை! மனம் பேதலிச்சுப் போய் எடுத்துட்

## இப்படிச் சொன்னால் என்ன?



❊ பிறருடைய கதைகளின் கருத்தை எடுத்து, தன்னுடையதுபோல் ஆளும் 'பிளாக் மார்க் கெட்' எழுத்தாளர்களை 'எடுத்தாளர்' என்று சொன்னால் என்ன?

★



❊ நடனம் என்ற பெயரில் காலையும் கையை யும் தோளையும் இடுப்பையும் அங்கங்களையும் குலுக்கிக் குலுக்கி ஆட்டும் நாட்டியத்தை 'ஆட்டியம்' என்றால் என்ன?

★



❊ தப்பும் தவறுமாக 'டைப்' செய்யும் 'டைப் பிஸ்ட்'டை, 'தப்பிஸ்ட்' என்று சொல்லலாமே?

★



❊ வெறும் கவர்ச்சியை மட்டும் காட்டிக் கொண்டு நடிப்புத் திறமை என்பது பூஜ்யமாக உள்ள கதாநாயகியை 'ஹீரோயின்' என்பதற்குப் பதிலாக 'ஜீரோயின்' என்று சொன்னால் என்ன?

★



❊ ஒன்றிரண்டு படங்களில் தலை காட்டியதுமே, பலூன்போல் பூரித்துத் தடித்து விடும் முன்னணி நடிகையை 'முன்னணி தடிகை' என்று சொன்னால் என்ன?

— எம். ஏ.

# அவேதனில் அப்படி என்ன இருக்கிறது? அற்புத 'எபேப்'



தலைவலி, நோவுகள், ஜலதோஷம், ஃப்ளூ முதலியவற்றிலிருந்து உங்களுக்கு, மேலும் துரிதமான, தீமையற்ற, நிச்சயமான நிவாரணம் அளிப்பதற்கு தான்!

அற்புத 'எபேப்' அடங்கிய
ஸ்க்விப்*

# அவேதன்

**சில நிமிடங்களுக்குள் செயல் புரிந்து, மணிக் கணக்காகப் பயனளிக்கிறது!**

சாப்பிடும் அளவு: 1–2 டேப்லெட்டுகள்

பின் வரும் உபாதைகளுக்கு அவேதன் சாப்பிடுங்கள்: தலைவலி, பல்வலி, தசைச்சார்களின் வலி, ஜலதோஷம், ஃப்ளூ, பெண்களின் அசௌகரியமான காலங்கள், மற்றும் இதர வலிகள்

SQUIBB*

ஸாராபாய் கெமிகல்ஸ்

® இ-ஆர். ஸ்க்விப் அண்ட் ஸன்ஸ் இன்கார்பொரேடெட்டின் ரிஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்காகும். காம்சந்த் பிரேம்சந்த் பிரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

Shilpi SC 40A/66 TAM

# வாய் வலிக்குமா?

விடைகள் : 1. ரமேஷ் சந்திர தத்; 2. ''பார்ப் மாக்ஸ்''; 3. திருச்சி; 4. க்ளாட்ஸ்டன்; 5. டோகோ (1905-ல்); 6. எல்ஜின் பிரபு (1862-63); 7. முறையே ஜான் ஆடம்ஸ், ஜான் குவின்சி ஆடம்ஸ்; 8. 160 அடி; 9. 23.

டேன். அன்னிக்கு அந்த அம்மா சினிமாவுக்கு வந்திருப்பதைக் கவனிச்சுட்டேன். முத்து முதலாளி வீட்டுக்குப் போறப்போ உலகநாதன் கடையிலே உட்கார்ந்திருந்ததையும் பார்த்தேன். ஆனால் அப்போ இந்த மாதிரி ஒரு காரியம் பண்ணப் போறோம்னு நினைக்கலே! திரும்பறப்போ, அந்தச் 'சொப்பன வாழ்வு' ரிக்கார்டு கேட்டேனு.... அவ்வளவுதான். பக்கத்திலேதான் உலகநாதன் வீடு பூட்டியிருந்தது. வசதியா தோட்டத்திலே கடப்பாரையும் கிடந்தது. மிளகாய்ப் பொடி பாத்திரத்தை ஜன்னல் கிட்டே வைச்சுட்டு உள்ளே போயிட்டேன். திரும்பி வெளியே வர்றபோது நினைவில்லாம மிளகாய்ப் பொடி பாத்திரத்திலே காலை வைச்சதிலே பாதி கொட்டிப் போச்சு! அதை யாரு இருட்டிலே அள்ளிக்கிட்டிருப்பாங்க? ஆனால் அன்னிக்குத்தான் முத்து முதலாளிகிட்டே முதல் தடவையா ஒரு பொய் சொன்னேன், பாதிதான் வீட்டிலே கொடுத்தாங்கன்னு! இரண்டாவது பொய்யும் சட்டுன்னு தோணிருச்சு. மாமாவுக்கு உடம்பு சரியில்லேன்னு ஒரு பொய்யைச் சொல்லிட்டு ராவோடு ராவா சங்கரன் கோயிலுக்கு நடந்தேன். காலையிலே திருநெல்வேலிக்குப் பஸ் பிடிச்சு அங்கேயிருந்து களக்காட்டுக்கு வந்தாச்சு! களக்காடு டூரிங் கொட்டகை வாசலிலே இருந்த 'வெகுளி'ப் பட விளம்பரத்தைப் பார்த்தப்புறம்தான் எனக்கு நிம்மதியாச்சு!

கொஞ்சம் கண்ணை அசந்துட்டேன் போலே இருக்கு. முதுகிலே யாரோ ஓங்கித் தட்டின மாதிரி இருந்தது. முழிச்சுப் பார்த்தா முன்னாலே போலீஸ் இன்ஸ்பெக்டர் ஒருத்தர் நின்னாரு. கண்ணைக் கசக்கிக்கிட்டேன். நம்பளூரு. புளியங்குடி இன்ஸ்பெக்டர்தான்! எத்தனை தடவை நான் அவருக்குக் கொட்டகையிலே டீ கொடுத்திருக்கேன்?.... அவருக்குப் பக்கத்திலே எனக்கு அறை கொடுத்த சினிமாக் கொட்டகைக்காரர்கூட இருந்தாரு!

''இந்தப் பையன்தான்! மூணு நாளா இங்கேதான் இருக்கான். புளியங்குடியிலே அப்படியிருக்கும் இப்படியிருக்கும்னு வேறே ஏதாவது சொல்லிக்கிட்டு இருப்பான். எனக்கு ஒரு சந்தேகம். அதனாலேதான் உங்களுக்குத் தந்தி அடிச்சேன்'' என்றார் கொட்டகைக்காரர்.

''ரொம்ப நன்றி. நாங்க இந்தப் பையனை ஒரு திருட்டுக் கேஸுக்காகத் தேடிக்கிட்டுத்தான் இருக்கிறோம். நீங்க இப்படி எதிர்பாராமல் தகவல் கொடுத்து உதவினீங்க'' என்று அவரிடம் இதமாகப் பதில் சொன்ன இன்ஸ்பெக்டர், குரலைக் கடுமையாக்கிக் கொண்டு, ''பொடிப் பயலே! எங்கேடா, ரூபாய் நகையெல்லாம்?'' என்று அதட்டிக் கேட்டார்.

வெகு நிதானமாக மடியிலிருந்த ரூபாய்களையும் தங்கச் செயின்களையும் எடுத்து இன்ஸ்பெக்டர் முன்னால் வைத்தேன். கையிலிருந்த நான்கு மோதிரங்களையும் கழற்றி வைத்தேன். யாரும் எதிர்பாராத வகையில் சினிமாக் கொட்டகை முதலாளி காலடியில் விழுந்து அவர் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டேன்.

''ஐயா.... நீங்க எனக்கு ஒரு பெரிய உதவியை இந்தத் தந்தி அடிச்சதன் மூலம் செஞ்சிருக்கீங்க!... என்னை மேலும் பெரிய திருடனாக மாற விடாமல் காப்பாத்திட்டீங்க. உணர்ச்சி வசப்பட்டு ஆசைக்கு அடிமையாகிப் பதினஞ்சு ரூபாய் திருடினாப் போதும் என்ற நினைப்பிலேதான் இந்தத் தவறைச் செஞ்சுப்புட்டேன். அது என் மனசை உறுத்திக்கிட்டே இருக்குது. நல்ல வேளையா என்னைப் போலீசுக்குப் பிடிச்சுக் குடுத்து அந்த உறுத்தலுக்கு வைத்தியம் பண்ணிப்பிட்டீங்க!.... நான் எடுத்த ரூபாயிலே பதிமூணு ரூபாதான் செலவாயிருக்கு. எனக்காக அந்த ரூபாயையும் போலீசுகிட்டே கொடுத்திடுங்க. சந்தோஷத்தோடே ஜெயிலுக்குப் போறேன்....''— எனக்கு அழுகையே வந்துவிட்டது.

சினிமா முதலாளி என்ன நினைத்துக் கொண்டாரோ என்னவோ? என்னை அப்படியே தூக்கி நிறுத்தினார். தன் சட்டைப் பையிலிருந்து பதின்மூன்று ரூபாய்களை எடுத்து மற்ற ரூபாய்களுடன் வைத்தார். இன்ஸ்பெக்டர் கண்களில்கூட ஈரம் படர்ந்தது.

திருடின பணத்திலே ஒரு பைசா குறையலே என்கிற திருப்தி எனக்கு. இந்த அனுபவத்திலே என் சொப்பன வாழ்க்கை சம் கலைந்தது. கொஞ்ச நாட்கள் இளம் குற்றவாளிகளின் சீர்திருத்தப் பள்ளிக்கூடத்தில் இருந்துட்டு வெளியே வந்தேன். ஒரு தொழிற்சாலையிலே எனக்கு வேலை கிடைச்சுது. சக தொழிலாளிங்க அடிக்கடி சினிமாப் படங்கள் பார்த்துட்டு வந்து அதைப் பத்திச் சுவாரசியமில்லாமப் பேசுவாங்க. நான் மனசை ரொம்பச் சிரமப்பட்டுக் கட்டுப்படுத்திக்குவேன். சினிமாப் பார்க்கணும்கிற வெறியிலேதானே திருடன் என்கிற பட்டத்தைப் பெற வேண்டியதாப் போச்சு. நான் விரும்புவது என் மிளகாய்ப் பொடி. என்னைக் காட்டிக் கொடுத்த மிளகாய்ப் பொடி என்னை மீட்கவும் உதவியதல்லவா?

திருடி அகப்பட்டுக் கொள்வதில் இவ்வளவு சந்தோஷமான்னு நினைக்கலாம்! நான் சந்தோஷப்படறேன். அந்தப் புத்தியை அன்றைக்குக் களக்காட்டிலே கழற்றி விலக்கி விட்டேன்.

எப்பவாவது நான் திரைப்படம் பார்க்கப் போறேன். ஆனால் அதையே நினைத்துச் சொப்பன வாழ்வு வாழ்வதில்லை.



— சௌந்தரம் —

ஹோல்டாலைச் சுருட்டி, இடதுமுட்டியை வைத்து அழுத்தி, தோல் வாரைப் பிடித்து இழுத்துக் கட்டி, மேல் தூசி போக உள்ளங் கையால் பலமாகத் தட்டி, பிடியைப் பிடித்துத் தூக்கிக் கனத்தைப் பார்த்து, 'தொப்'பென்று தரையில் போட்டான் நரேஷ். மனத்தில் ஒருவிதமான திருப்தி. மற்றப் பெட்டி முதலிய பிரயாணச் சாமான்கள் கட்டப்பட்டு விட்டன. உற்சாகம் கொப்புளித்தது. இவற்றையெல்லாம் நின்று கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள் தாயார் கமலம். பிள்ளைக்கு உற்சாகம் என்றால் தாயின் மனம் இரு கூறுகப் பிரிந்து நின்றது. ஒருபுறம் திருப்தி, மற்றொரு புறம் கவலை.

வட இந்தியத் தொழிற்சாலை ஒன்றில் வேலைக்காக மனுப் போட்டதில் யார் தயவுமின்றி அவனுக்கு வேலை கிடைத்து விட்டது. அம்மாதிரி நேரங்களில்தான் கண்ணுக்குப் புலப்படாத சக்தியொன்று நல்ல மனமுடையோர்க்குத் துணை நின்று வழிகாட்டுகிறது என்னும் நம்பிக்கை ஏற்படுகிறது. இம்மாதிரி சுலபமாக வேலை கிடைத்ததில் தாயாருக்குத் திருப்தி. இருபத்திரண்டு வருடங்களாகத் தன்னந் தனியாக இருந்த காலத்தில் துணை நின்ற பிள்ளை இப்போது பிரிந்து வட இந்தியா போகிறான் என்ற விஷயத்தில் அவளுக்குக் கவலை.

பிள்ளையை ஏதோ கேட்க வாயெடுத்தாள் தாயார். இதற்குள் அவன், ''அம்மா! பிரசாத்திடம் இன்னும் சொல்லிக் கொள்ளவில்லை. கோபித்துக் கொள்ளுவான். ஒரு நொடியில் அவன் வீட்டுக்குப் போய் வந்து விடுகிறேன்'' என்று செருப்பை மாட்டிக் கொண்டு கிளம்பி விட்டான். தாயார் கேட்க நினைத்ததைக் கேட்கவில்லை.

வாசலைத் தாண்டி மகன் போனதும், ஹாலில் தனியாக நின்றுகொண்டிருந்தாள். மனம் குடைந்தெடுத்தது. பிள்ளை சீர் செய்துவிட்டுப் போன பெட்டி படுக்கையைத் தடவிப் பார்த்தாள். நெஞ்சை ஏதோ ஒரு பயம் அழுத்தியது.

''நாளை இந்நேரத்துக்கு நரேஷ் ரயிலேறிக் கிளம்பி விடுவான்'' என்று கமலம் தனக்குள் முணு முணுத்துக் கொண்டிருந்தாள். அவள் மனம் நிகழ்ந்து கொண்டிருக்கும் சம்பவங்களில் லயிக்கவில்லை. வாழ்க்கையில் இருபது வருடங்கள் பின்னும், இரண்டு மூன்று வருடங்கள் முன்னுமாக நடந்த நிகழ்ச்சிகளையும், நடக்க விருப்பவைகளையும் சிந்தித்துச் சுழன்று கொண்டிருந்தது. தனியாய் உட்கார்ந்து, வெறிச்சோடிய வாழ்க்கையின் இன்ப துன்பங்களை உள்ளம் நினைக்க, செய்தித்தாள் அச்சடிப்பதற்காக வரும் பேப்பர் உருளைகளிலிருந்து காகிதம் நீள்வது போல் எண்ணங்கள் மைல் கணக்கில் நீண்டு கொண்டே சென்றன.

''நரேஷ் என்ன செய்யப் போகிறானே? அவனும்....'' மேலே நினைக்கக் கமலத்தின் மனம் கூசிற்று. அதற்குப் பதில் முகத்தில் ஒருவித பீதி படர்ந்தது. மறுபடியும் என்னென்ன இன்னல்கள் காத்திருக்கின்றனவோ என்ற திகில்.

இருபத்திரண்டு வருடங்களுக்கு முன் நரேஷை வயிற்றில் தாங்கிச் சோபையுடன் விளங்கினாள் கமலம். வாழ்க்கையில் பெரும் சூறாவளி வீசவிருக்கிறது என்ற சூசகம் தெரிந்து கொள்ள முடியாத அமைதி. அந்த இன்பம் என்றென்றும் நிலைத்துத் தாய்மையுடன் சேர்ந்து பரிமளிக்கப் போகிறது என்ற உற்சாகம்.

''கமலம்! உன்னைப் பிரிந்து எப்படி இருக்கப் போகிறேன் என்றுதான் தெரியவில்லை'' என்று கமலத்தின் கணவன் ரகுநாத் சொல்லிக் கொண்டிருந்தான். அதன் ஆழமோ, உண்மையோ அன்று புரியவில்லை; இன்றோ அனுபவித்து அனுபவித்து உணர்ச்சி மரத்துப் போய்விட்டது.

மணமான புதிதில் கணவனை அவளால் புரிந்து கொள்ள முடியவில்லை. இயந்திர ரீதியில் வாழ்க்கை நடந்து கொண்டு வந்தது. அவளை வாய்விட்டு அன்புடன் அழைத்ததுமில்லை; முகம் களித்து வெறுத்ததுமில்லை; மணமாகிச் சிறிது காலம்தான் ஆகியிருக்கும். எனினும் கணவன் — மனைவி என்னும் புது உறவுக்குக் கவர்ச்சி இருப்பதாகவே அவன் நடத்தை தெரிவிக்கவில்லை. பகல் முடிந்தால் இரவு, இரவு முடிந்தால் பகல் என்ற நியதிப்படி நடந்து கொண்டு போவது போல் அவன் வாழ்க்கையை ஓட்டினான்.

ஏதேதோ சம்சயங்கள் கமலத்துக்குத் தோன்றும். தனக்குள்ளேயே சமாதானங்கள் எழும்பி அந்தச் சந்தேகங்களை நிவர்த்தி செய்து விடும்.

'மனம் தளர்ந்த சமயத்தில் என்னைக் கல்யாணம் செய்து கொண்டு இப்பொழுது வருத்தத்தில் காலத்தைத் தள்ளிக் கொண்டிருக்கிறாரோ?' என்று கமலம் சில சமயங்களில் யோசித்ததுண்டு. அதையும்தான் தெரிந்து கொண்டு விடலாமே என்று ஒரு சின்னப் பரீட்சை செய்து பார்த்தாள். மாதக் கடைசி. ''எழுபது ரூபாயில் நல்ல புடவை வந்திருப்பதாக என் சிநேகிதி சொன்

றன். பணம் கொடுங்களேன்'' என்று கேட்டாள். அவளிடம் புடவை இல்லை என் றில்லை. வேண்டாத மனைவியின் பேரில் கணவனுக்கு முதலில் வெறுப்பு ஏற்படச் செய்வது ஆடை அலங்காரம்தான். பிடித்த மனைவிக்கு அன்பளிப்பாகக் கொடுப்பதும் அதே வஸ்துக்களைத்தான். ரகுநாத் எரிந்து விழுந்தால் அவள் பேரில் வெறுப்பு. ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம். அதிலும் மாதக் கடைசியில் அவனிடம் கேட்டதற்குக் காரணமே அதுதான்.

''இருபத்தைந்து தேதியாகிறதே. மாதம் பிறந்தால் கமிஷன் பணம் வரும், அதில் வேண்டியதை எடுத்துக் கொள்'' என்று சாந்தமாய்ப் பதில் சொன்னான். புடவை யும் வாங்கிக் கட்டிக் கொண்டாள். அவள் மிகவும் அழகாய்த்தான் இருந்தாள். ரகு நாத் அவள் அழகையும், அவன் வாங்கித் தந்த புடவையையும் மெச்சுவான் என்று கமலம் எதிர்பார்த்தாள். கணவன் மனைவி யிடம் காட்டும் அன்புக்கெல்லாம் 'நற்சாட் சிப் பத்திரம் ஒரு வார்த்தை புகழ்ச்சி. அங்கு தான் ரகுநாத்தின் போக்கு அவளுக்குப் புரியவில்லை. அவன் வாயைத் திறக்கவில்லை. ''அன்று எழுபது ரூபாய் கேட்டேனே, இந்தப் புடவைக்காகத்தான்'' என்று தலைப்பைப் பிரித்துக் காட்டினாள். இயல் பாக வராத அன்பைத் தூண்டில் போட்டா வது மனத்திலிருந்து குத்தி இழுப்பது என்று கங்கணம் கட்டிக்கொண்டிருந்தாள் போலும்!

''சரிதான், நன்றாக இருக்கிறது'' என்று உதட்டு வாக்கில் சொல்லி விட்டுப் பேசாமல் இருந்து விட்டான். அவனுடன் வாழ்க்கை தொடங்கிய புதிதில் இது ஓர் ஏடு. இதைப் போல் அநேகம். கமலம் மனைவியாய் வாய்த்ததில் பெரிய பொக்கிஷம் கிடைத்து விட்டமாதிரி அவன் நினைக்கவில்லை. குணத் தின் குன்றாய்த் தெரிந்து கொள்ள முடியா விட்டாலும், அவள் அழகு, கவர்ச்சி கூடவா கண்களுக்குப் படாமல் போய்விடும்! இந்தக் கூற்றுத்தான் கமலத்துக்குப் புரியவில்லை.

''எல்லோரும் உங்களைப் போலத்தான் விட் டேத்தியாக இருக்கிறார்களா? உங்கள் மனத் தில் ஏதாவது இருந்தால் என்னிடம் கூடச் சொல்லக் கூடாதா?'' என்று ஒரு நாள் கேட்டே விட்டாள்.

ரகுநாத் அலட்சியமாகச் சிரித்தான். ''மற்றவர்களைப் போல இல்லையா? எல் லோருமே ஒரே வார்ப்பில் இருந்தால் வாழ்க்கை இனிக்காதே! நான் இப்படியிருப் பது உனக்குக் குறைவாய் இருக்கிறதா? நாளையிலிருந்து எல்லோரையும் போலவே இருந்து விடுகிறேன்'' என்று சற்றுக் கிண்ட லாகவே சொன்னான்.

''எனக்காக நீங்கள் உங்கள் பழக்கங்களை மாற்றிக் கொள்ள வேண்டாம்'' என்றாள் ரோசத்துடன். ''பழக்கத்தை மாற்றிக் கொள்வேனா? உன்னிடம் நடிப்பேன். அவ் வளவுதான்.'' வாய்க்குக் களுவாய்ச் சொல்லி விட்டான். பெண் மனம் இம்மாதிரி அசட் டைப் பேச்சுக்களால் எவ்வளவு புண்படும் என்பதை யோசித்திருப்பானா?

நரேஷ் வயிற்றில் வளர்ந்து கொண்டிருந் தான். தாயகம் போகக் கமலம் ஆயத்த மானாள். கணவனுடன் தனிக் குடித்தனம் செய்தது ஐந்தாறு மாதங்கள்தான்.

''அடுத்த வாரம் அப்பா வந்து அழைத் துப் போகிறேன் என்று எழுதியிருக்கிறார்'' என்று கடிதத்தை ரகுநாத்திடம் கொடுத் தாள். ''சரி'' என்று அதை வாங்கி மேசை யின் மேல் வைத்தான் ரகுநாத்.

''படித்துத்தான் பாருங்களேன்'' என்றாள் சற்றுக் கோபத்துடன்.

''நீதான் சொல்லி விட்டாயே, நான் ஒரு முறை படிக்க வேண்டுமா?'' என்று அவள் திருப்திக்காகக் கடிதத்தைக் கண்ணோட்டம் விட்டு மறுபடியும் வைத்து விட்டான்.

தாம்பத்திய வாழ்க்கையில் மனம் சுக்கு நூறாய் இடிந்து விழும்படியான சம்பவங்கள் கால ஓட்டத்தில் தேய்ந்து மறைந்து விடுகின் றன. சில்லறை விஷயங்களோ—ஒரு கடிதம், ஓர் அசட்டையான வார்த்தை, சினத்திலோ வெறுப்பிலோ மனைவியின் கன்னத்தில் ஓர் அறை; இவை போன்ற வாழ்க்கைத் துணுக்குகள் — புழுப் போல் மனத்தில் வாழ்நாட்கள் முழுவதும் குடைந்து கொண் டிருக்கின்றன.

கமலம் தாய் வீடு வந்து சேர்ந்தாள். நான்கு மாதங்களாகி விட்டன. இன்னும் ஓரிரு நாட்களில் குழந்தை பிறந்து விடும் என்று டாக்டர் அபிப்பிராயம் சொன்னார். கமலத்தின் உடம்பைப் பற்றி ரகுநாத்திடம் நேராகச் சொல்லிவிட்டுப் போகலாம் என்று மாமனார், சென்னை வந்தார். கணவனின் குணமறிந்த கமலம் அதுவரையிலும் ரகுநாத் துக்குக் கடிதம் போடவேயில்லை.



கமலத்தின் தகப்பனார் ரகுநாத்தின் வீட்டை அடைந்த போது வீடு பூட்டிக் கிடந்தது. அடுத்த வீட்டிலிருந்தவரைச் செய்தி விசாரித்தார். ''ரகுநாத் வீட்டைக் காலி செய்து ஒரு மாதமாகப் போகிறதே'' என்றார் அண்டை வீட்டுக்காரர்.

''எங்கே குடிபோயிருக்கிறார் என்று தெரியுமா?'' என்றார் கமலத்தின் தகப்பனார்.

''எங்களிடம் சொல்லவில்லை.''

இதைப் பற்றிய தகவல் தெரிவிக்காமலே ரகுநாத் இருந்தது கமலத்தின் அப்பாவுக்கு ஆச்சரியமாய் இருந்தது. ரகுநாத் கமிஷன் வியாபாரம் செய்து கொண்டிருந்த பந்தர் தெரு விலாசத்துக்குப் போனார். ''ரகுநாத் ஏற்றுமதி, இறக்குமதி கமிஷன் ஏஜண்டு'' என்று தொங்கிக் கொண்டிருந்த பலகை இல்லை. இது இரண்டாம் அதிர்ச்சி. பக்கத்தில் விசாரித்தார்.

''ரகுநாத் ஸாரா? இரண்டு மாதங்களுக்கு முன்பே வியாபாரத்தை மூடிவிட்டாரே!'' என்று செய்தி கிடைத்தது.

வீட்டுச்சாமான்களை என்னசெய்தான்? எங்கே போட்டிருக்கிறான்? விற்றுவிட்டானா? வியாபாரத்தில் பெரும் நஷ்டம் ஏற்பட்டு எல்லாம் ஏலம் போய் விட்டதா? தலைமறைவாய் எங்கே போனான்? ஏன் யாருக்கும் ஒரு தகவலும் தெரிவிக்கவில்லை? பிரச்னை மேல் பிரச்னை எழும்பிக் கொண்டே போயிற்றே தவிர விடை தெரியவில்லை. மாமனார் மனம் குழம்பி ஸ்தம்பித்து நின்றுவிட்டார்.

''ஏன் ஸார், கடை மூடிய பின் ஒரு முறை கூட அவரை நீங்கள் பார்க்க வில்லையா?'' என்று ஏக்கத்துடன் கேட்டார்.

''மூடின தினம் பார்த்ததுதான். அப்புறம் அவர் கண்ணில் படவில்லை.''

அடுத்தது? அவருக்குத் திடீரென்று ஒரு யோசனை தோன்றிற்று. ரகுநாத் கணக்கு வைத்திருந்த பாங்கியில் போய்க் கேட்டால் விலாசம் தெரிந்து கொள்ளலாமே என்று பாங்கை நோக்கிப் போனார். மானேஜர் அறைக்குப் போய்த் தம் உறவையும் சொல்லிக் கொண்டு விஷயத்தைக் கேட்டார். மனேஜர் ஒரு சிப்பந்தியை அழைத்துத் தகவலைக் கொடுக்கும்படி சொன்னார். பெரியவர் பின் தொடரச் சிப்பந்தி பெரிய கணக்குப் புத்தகத்தை எடுத்து வந்து புரட்டிப் பார்த்தான்.

''இரண்டு மாதங்களுக்கு முன் கணக்கை மூடிவிட்டாரே. ஜூன் மாதம் பத்தாம் தேதிக்குப் பின் கணக்கு இல்லை. தம்பேரில் இருந்த எட்டாயிரத்து ஐந்நூற்று எழுபத்தேழு ரூபாய் எண்பது பைசாவைப் பெற்றுக்கொண்டு பாங்கியில் கணக்கை மூடி விட்டார்'' என்று எல்லா விவரங்களையும் சொல்லிப் புத்தகத்தைப் 'படார்' என்று மூடினான்.

கடைசியாக மாமனார் வந்தமுடிவு, தம் மாப்பிள்ளை வியாபாரத்தில் ஏதோ தில்லுமல்லு செய்து கம்பி எண்ணிக் கொண்டிருக்க வேண்டும். இல்லை, மனைவியைத் தாயார் வீட்டுக்கு அனுப்பி விட்டுத் தற்கொலையைத் தஞ்சம் அடைந்திருக்க வேண்டும். இந்த இரண்டு முடிவுகளைத் தவிர வேறு நினைக்க நியாயமில்லை. இந்த ஹேஷ்யத்தின் பேரில் ஒன்றும் செய்ய முடியாமல் கமலத்தைக் கலந்து யோசிக்க ஊர் திரும்பினார்.

அவர் வீடு வந்தபொழுது கமலம் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டிருந்தாள். முன்னாள் இரவு வலிகண்டு அங்கு கொண்டு விட்டிருந்தார்கள். தகப்பனார் பெண்ணைப் பார்க்க ஆஸ்பத்திரியை மிதிக்கவும் வார்டிலிருந்து ''குவா, குவா'' என்று நரேஷ் தாத்தாவைக் கூவி அழைக்கவும் சரியாக இருந்தது.

''தகப்பனைத் தலைமறைவாய் ஓட்டிவிட்ட பிள்ளை'' என்று நினைத்துக் கொண்டே குழந்தையைப் பார்த்தார். ரகுநாத்தைப் பற்றி ஒருவரிடமும் ஒன்றும் சொல்லவில்லை.

இரண்டு மாதங்கள் கழித்துக் கொஞ்சம்கொஞ்சமாகச் செய்தியை வெளியிட்டார்.



# டி. வி. எஸ். பஸ் பாடிகளின் புதிய கவர்ச்சியான முன் தோற்றம்

டி.வி.எஸ். தேவைக்கு உகந்த பஸ் பாடிகளை எந்தவித சேஸிஸ் மீதும்—அசோக் லேலண்டு கோமெட், பெட்போர்டு, டாட்ஜ், பார்கோ டாடா மெர்சிடீஸ் பென்ஸ், வில்லிஸ் ஜீப், ஸ்டாண்டர்டு 20—தயாரிக்கிறார்கள். அவை மிகவும் உறுதியானவை—ஆனால் லேசானவை; எடை குறைவுள்ளவை. அதனால் எண்ணெய் செலவும், டயர் தேய்வும் குறைவு; சிக்கனமானது; கரடு முரடான சாலைகளைச் சமாளிக்கும். பிரயாணிகளுக்கு மிக்க வசதி.

ஒவ்வொரு நாளும் சராசரி மூன்று பஸ் பாடிகள் கட்டுகிறோம். தேவைக்கு உகந்த கம்போசிட் முழு ஸ்டீல் பாடி, சிறிய பஸ், உல்லாஸ பஸ், எக்ஸ்பிரஸ் வான், டெலிவரி வான், பிக்-அப் வான், அம்புலன்ஸ், மூடிய அல்லது திறந்த லாரி, ஸ்டீல் டிரைவர் காபின், டிப்பர் பாடி முதலியன தயாரிக்கிறோம்.




மற்ற விபரங்களுக்கு:

**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ்**
**பிரைவேட் லிமிடெட்**, மதுரை
(டி.வி.எஸ். ஸ்தாபனம்)

''கமலம், நேற்றுச் சென்னையிலிருந்து என் சிநேகிதன் வந்திருந்தான். ரகுநாத் வியாபாரத்தை மூடி விட்டானாமே?'' என்று எழுப்பினார்.

''மூடிவிட்டாரா, ஏன்?'' என்று கேட்டாள் கமலம்.

''தொங்கிக் கொண்டிருந்த வியாபாரப் பலகையைக் காணோமாம். விசாரித்ததில் வியாபாரத்தை விட்டு விட்டதாகச் சொன்னார்களாம்'' என்று தாம் எடுத்துக்கொண்ட பிரயத்தனங்களை நண்பர் பேரில் தள்ளி ஒவ்வொரு நாள் ஒவ்வொரு துணுக்காய்ச் சொன்னார்.

''ஐயோ, அப்பா! நான் என்ன செய்வேன்? நட்டாற்றில் விட்டு விட்டாரே!'' என்று கதறினாள் கமலம்.

''கமலம்! தைரியத்தைக் கைவிடாதே. மேலும் விசாரித்துப் பார்ப்போம். வியாபார நிமித்தம் வெளியூர் போயிருக்கலாம். இல்லை, வேறு பிஸினஸ் ஆரம்பிக்க விவரம் சேகரிப்பதற்காக எங்காவது போயிருக்கலாம். எதற்கும் பொறுத்துப் பார்ப்போம். நான் எங்கே போய்விட்டேன்? உனக்கு வரும் கஷ்டங்களை நான் ஏற்றுக் கொள்ள மாட்டேனா?'' என்று ஆறுதல் கூறினாரே தவிர உள்ளுக்குள் மாப்பிள்ளையைப்பற்றித் தெரிந்து கொள்ள ஒரு வழியுமில்லை என்று திண்ணமாக அவருக்குத் தெரிந்துவிட்டது - அவனாக வந்து அவர்கள் எதிரில் தோன்றினால் தவிர.

மாதங்கள் உருண்டோடின. நரேஷுக்கு ஆறு மாதங்கள் பூர்த்தியாகி விட்டன. இனி மேல் நடக்க வேண்டியது? கமலமும் குழந்தையும் எங்கே போவார்கள்? ஊரார் கேள்விகளுக்கு என்ன பதில் சொல்வது?

''என்னையும் இவனையும் அழைத்துக் கொண்டு போய்ச் சென்னைக் கடலிலே தள்ளிவிட்டு ஊர் திரும்புங்கள்'' என்று விரக்தியோடு சொன்னாள் கமலா.

''நீ இங்கேயே இருந்துவிடு. அவன் வருகிறபோது வரட்டும்'' என்றார் அப்பா.

''அவர் இருந்தால்தானே அப்பா, வருவதற்கு?'' என்று கூறி அவள் அழுதுவிட்டாள்.

''நான் சொல்வதைக் கேள். நரேனை என்னிடம் விட்டுவிடு. தாத்தா வீட்டில் வளரட்டும். நீ கல்லூரியில் சேர்ந்துவிடு. ஹாஸ்டலில் தங்கி விடலாம். உன் அதிர்ஷ்டம் ரகுநாத் விரைவிலேயே வந்து விட்டால் படிப்பை விட்டு விட்டு அவனுடன் போய்விடலாம். கெட்டதை நினைத்து நல்லதை நினை என்று சொல்லி யிருக்கிறது. அவன் வரவேயில்லையானால் உன் காலத்தைத் தள்ளப் படிப்பு உபயோகமாயிருக்கும்'' என்று அவள் வாழ்க்கையைச் சீர் செய்யக் கூடிய உபாயத்தைச் சொன்னார். ஒரு விஷயம் எல்லார் உள்ளத்திலும் உறைந்து விட்டிருந்தது. கமலத்தின் கணவன் போனது, போனதுதான். உதட்டு வாக்கில் ''வந்த போது வரட்டும்'' என்று சொல்லிக் கொண்டிருந்தனர். அவன் உயிருடன் இருக்கிறானா, மோசம் செய்து விட்டுப் போய்விட்டானா? சட்டத்துக்கு விரோதமாய் வியாபாரம் செய்து ஜெயிலில் அடைக்கப்பட்டிருக்கிறானா? அது ரகுநாத்துக்குத்தான் தெரியும்.

தகப்பனார் இட்டப்படி ஒரு வருஷம் ஹாஸ்டலில் சேர்ந்து படித்தாள் கமலம். கணவன் போன துயரம், பிள்ளையைப் பிரிந்த கஷ்டம், படிப்பில் ஓர் அட்சரம் தலையில் ஏறினால் தானே? அந்த வருடம் பெயில். அதற்கு மேலும் படிப்பில் பணம் செலவழிப்பது வீண் என்று கைவிடப்பட்டது. மறுபடியும் அதே பிரச்னை. ஒரு வருடம் தகப்பனாருடன் இருந்தாள். உலகத்தில் எந்த விஷயத்தைத் தான் வெகு காலத்துக்கு மறைத்து வைக்க முடியும்? கமலத்தின் வாழ்க்கையும் கொஞ்சம் கொஞ்சமாகப் பகிரங்கப்பட்டது. கால ஓட்டத்தில் துயரத்தின் கொடுமை மழுங்கி வாழ்க்கைப் போராட்டத்தை எதிர்த்துச் சமாளிக்க மன உறுதி ஏற்பட்டு விடுகிறது. நரேஷுக்கு ஐந்து வயதாகும் வரை தகப்பனாருடனேயே இருந்தாள். அவன் படிப்புக்கென்று மறுபடியும் மதராஸில் ஓர் ஒண்டிக் குடித்தனத்தைத் தொடங்கினாள்.

இருபத்திரண்டு வருடங்கள் கழித்து ரகுநாத்தின் குமாரன் நரேஷ் பெட்டி படுக்கையுடன் வட இந்தியாவுக்குக் கிளம்பினான். தகப்பன் சொல்லிக் கொள்ளவில்லை. மனைவியைத் தனியாய் விட்டான். தனயன் சொல்லிக்கொண்டு தாயைத் தனியாய் விட்டுப் போகிறான். இந்த உள்ளப் பக்குவத்துடன் தான் கமலம் பிள்ளைக்கு விடை கொடுத்தனுப்ப வாசலில் வந்து நின்றாள்.

''அம்மா! நான் போய் உன்னை அழைத்துப் போக வசதியான வீடு ஏற்பாடு செய்கிறேன். பிரசாத் தினமும் வந்து உனக்குத் தேவையான உதவி செய்வான். ஒரு மாதத்துக்குள் உன்னை அழைத்துப் போக வழி செய்வேன்'' என்று ஊக்கம் அளிக்கும் வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டே கிளம்பினான்.

டாக்ஸி கிளம்பி விட்டது. கமலம் வீட்டினுள் சென்று முகத்தில் கையைப் பொத்திக் கொண்டு, ''நரேஷ், உன் அப்பாவைப் போல் நிர்க்கதியாய் விட்டுவிடாதேடா'' என்று வாய் விட்டு அழுதாள். அவள் துயரத்தைக் கேட்டன வீட்டுச் சுவர்கள்.

''மாமி!'' என்ற குரல் கேட்டு வாசல்புறம் வந்தாள். ''நரேஷுக்குச் சௌக்கியமாய் இடம் கிடைத்தது ரயிலில். வரட்டுமா?'' என்று தகவல் சொல்லிவிட்டு பிரசாத் போய்விட்டான்.

இரண்டு வாரங்களுக்குள் நரேஷ் அவன் வாக்கைக் காப்பாற்றினான். வீட்டுச் சாமான்களைக் கோணிப் பையில் கட்டித் தன் விலாசத்துக்கு அனுப்பி வைக்கும்படி பிரசாத்துக்குக் கடிதம் எழுதியிருந்தான். கமலத்துக்கு ஒரு கடிதம் எழுதி, அவளை மதராஸில் ஏறி வரச் சொல்லி, ரயில் மாற வேண்டிய ஸ்டேஷனில் தான் வந்து கமலத்தைச் சந்தித்து அழைத்துச் செல்வதாக எழுதி யிருந்தான். அவன் சொன்ன தினம் கமலம் மதராஸை விட்டுப் பிள்ளையின் இருப்பிடத்துக்குக் கிளம்பினாள்.

மாற வேண்டிய ஸ்டேஷனுக்கு ரயில் வந்தபொழுது இரவு இரண்டு மணி. நரேஷ்

வந்து சந்தித்துப் பெட்டி, படுக்கையை வாங்கிக்கொண்டு, பக்கத்தில் இருந்த போர்ட்டரிடம் கொடுத்து அங்கிருந்து பிணைக்கப்படும் மற்றொரு ரயில் பெட்டியில் கொண்டு வைக்கும்படி சொன்னான். ரயில் பெட்டியில் விரிப்பதற்காகப் போர்ட்டர் முதலில் படுக்கையை எடுத்துக் கொண்டு ஓடினான். கமலத்தைப் பெட்டியுடன் பிளாட்பாரத்தில் உட்கார்த்தி வைத்துவிட்டுப் போர்ட்டர் பின்னால் சென்றான். ஒரு பிரயாணியுடன் போர்ட்டர் சர்ச்சை செய்து கொண்டிருந்தான். நரேஷ் ஜன்னல் வழியாய்ப் பெட்டியினுள் குதித்துப் படுக்கையை விரித்து விட்டான். வெளியில் நின்று கொண்டிருந்த பிரயாணிக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. நாற்பத்தைந்து வயதைத் தாண்டித் தொப்பை விழுந்திருந்ததால் ஜன்னல் வழியாக நுழைய முடியாத நிலை. நல்ல இடத்தை நரேஷ் பிடித்துக் கொண்டு விட்டானே என்ற பொறாமை. நரேஷுக்கும் அவனுக்கும் வாய் வார்த்தை வலுத்தது. அந்தப் பிரயாணியின் கோபத்தைக் கிளறிவிடப் பக்கத்தில் நின்றுகொண்டிருந்த வங்காள மாது ஏதோ சொல்லிக் கொண்டேயிருந்தாள். மூன்று குழந்தைகள் கண்களைக் கசக்கிக் கொண்டு அவள் விரல்களையும், அந்த மாதின் புடவைத் தலைப்பையும் பிடித்து இழுத்தன.

"போர்ட்டர்! நீ போய் அங்கே உட்கார்ந்திருக்கும் அம்மாவை அழைத்துக் கொண்டு வா" என்று போர்ட்டரை அனுப்பி வைத்தான் நரேஷ்.

வெளியில் நின்று கொண்டிருந்த பிரயாணி ஜன்னல் வழியாய் நரேஷ் விரித்திருந்த படுக்கையின் மேல் ஒரு சிறு பெட்டியை வைத்தான்.

"படுக்கையின் மேல் வைக்காதீர்கள். வேறு இடம் பாருங்கள்" என்றான் நரேஷ்.

"படுக்கையை விரித்து விட்டால் பெட்டியே உனக்குச் சொந்தமோ? சும்மா இடடா" என்று மேலும் ஒரு கூடையை வைக்கத் தூக்கினான்.

"சொல்லுவது காதில் விழவில்லை? அதை வைத்தால் தூக்கி வெளியில் எறிந்துவிடுவேன்" என்று நரேஷ் எச்சரித்தான். அந்த ஸ்டேஷனிலிருந்து பிணைக்கப்பட வேண்டிய பெட்டியானதால் உள்ளே விளக்கு ஏற்றப்படவில்லை.

"உன் வேலையைக் கவனித்துக் கொண்டு போடா. சாமானில் கையை வைத்தால்..." என்ன செய்வான் என்று சொல்லாமல் இருந்தான் அந்த வயது வந்தவன்.

"உன் மிரட்டலுக்குப் பயப்படுகிறவன் இல்லை அப்பனே..." என்று கூடையை எடுத்துப் பிளாட்பாரத்தில் போட்டான் நரேஷ்.

போர்ட்டர் முன்னே வரக் கமலம் பின் தொடர்ந்தாள். அப்பொழுதுதான் அந்தப் பிரயாணி நரேஷின் ஷர்ட் காலரைப் பிடித்து உலுக்கினான். நரேஷுக்கு ரோசம் பிறந்தது. "மேலே கையை வைக்காதே, எடுடா" என்று இரைந்து கொண்டே அவன் கையைப் பிடித்துத் தள்ளினான்.



"ஏற்கெனவே எனக்குக் காது அடைச்சாப் போல இருக்கு. இப்ப நீங்கள் 'ஹியரிங் எய்டை' வேறு காதுக்குள்ளே அடைச்சுப்பிட்டீங்களே, டாக்டர்!"

"நரேஷ்! நரேஷ்!" என்று கமலம் வீறிட்டாள்.

அந்தப் பிரயாணி கையை ஓங்கிக் கொண்டே "பாஸ்டர்ட்" என்ற ஆங்கிலத்தில் நீசப் பதத்தை நரேஷிடம் வீசினான்.

"யாரடா பாஸ்டர்ட்?" என்று பதிலுக்கு ஆங்கிலத்தில் கேட்டுக் கொண்டு ஜன்னலிலிருந்து குதித்து அந்தப் பிரயாணியின் கன்னத்தில் "பளீர்" என்று ஓர் அறை விட்டான். "நரேஷ்! நரேஷ்!" என்று கூறியபடியே கமலம் அவன் கையைப் பிடித்து நிறுத்தினாள்.

அந்தப் பிரயாணி எதிரில் நின்ற கமலத்தைப் பார்த்தான். நரேஷ் சட்டையின் கையைச் சுருட்டிக் கொண்டே "நீ பேசாமல் இரும்மா. பாஸ்டர்டாமே?" என்று சீறிக்கொண்டு நின்றான்.

அறை வாங்கிய பிரயாணி ஒரு நிமிடம்கூட அங்கே நிற்கவில்லை. ரயில் பெட்டியினுள் வைத்திருந்த சாமானை ஒரு கையில் தூக்கிக் கொண்டான். மற்றச் சாமான்களையும் மற்றொரு கையில் சுமந்து மற்றொரு பெட்டியைப் பார்க்கக் கிளம்பி விட்டான். அந்த வங்காள மாது நரேஷைத் திட்டிக்கொண்டே பின்தொடர்ந்தாள். "பேசாமல் வா" என்று அவளை அதட்டினான் அப் பிரயாணி. ரயில் பெட்டியின் விளக்கு அப்பொழுதுதான் போடப்பட்டுப் பிரகாசமாய் எரிந்தது. திரும்பிப் போன பிரயாணியைக் கமலம் உற்றுக் கவனித்தாள்.

"பெட்டியினுள் ஏறிக்கொள், அம்மா! இவன் இல்லை, இவன் அப்பன் வந்தாலும் என்னிடம் வாலாட்ட முடியாது" என்று வீறாப்புப் பேசினான் நரேஷ்.

'இவனேதாண்டா உன் அப்பன், நரேஷ்!' என்று கமலத்தின் உள்ளம் அலறகூவத் துடித்தது. வாயில் வார்த்தைகள் சிக்கி, வெளி வராமலே மடிந்து போயின.




## ராஜாஜி மலர்
## அரசாங்க ஆமை
## முரண்பாடு
## தண்ணீர் தேவை
## விலைவாசி குறைய வழி

ராஜாஜி மலரைப் பார்த்து மிகவும் மகிழ்ச்சி அடைந்தேன். மலருக்குச் சிகரமாக விளங்கும் திரு ம. பொ. சி., மவுண்ட் பாட்டன், டாக்டர் ஸைமன்ஸ் ஆகிய மூவரின் சிறப்பான கட்டுரைகளிலிருந்து அவர்களுக்கு ராஜாஜியினிடம் உள்ள ஆழ்ந்த அன்பும் தூய்மையான பக்தி கலந்த நட்பும் அளவிடற்கரியது என்பது நன்கு புலப்படுகிறது.

ராஜாஜியைத் தலையங்கத்தில் 'பீஷ்ம பிதாமஹ'ருக்கு ஒப்பிட்டு எழுதியிருக்கிறீர்கள். அதைப் போலவே, ராஜாஜியை, ராஜரிஷி என்ற பெருமை பெற்ற ஒரே அரசரான ஜனகருக்கும் ஒப்பிடலாம். ஜனகர், அரச பதவியில் ஆசை வைக்காமலும் அதே சமயம் கடமையில் தவறாமல் ராஜ காரியங்கள் செவ்வனே நன்கு நடைபெறுமாறு பார்த்துக் கொண்டும் தம்முடைய பெரும் பகுதியைத் தத்துவ வேதாந்த விசாரணைகளிலேயே செலவிட்டுக் கொண்டும் இருந்தார். அதைப் போலவே, நம் ராஜாஜியும் 'கவர்னர் ஜெனரல்' போன்ற பெரும் பதவிகளில் இருந்தும்கூட அதைப் பற்றின பெருமையோ, நினைப்போ இல்லாமல் தம்முடைய கடமையிலேயே கண்ணும் கருத்துமாக இருந்து வந்திருக்கிறார். காங்கிரஸ் அரசாங்கத்தை இந்தத் தள்ளாத வயதிலும், பகிரங்கமாகக் கண்டித்துத் தீவிரமாகப் போராடி வருகிறார். இந்தப் போராட்டத்துக்கு, நமது மக்கள் கொடுக்கும் முழு மூச்சான ஆதரவும், ஊக்கமும்தான் ராஜாஜிக்குத் தள்ளாத நிலைமையிலும் இளமையையும் சக்தியையும் கொடுக்கக் கூடியவை.

சென்னை — 15
9—12—66 சே. ராகவன்

சென்னையிலே டவுன் பஸ் அரசாங்க சர்வீஸாக நடந்து கொண்டிருக்கிறது. அதனால் லாபம் இல்லை. நஷ்டம் உண்டாகிறது. அதே சமயம் திருச்சி, மதுரை ஆகிய இடங்களில் தனியார் துறையில் பஸ் போக்குவரத்து நடைபெறுகிறது. அதனால் அரசாங்கத்துக்கு வரியின் மூலமாக நல்ல வருமானம் கிடைக்கிறது. அதோடு திருச்சி, மதுரை முதலிய நகரங்களில் பஸ்ஸுக்கு அதிக நேரம் காத்திருக்க வேண்டியதில்லை. பஸ் பிரயாணிகள் கண்ணியமாயும் நடத்தப்படுகிறார்கள். அநாவசியமான இனங்களில், துறைகளில் அரசாங்கம் நுழைந்தால் ஆமை நுழைந்த இடம் போல அந்தத் துறை உருப்படாது.

வேலூர் சூரியநாராயணன்.

கல்கி 18—12—66-ல் 'வெண்ணிலவுப் பெண்ணரசி'க்காக ஓவியர் 'வினு' தீட்டியுள்ள சித்திரத்தைப் பார்த்தேன். கதையின் அமைப்புக்கும் சித்திரத்துக்கும் முரண்பாடு இருந்தது. மலர்வேணியன், நீலவல்லியின் தம்பி. ஆனால் படத்திலோ மலர்வேணிய மன்னர் சுமார் ஐம்பது வயது மதிக்கத்தக்க தோற்றமுடையவராய் மயிலாசனத்தில் வீற்றிருக்கிறார்! கதையின் சம்பவங்களை வாசகர்கள் மனத்தில் நிலைநிறுத்த சித்திரமும் துணை புரிய வேண்டும்.

திருச்சி
18—12—66 கமலா ராஜகோபாலன்

**வயதுத் தோற்றத்தில் ஏற்பட்ட தவறுதலைச் சுட்டிக் காட்டியதற்கு நன்றி. - ஆசிரியர்.**

கோயமுத்தூர் டவுன், 4வது வார்டு 'ராமசாமி நாயுடு லே அவுட்'டில் சுமார் இரண்டு வருடங்களுக்கு முன் கோவை நகரசபையாரால் குடிதண்ணீருக்காக ஒரு போரிங் கிணறு தோண்டப்பட்டு, அதில் சுமார் 45 அடி தண்ணீரும் வந்தது. பிறகு பூமி மட்டத்தில் ஒரு குழாயை (சுமார் 4 அங்குல விட்டம் உள்ளது) மட்டும் பொருத்தி மேற்கொண்டு எந்த வேலையும் செய்யாமல் சென்று விட்டனர். நகரசபைக்கு நாங்கள் சென்று பல முறை அதிகாரிகளிடம் கெஞ்சிக் கேட்டுக் கொண்டும் இதுவரை மேற்படி போரிங்கிலிருந்து பம்பு செட் வைத்துத் தண்ணீர்த் தொட்டி கட்டி மக்களுக்குத் தண்ணீர் விநியோகம் செய்ய எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை.

மக்கள் வரிப் பணத்திலிருந்து சுமார் இரண்டாயிரம் ரூபாய் வரை நகரசபை செலவு செய்தும், அது மக்களுக்கு உபயோகப்படாமல், குடி தண்ணீருக்கு ஏங்கித் தவிக்கும் நிலை ஏற்பட்டுள்ளது.

கோவை,
5—12—66 ஜி. பாலகிருஷ்ணன்

விலைவாசி ஏற்றத்துக்குக் காரணமே உணவுக் கட்டுப்பாடுதான் என்பது கண்கண்ட உண்மை. உணவு கண்ட்ரோலை நீக்கினால் தான் விலைவாசிகள் குறையும். எடுத்த கொள்கையை விட்டுக் கொடுத்தால் கௌரவக் குறைவு என்பதற்காக; மக்கள் கஷ்டப்படத்தான் வேண்டுமா? பணம் வாங்கிக் கொண்டு வோட்டுப் போடும் மக்கள் இருக்கும் வரை நாம் எதையும் செய்யலாம் என்று எண்ணுவதை மக்கள் ஆட்சி என்று எங்ஙனம் கூற முடியும்?

கம்பம் வி. நடராஜன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam

ஸ்வஸ்திக்

## பர்ஃப்யூம்டு காஸ்டர் ஆயில்

படியாத கேசத்தையும் படியச் செய்கிறது—நாள் முழுவதும் மழமழப்பாய் வைக்கிறது



கேர்த்தியாக வாரிவிடப்பட்ட கவர்ச்சி மிக்க கேசம்... கண்ணைக் கவரும் பளபளப்புள்ள கரும் கேசம்—நாள் முழுவதும் மழமழப்புடன் திகழச் செய்வது ஸ்வஸ்திக் பர்ஃப்யூம்டு காஸ்டர் ஆயில்.

Shilpi SOH 24 Tam.

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட்., பம்பாய

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 35 சதம்
தபால் செலவு தனி

அ..ப்..பா!
எத்தனை கடும்
ஜலதோஷம்!

நீங்கள் அவனுக்கு மிருதுவாய் வேபோரப்பைத் தடவும் போதே சூடு பிறந்து, இதமும் ஏற்படுகிறது....உங்கள் குழந்தை வசதியாய் மூச்சுவிட முடிகிறது. இரவு முழுதும் நல்ல தூக்கம் அவனுக்கு

வசதிக்கு உங்களைத்தான் நம்புகிறான் குழந்தை. ஜலதோஷத்தினால் அவன் பாதிக்கப்படும்போது விக்ஸ் வேபோரப்பைத் தடவினால் போதும்.

உங்கள் அன்புக் கரங்கள் அவனுடைய மார்பு, தொண்டை, முதுகு, மூக்கின் சுற்றுப்புறம் ஆகியவற்றின்மீது விக்ஸ் வேபோரப்பைத் தடவுகின்றன. மூக்கடைப்பு கரைவதைக் கண்முன்னால் பார்க்கலாம். மீண்டும் அவன் செளகரியமாய் சுவாசிக்கிறான். காரணம்: ஜலதோஷத்தினால் பாதிக்கப்பட்ட பகுதிகளை இதமான, ஆவி வடிவிலுள்ள மருந்துகள் ஏழு வினாடிகளில் அடைகின்றன. இனி குழந்தையைப் படுக்க விடுங்கள். குழந்தை நன்றாகத் தூங்கும் பொழுது, இரவு முழுவதும் வேபோரப் தன் பணியைத் தொடர்ந்து செய்கிறது. விடிவதற்குள் ஜலதோஷம் அநேகமாய் நீங்கி, உங்கள் பிரியத்துக்குப் பாத்திரமான விளையாட்டுப் பிள்ளை உற்சாகத்துடனும், உடல் நலமுடனும் விழித்தெழுகிறான்.




**விக்ஸ் வேபோரப்** ஜலதோஷத்துக்கு இன்றிரவே தடவுங்கள்